லாங்மன்ஸ்

# செய்யுள் வாசகத் திரட்டு

## முதற் பாகம்



டாக்டர் உ. வே. சாமிநாதையர்
&
வித்துவான் R. விசுவநாதையர்





லாங்மன்ஸ் க்ரீன் அண்ட் கம்பனி லிமிடெட்

# செய்யுள் வாசகத் திரட்டு

## முதற் பாகம்

மகாமகோபாத்தியாய டாக்டர்
உ. வே. சாமிநாதையர் அவர்களாலும்
சென்னை இராஜதானிக் கலாசாலைத் தமிழாசிரியர்
வித்துவான் R. விசுவநாதையர் B.A.,
அவர்களாலும்
தொகுக்கப்பெற்றது



லாங்மன்ஸ் க்ரீன் அண்டு கம்பனி லிமிடெட்
36 A, மௌன்ட் ரோட், மதராஸ்
1937

# முகவுரை

உயர்தர பாடசாலை மாணவர்கள் நாட்டுமொழிகளிற் படிக்கவேண்டிய பாடபுத்தகங்கள் இன்னவாறு அமைந்திருக்க வேண்டுமென்று கல்வியதிகாரிகள் ஒரு திட்டத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள்; காலத்துக்கேற்றபடி பல மாறுதல்களும் உண்டாகின்றன. இவற்றை மனத்திற்கொண்டு மாணாக்கர்களின் தகுதிக்கு ஏற்ற முறையில் உயர்தர வகுப்புக்களுக்காகச் செய்யுள் வாசகத் திரட்டு என்னும் பெயருள்ள இப்புத்தகம் தொகுக்கப்பெற்றுள்ளது. தமிழ்மொழியில் இயன்றவரை நல்ல பழக்கமும், அன்பும் இதனைப் படிப்பதால் மாணாக்கர்களுக்கு உண்டாகுமென்று நம்புகிறோம்.

பலவகையான செய்யுள் நூல்களிலிருந்து ஏறக்குறைய 200 செய்யுட்களும், சரித்திரம், நீதிகள், கல்வி, கைத்தொழில் முதலியவற்றைத் தெரிவிக்கும் வசனபாகங்களும் இவ்வகுப்புக்கேற்றபடி அமைக்கப்பெற்றுள்ளன. அனுபந்தமாக எழுதப்பெற்ற செய்யுள் நூல்களைப்பற்றிய வரலாறுகளும், செய்யுட்களின் இன்றியமையாக் குறிப்புரைகளும், வினாக்களும் படிப்பவர்களுக்கு உபயோகமாக இருக்கும்.

செய்யுட்கள் யாவுமே மனப்பாடம் செய்தற்கு உரியவை. ஆயினும், மாணவர்களின் இயல்புக்கும் அவர்களுக்குக் கிடைக்கும் காலத்திற்கும் ஏற்றபடி ஆசிரியர்கள் முக்கியமான செய்யுட்களைத் தேர்ந்து மனனம் பண்ணச் செய்தல் நலமாகும். செய்யுட்களை உரிய சந்தத்துடன் படிப்பது படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் மிக்க இன்பந்தரும்.

வே. ச.

ஆர். வி.



# இப்புத்தகத்திலடங்கியவை

## செய்யுட் பகுதி

# உரைநடைப் பகுதி



# அனுபந்தம்

# செய்யுட் பகுதி

## I

# கடவுள் வாழ்த்து

### முழுமுதற் கடவுள்

(குறள் வெண்பா)

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(திருக்குறள்) (1)

(கலிவிருத்தம்)

2. உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே.

(கம்பராமாயணம்) (2)

### நாமகள்

(குறள் வெண் செந்துறை)

3. தவளத் தாமரைத் தாதார் கோயில்
அவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.

(பழம்பாடல்) (3)

(நேரிசை வெண்பா)

4. படிக நிறமும் பவளச்செவ் வாயும்
கடிகமழ்செந் தாமரைபோற் கையும்—துடியிடையும்
அல்லும் பகலு மனவரத முந்துதித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி.

(கம்பர் வாக்கு) (4)

### திங்கள்

(சிந்தியல் வேண்பா)

5. (*a*) திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்;

### ஞாயிறு

(*b*) ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்;

### மேகம்

(*c*) மாமழை போற்றுது மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்.

(சிலப்பதிகாரம்) (5)

### தமிழ்த் தேய்வம்

(ஆசிரிய விருத்தம்)

6. மறைமுதற் கிளந்த வாயான்
மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி
யிலக்கணஞ் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாஷை
யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
யுண்ணினைந் தேத்தல் செய்வாம்.

(சீகாளத்திப் புராணம்) (6)

# II

# சங்க நூல்கள்

## 1. புறநானூறு

### தாய் முதலியோர் கடமை

(அகவல்)

7. ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே;
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே;
வேல்வடித் துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

(பொன்முடியார்) (1)

### மன்னனது உயர்வு

8. நெல்லு முயிரன்றே, நீரு முயிரன்றே;
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்;
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.

(மோசிகீரனார்) (2)

### மக்கட்பேறு

9. படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்ப்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே.

(பாண்டியன் அறிவுடைநம்பி) (3)

### கல்விச் சிறப்பு

10. உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே;

பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்;
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.

(பாண்டியன் நெடுஞ்செழியன்) (4)

## 2. திருக்குறள்

(குறள் வெண்பா)

கல்வி கற்கும் முறை

11. கற்க கசடறக் கற்பவை; கற்றபின்
நிற்க வதற்குத் தக. (1)

கல்வியின் பயன்

12. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு? (2)

நட்பின் இலக்கணம்

13. முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. (3)

14. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு. (4)

நன்றி மறவாமையும் நன்றல்ல மறத்தலும்

15. நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. (5)

உணவு

16. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு. (6)

முயற்சியின் பயன்

17. முயற்சி திருவினை யாக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (7)

அறம்

18. மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்;
ஆகுல நீர பிற. (8)

நா அடக்கம்

19. யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (9)

20. தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு. (10)

மகன் கடமை

21. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லென்னும் சொல். (11)

தாயின் உவகை

22. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய். (12)

## 3. இனியவை நாற்பது

(வெண்பா)

23. மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே;
தான மழியாமைத் தானடங்கி வாழ்வினிதே;
ஊனமொன் றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது. (1)

24. கற்றார்முற் கல்வி யுரைத்தன் மிகவினிதே;
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்னினிதே;
எட்டுணை யானு மிரவாது தானீதல்
எத்துணையு மாற்ற வினிது. (2)

25. வருவா யறிந்து வழங்க லினிதே;
ஒருவர்பங் காகாத வூக்க மினிதே;
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்த லினிது. (3)

26. நன்றிப் பயன்றூக்கி வாழ்த னனியினிதே;
மன்றக் கொடும்பா டுரையாத மாண்பினிதே;
அன்றறிவா ரியாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியி னன்கினிய தில். (4)

## 4. இன்னு நாற்பது

(வேண்பா)

27. கொடுங்கோன் மறமன்னர் கீழ்வாழ்த லின்னு;
நெடுநீர் புணையின்றி நீந்துத லின்னு;
கடுமொழி யாளர் தொடர்பின்னு; இன்னு
தடுமாறி வாழ்த லுயிர்க்கு. (1)

28. ஆன்றவிந்த சான்றேருட் பேதை புகலின்னு;
மான்றிருண்ட போழ்தின் வழங்கல் பெரிதின்னு;
நோன்றவிந்து வாழாதார் நோன்பின்னு; ஆங்கின்னு
ஈன்றுளை யோம்பா விடல். (2)

29. பெரியாரோ டியாத்த தொடர்விடுத லின்னு;
அரியவை செய்து மெனவுரைத்த லின்னு;
பரியார்க்குத் தாமுற்ற கூற்றின்னு; இன்னு
பெரியார்க்குத் தீய செயல். (3)

30. தன்னைத்தான் போற்று தொழுகுத னன்கின்னு;
முன்னை யுரையார் புறமொழிக் கூற்றின்னு;
நன்மை யிலாளர் தொடர்பின்னு; ஆங்கின்னு
தொன்மை யுடையார் கெடல். (4)

## 5. நாலடியார்

(வேண்பா)

ஈகை

31. கடிப்பிகு கண்முரசங் காதத்தோர் கேட்பர்;
இடித்து முழக்கியதோர் யோசனையோர் கேட்பர்;
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல். (1)

கல்வியின் பெருமை

32. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோல்
மம்ம ரறுக்கு மருந்து. (2)

நல்லினஞ் சேர்தல்

33. ஊரங் கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்காற்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்—ஒரும்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து. (3)

செய்யத் தகாதன

34. தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க; தன்னுடம்பின்
ஊன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க;-வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல். (4)

III

# காவியங்கள்

## 1. சிலப்பதிகாரம்

### (i) கானல் வரி

[காவேரிச் சிறப்பு]

(இசைப் பாட்டுக்கள்)

35. உழவ ரோதை மதகோதை உடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி!
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி! (1

36. மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி!
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்த வெல்லா நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன் வாழி காவேரி! (2)

37. வாழி யவன்றன் வளநாடு மகவா வளர்க்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி!
ஊழி யுய்க்கும் பேருதவி ஒழியா தொழுக லுயிரோம்பும்
ஆழி யாள்வான் பகல்வெய்யோன் அருளே வாழி காவேரி! (3)

## (ii) வாழ்த்துக்காதை

[அம்மானை வரி]

(௸ வேறு)

38. வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த வுரவோன்யா ரம்மானை?
ஓங்கரணங் காத்த வுரவோ னுயர்விசும்பில்
தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை;
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை. (4)

39. புறவு நிறைபுக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யா ரம்மானை?
குறைவி லுடம்பரிந்த கொற்றவன் வந்த
கறவை முறைசெய்த காவலன்கா ணம்மானை;
காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை. (5)

40. கடவரைக ளோரெட்டுங் கண்ணிமையா காண
வடவரைமேல் வாள்வேங்கை யொற்றினன்யா ரம்மானை?
வடவரைமேல் வாள்வேங்கை யொற்றினன்றிக் கெட்டும்
குடைநிழலிற் கொண்டளித்த கொற்றவன்கா ணம்மானை;
கொற்றவன்றன் பூம்புகார் பாடேலோ ரம்மானை. (6)

## (iii) வரந்தரு காதை

[அறவுரை]

(அகவல்)

41. தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்!
பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்;
தெய்வந் தெளிமின்; தெளிந்தோர்ப் பேணுமின்;
பொய்யுரை யஞ்சுமின்; புறஞ்சொற் போற்றுமின்;
ஊனூண் துறமின்; உயிர்க்கொலை நீங்குமின்;
தானஞ் செய்ம்மின்; தவம்பல தாங்குமின்;
செய்ந்நன்றி கொல்லன்மின்; தீநட் பிகழ்மின்;
பொய்க்கரி போகன்மின்; பொருண்மொழி நீங்கன்மின்;
அறவோ ரவைக்கள மகலா தணுகுமின்;
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்;
பிறர்மனை யஞ்சுமின்; பிழையுயி ரோம்புமின்;
அறமனை காமின்; அல்லவை கடிமின்;
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்;
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா;
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்;
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென். (7)

# 2. சீவக சிந்தாமணி

## கல்விப் பயன்

(ஆசிரிய விருத்தம்)

42. கைப்பொருள் கொடுத்துங் கற்றல்;
கற்றபின் கண்ணு மாகும்;
மெய்ப்பொருள் விளக்கும்; நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையு மாகும்;

பொய்ப்பொருள் பிறகள்; பொன்னும்;
துணைவியாம்; புகழு மாக்கும்;
இப்பொரு ளெய்தி நின்றீ
ரிரங்குவ தென்னை யென்றான். (1)

கூடா நட்பு

43. தொழுதகங் கையி னுள்ளும்
துறுமுடி யகத்துஞ் சோர
அழுதகண் ணீரி னுள்ளு
மணிகலத் தகத்து மாய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும்
படையுட னொடுங்கும்; பற்று
தொழிகயார் கண்ணுந் தேற்றம்
தெளிகுற்றார் விளிகுற் றாரே. (2)

அரசர்க்கு உரிய உபாயங்கள்

(கலிவிருத்தம்)

44. ஒற்றர் தங்களை யொற்றரி னய்தலும்
கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்
சுற்றஞ் சூழ்ந்து பெருக்கலும் சூதரோ
கொற்றங் கொள்குறிக் கொற்றவர்க் கென்பவே. (3)

பொருளின் பயன்

45. வென்றி யாக்கலும் மேதக வாக்கலும்
அன்றி யுங்கல்வி யோடழ காக்கலும்
குன்றி னார்தமைக் குன்றென வாக்கலும்
பொன்றுஞ் சாகத்தி னய்பொருள் செய்யுமே. (4)

46. பொன்னி னாகும் பொருபடை; அப்படை
தன்னி னாகுந் தரணி; தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொருள்; அப்பொருள்
துன்னுங் காலைத்துன் னாதன வில்லையே. (5)

IV

# திருமுறைகள்

## 1. தேவாரம்

[இசைப்பாட்டு]

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்

(திருவையாறு)

பண் – மேகராகக் குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

47. புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைமே லுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வா னமருங் கோயில்
வலம்வந்த மடவார்க ணடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவை யாறே. (1)

திருநாவுக்கரசர்

[தனித்திருத்தாண்டகம்]

(வேறு)

48. அப்பனீ யம்மைநீ யையனுநீ
யன்புடைய மாமனு மாமியுநீ
ஒப்புடைய மாதரு மொண்பொருளுநீ
யொருகுலமுஞ் சுற்றமு மோரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் னெஞ்சந் துரப்பிப்பாய்நீ
இப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத்துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே. (2)

சுந்தரமூர்த்தி சுவாமிகள்

[திருவாரூர்]

(வேறு)

பண் - தக்கேசி

49. பொன்னு மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை யென்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி வொண்ணு
வெம்மா னைஎளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
யாரு ரானை மறக்கலு மாமே. (3)

திருச்சிற்றம்பலம்

## 2. திருவாசகம்

(ஆசிரிய விருத்தம்)

50. தந்தது முன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்?
அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன்;
யாதுநீ பெற்றதொன் றென்பால்?
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்!
திருப்பெருந் துறையுறை சிவனே!
எந்தையே யீசா வுடலிடங் கொண்டாய்!
யானிதற் கிலனோர்கைம் மாறே. (1)

(ஷ வேறு)

51. அன்றே யென்ற னாவியு
முடலு முடைமை யெல்லாமும்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ?
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ?
வெண்டோண் முக்க ணெம்மானே!
நன்றே செய்வாய், பிழைசெய்வாய்;
நானோ விதற்கு நாயகமே? (2)

V

# திவ்யப் பிரபந்தம்

## திருமாலை

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

52. பச்சைமா மலைபோன் மேனிப்
பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா வமர ரேறே
யாயர்தங் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போ
யிந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டே
னரங்கமா நகரு ளானே. (1)

53. வேதநூற் பிராயம் நூறு
மனிதர்தாம் புகுவ ரேனும்
பாதியு முறங்கிப் போகும்
நின்றதிற் பதினை யாண்டு
பேதைபா லகன தாகும்
பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டே
னரங்கமா நகரு ளானே. (2)

54. மெய்யர்க்கே மெய்ய னாகும்
விதியிலா வென்னைப் போலப்
பொய்யர்க்கே பொய்ய னாகும்
புட்கொடி யுடைய கோமான்
உய்யப்போ முணர்வி னார்கட்
கொருவனென் றுணர்ந்த பின்னை
ஐயப்பா டறுத்துத் தோன்று
மழகனூ ரரங்க மன்றே. (3)

55. குடதிசை முடியை வைத்துக்
குணதிசைப் பாத நீட்டி
வடதிசைப் பின்பு காட்டித்
தென்றிசை யிலங்கை நோக்கிக்
கடனிறக் கடவு ளெந்தை
யரவணைத் துயிலு மாகண்
டுடலெனக் குருகு மாலோ
வென்செய்கே னுலகத் தீரே. (4)

56. கங்கையிற் புனித மாய
காவிரி நடுவு பாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும்
பூம்பொழி லரங்கந் தன்னுள்
எங்கள்மா லிறைவ னீசன்
கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்கனம் மறந்து வாழ்கே
னேழையே னேழை யேனே. (5)

57. குரங்குகள் மலையை நூக்கக்
குளித்துத்தாம் புரண்டிட் டோடித்
தரங்கநீ ரடைக்க லுற்ற
சலமிலா வணிலும் போலேன்
மரங்கள்போல் வலிய நெஞ்ச
வஞ்சனேன் நெஞ்சு தன்னால்
அரங்கனார்க் காட்செய் யாதே
யளியத்தே னயர்க்கின் றேனே. (6)

58. மனத்திலோர் தூய்மை யில்லை
வாயிலோ ரின்சொ லில்லை
சினத்தினாற் செற்றம் நோக்கித்
தீவிளி விளிவன் வாளா

புனத்துழாய் மாலை யானே
　　பொன்னிசூழ் திருவ ரங்கா
எனக்கினிக் கதியென் சொல்லாய்
　　என்னையா ளுடைய கோவே. (7)

59. ஆர்த்துவண் டலம்புஞ் சோலை
　　யணிதிரு வரங்கந் தன்னுள்
கார்த்திர ளனைய மேனிக்
　　கண்ணனே யுன்னைக் காணும்
மார்க்கமொன் றறிய மாட்டா
　　மனிசரிற் றுரிச னாய
மூர்க்கனேன் வந்து நின்றேன்
　　மூர்க்கனேன் மூர்க்க னேனே. (8)

60. அமரவோ ரங்க மாறும்
　　வேதமோர் நான்கு மோதித்
தமர்களிற் றலைவ ராய
　　சாதியந் தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகில்
　　நொடிப்பதோ ரளவி லாங்கே
அவர்கள்தாம் புலையர் போலு
　　மரங்கமா நகரு ளானே. (9)

VI

# இதிகாச புராணங்கள்

## 1. கம்பராமாயணம்

அவையடக்கம்

(கலிவிருத்தம்)

61. ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ. (1)

62. முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவென்:
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ? (2)

63. அறையு மாடரங் கும்மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ?
இறையு ஞானமி லாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு முனிவரோ? (3)

வயல்வளம்

(ஆசிரிய விருத்தம்)

64. வரம்பெலா முத்தம்; தத்து
மடையெலாம் பணிலம்; மாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன்; மேதிக்
குழியெலாங் கழுநீர்க் கொள்ளை;
பரம்பெலாம் பவளம்; சாவிப்
பரப்பெலா மன்னம்; பாங்கர்க்
கரம்பெலாஞ் செந்தேன்; சந்தக்
காவெலாம் களிவண் டீட்டம். (4)

பலவித ஒலி

65. ஆறுபா யரவ மள்ளர்
ஆலைபா யமலை யாலைச்
சாறுபா யோசை வேலைச்
சங்குவாய் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரில்
எருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகித் தம்மின்
மயங்குமா மருத வேலி. (5)

சரயு நதி

66. கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலும்
இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி லொன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும்
பொருளும்போற் பரந்த தன்றே. (6)

67. தாதுகு சோலை தோறுஞ்
சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
புதுமணற் றடங்க டோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு
முயிரென வுலாய தன்றே. (7)

மருத நிலவளம்

68. தண்டலை மயில்க ளாடத்
தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட
மருதம்வீற் றிருக்கு மாதோ. (8)

69. நீரிடை யுறங்குஞ் சங்கம்;
நிழலிடை யுறங்கு மேதி;
தாரிடை யுறங்கும் வண்டு;
தாமரை யுறங்குஞ் செய்யாள்;

தூரிடை யுறங்கு மாமை;
துறையிடை யுறங்கு மிப்பி;
போரிடை யுறங்கு மன்னம்;
பொழிலிடை யுறங்குந் தோகை. (9)

70. ஆலைவாய்க் கரும்பின் றேனும்
அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவீழ் கனியின் றேனும்
தொடையிழி யிறாலின் றேனும்
மாலைவா யுகுத்த தேனும்
வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு
மீனெலாங் களிக்கு மாதோ. (10)

## 2. நளவெண்பா

### சுயம்வர காண்டம்

(நேரிசை வெண்பா)

#### நாட்டுச் சிறப்பு

71. காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் றளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு. (1)

#### நளனது ஆட்சியின் நலன்

72. சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியு மாடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ வுலகு. (2)

[நளன் ஒருநாள் சோலைக்குச் சென்று அங்கே அன்னப்பறவை ஒன்றனைக் கண்டனன்.]

### அன்னப்பறவையின் தோற்றம்

73. *நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்*
*தாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்தான்*
*முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகும்*
*அன்னப்புட் டோன்றிற்றே யாங்கு.* (3)

### நளன் அதனைப் 'பிடித்துத் தா' என்றல்

74. *பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமல்*
*மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்*
*கடித்துத்தான் முத்துமிழுங் கங்கைநீர் நாடன்*
*பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து.* (4)

### அன்னம் பிடிக்கப்படுதல்

75. *நாடிமட வன்னத்தை நல்ல மயிற்குழாம்*
*ஓடி வளைக்கின்ற தொப்பவே—நீடியநற்*
*பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து*
*தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.* (5)

### அன்னத்தின் கலக்கம்

76. *அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்*
*மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே—அன்னம்*
*மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்*
*கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.* (6)

### நளன் அன்னத்திற்கு அபயமளித்தல்

77. *அஞ்சன் மடவனமே யுன்ற னணிநடையும்*
*வஞ்சி யனையார் மடநடையும்—விஞ்சியது*
*காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு*
*மாணப் பிடித்ததார் மன்.* (7)

### அன்னம் மனந்தேறித் தமயந்தியைப்பற்றிக் கூறல்

78. திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள் — வசையில்
தமையந்தி யென்றோதுந் தையலாள் மென்றோள்
அமையந்தி யென்றோ ரணங்கு. (8)

79. எழுவடுதோண் மன்னா விலங்கிழையேர் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை — உழுநர்
படைமிதிப்பத் தேன்பாயும் மாடொலிநீர் நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு. (9)

80. நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே யணிமுரசா — வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு. (10)

### நளன் வேண்டுகோள்

81. அன்னமே நீயுரைத்த வன்னத்தை யென்னாவி
உன்னவே சோரு முனக்கவளோ — டென்ன
அடைவென்றான் மற்றந்த வன்னத்தை முன்னே
நடைவென்ற டன்பா னயந்து. (11)

### அன்னத்தைத் தமயந்தியிடம் தூதாக அனுப்பிய நளன் கவலையுறுதல்

82. இவ்வளவிற் செல்லுங்கொ லிவ்வளவிற் காணுங்கொல்
இவ்வளவிற் காத லியம்புங்கொல் — இவ்வளவில்
மீளுங்கொ லென் றுரையா விம்மினான் மும்மதநின்
றாளுங்கொல் யானை யரசு. (12)

### அன்னம் தமயந்தியைக் காணல்

83. மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய — நன்னுதலும்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னுடல் சொல்லென்றா ளீங்கு. (13)

நளன்பெருமையை அன்னம் உரைத்தல்

84. அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியும்—திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு. (14)

அதைக் கேட்ட தமயந்தி கூறுதல்

85. வாவி யுறையும் மடவனமே யென்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்று
பார்வேந்தன் பாவை பதைத்து. [ரைத்தாள்

தமயந்தியின் சுயம்வரத்தை அவள் தந்தை அறிவித்தல்

86. மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கு மறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தல்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றாதோட விட்டு. (16)

அரசர்கள் சுயம்வரத்துக்கு வருதல்

87. செந்தடையும்வண்டுறைதார்ச்செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்தே
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து. (17)

88. புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு. (18)

அன்னம் மீண்டுவந்து நளனிடம் கூறுதல்

89. கொற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடிபால்
உற்றதுவு மாங்கவடா னுற்றதுவும்—முற்றும்
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு. (19)

### தமயந்தியின் சுயம்வரத்தை நளன் அறிதல்

90. கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினர்—போதிற்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
அடையாத வாயி லகம். (20)

### நளன் குண்டினபுரத்தை அடைதல்

91. சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொற்றும வீமன் றிருமகளாம்
நல்லுயிரும் வாழு நகர். (21)

### இந்திரன் முதலியோர் சுயம்வரத்திற்கு வருதல்

92. மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் றிருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து. (22)

### நளனை அவர்கள் தமயந்தியிடம் தூதுசெல்ல வேண்டுதலும் அவன் உடம்படுதலும்

93. காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற் றொழிலுக் கிசையென்றான்—ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினன் மற்றதனை
இன்னதென வோரா திசைந்து. (23)

94. செங்கண் மதயானைத் தேர்வேந்தே! தேமாலை
எங்களிலே சூட்ட வியல்வீமன்—மங்கைபால்
தூதாக வென்றானத் தோகையைத்தன் னாகத்தால்
கோதாக வென்றானக் கோ. (24)

### நளன் மனநிலை

95. தேவர் பணிதலைமேற் செல்லும்! திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபால் மீண்டேகும்!—பாவில்
குழல்போல நின்றுழலும் கொள்கைத்தே பூவின்
நிழல்போலும் தண்குடையான் நெஞ்சு. (25)

நளன் வினவுதல்

96. ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரில்—காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
அடக்குமா றுள்ளத் தவன். (26)

[பிறர் காணாதிருக்கும் மந்திரத்தை இந்திரன் நளனுக்கு உபதேசிக்க
அதன் உதவியால் அவன் கன்னிமாடத்துட் புகுந்து
தமயந்தியைக் கண்டான்.]

தமயந்தி கூறுதல்

97. காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ? விஞ்சைக் கிறைவனோ?—தேவனோ?
உள்ளவா சொல்லென்றா ளூசற் குழைமீது
வெள்ளவா ணீர்சோர விட்டு. (27)

[நளன் தன்னை இன்னானென்று தமயந்திக்குத் தெரிவித்தான்.]

தான் வந்த காரியத்தை நளன் உரைத்தல்

98. என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றான் றொடையிற்றேன் றும்பிக்கே
ஊட்டுவா னெல்லா முரைத்து. (28)

தமயந்தியின் மறுமொழி

99. இயமரநின் றார்ப்ப வினவளை நின் றேங்க
வயமருதோண் மன்ன வகுத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டா லென் று நினைகென்றா ணீள்குடையான்
தன்பொருட்டா னைவா டளர்ந்து. (29)

[அம்மொழியையே நளன் இந்திரன் முதலியோர்க்கு அறிவித்தான்.]

இந்திரன் முதலியோர் நளனுக்கு வரமளித்தல்

100. அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றா யெனவருண னாகண் டலன்றருமன்
மற்றோனு மீந்தார் வரம். (30)

நளன் போனபின் தமயந்தி வருந்துதல்

101. உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போற்—பிள்ளை
புள்ளரிக்கு நாடன் றிருமடந்தை பூவாளி [மீன்
உள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர். (31)

சூரியன் மறைதல்

102. வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
செவ்வாய வன்றி றுணையழைப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு. (32)

விடியற்காலம்

103. பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது. (33)

சுயம்வரம்

104. முரசெறிந்த நாஏளழும் முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்—விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையும்
காலை முரசுங் கலந்து. (34)

அரசர் நடுவில் நளன் இருந்த தன்மை

105. மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீலம்—முன்றிற்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய். (35)

தமயந்தி சுயம்வர மண்டபம் புகுதல்

106. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்
செய்யதாள் வெள்ளைச்சிறையன்னம் செங்கமலப் [துச்
பொய்கைவாய்ப் போவதே போன்று. (36)

### கலைமகள் தமயந்திக்கு வேந்தர்களைக் காட்டுதல்

107. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. (37)

### நளனுருவுடன் அமர்ந்திருந்த தேவர்களைக் கண்டு தமயந்தி மயங்கல்

108. காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாண் மற்றவரைக் காணாநின் (38)
றாசலா டுற்றா ளுளம்.

### தமயந்தி தெய்வத்தை வேண்டல்

109. மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா னாகிற் கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. (39)

### தமயந்தி நளனை அறிதல்

110. கண்ணிமைத்த லாலடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே யன்னாள்
அறிந்தா ளவன்றன்னை யாங்கு. (40)

### நளனுக்கு மாலை சூட்டல்

111. விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். (41)

மற்ற வேந்தருடைய மனநிலை

112. திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.. (42)

நளன் தமயந்தியுடன் புறப்படல்

113. மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந்து—மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலா னளன். (43)

மணம்

114. கணிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றேவ ரொவ்வார் மகிழ்ந்து. (44)

## 3. குசேலோபாக்கியானம்

## குசேலர் கண்ணனைக் காணல்

வழிநடை

(ஆசிரிய விருத்தம்)

115. முன்னுநெடுந் தூரவழி நடந்தறியான்
தோட்கோப்பு முதலா தாரம்
தன்னமுமி லான்பதிகர் தமைவினவி
வழிதேர்ந்து தடையி லாது
பன்னெடுங்கா வதம்போகிக் கவர்வழிகண்
டுளமயங்கிப் பரிந்து நின்றங்
குன்னிமதிப் பாலிதுசெல் வழியெனத்தேர்ந்
தவணின்று முற்றுச் செல்வான். (1)

முதுவேனிற் பருவம்

(கோச்சகக்கலிப்பா)

116. மண்கொதிப்ப வறல்கொதிப்ப வளிகொதிப்ப வெண்ணுவார்
எண்கொதிப்ப நறுநீழ லியைமனைவிட் டகலார்க்கும்
கண்கொதிப்பக் கரங்கொதிப்பக் கால்கொதிப்பக் கற்பகஞ்சார்
விண்கொதிப்ப முதுவேனில் வெம்பருவம் மேவியதால். (2)

குசேலர் மேல்கடலின் கரையை அணுகுதல்

117. என்னதுய ரினியுறினு மிதுகாறும் வந்தமையால்
முன்னமனைக் குரைத்தபடி முற்றும்போய் வருவலெனத்
தன்னுளத்தி லெண்ணியெழீஇத் தனிநடந்து சின்னாளின்
மின்னுமிழ்கார் முகில்பயிலும் மேல்கடலின் கரையிறுத்தான்.

[குசேலர் ஒரு படகோட்டியின் உதவியால் கடலைக்
கடந்து துவாரகையை யடைந்து அரண்மனை வாயிலைக் குறுகினார்.]

அங்கு அவர் துவாரபாலகரிடம் கூறல்

(ஆசிரிய விருத்தம்)

118. மக்களுண் மிக்கீர் நீல
வண்ணனுக் கடியீர் தூய்தாத்
தொக்கபுண் ணியத்தீர் பாவந்
தொலைத்தமா தவருஞ் செய்ய
நக்கபூங் கமலத் தோனும்
நண்ணரும் புகழ்பெற் றுள்ளீர்
எக்கலை களினும் வல்லீ
ரியம்புமென் னுசி கொண்மின். (4)

(ஷை வேறு)

119. எளியனேன் மறையோர் தங்குலத் துதித்தே
னென்பெயர் குசேலன்மிக் கொலிக்கும்
நளிகொள்வெண் டரங்கப் பாற்கட லுப்பண்
நாகணைத் துயிலொழிந் தடியார்க்
களிசெய்தல் லார்க்கீ றுறுத்திட வவதா
ரஞ்செய்த கண்ணபி ரானோ
டிளமையிற் பற்பல் கலைபயின் றுள்ளே
னிசைக்குமுக் குற்றமு மகல. (5)

120. வச்சிரத் தடக்கை வாசவ னேவ
மஞ்சினம் பொழிசிலா மழையை
நச்சும்விண் ணுரிஞ்சும் போகுயர் குவட்டோர்
நாகமேந் தித்தடுத் தருளும்
அச்சுதன் பாற்சென் றேழையேன் வருகை
யறிவித்தென் றனையவட் சேர்த்தல்
மெச்சுநுங் கடனென் றுரைத்தன னெவரும்
விரும்புறு குசேலமா தவனே. (6)

அப்பொழுது சில அறிவீனர் குசேலரை இகழ, அவர்களைக்
கடிந்து அறிஞனொருவன் கூறுதல்

(ஷ வேறு)

121. யாரென நினைத்தீ ரிந்த
விருந்தவத் தலைவன் றன்னைச்
சேருறு பொய்ம்மை யில்லன்
செறிந்தநோன் புழந்த நல்லன்
வாருறு மறைகள் வல்லன்
மற்றெங்குஞ் செல்வா னல்லன்
ஏருறு மினிய சொல்ல
னென்னவே யாமுட் கோடும். (7)

துவாரபாலகர் கண்ணனிடம் குசேலமுனிவரது வரவைத்
தெரிவிக்க உறுதிகொள்ளுதல்

(ஷ வேறு)

122. ஆவாவிம் மறையோனைக் காண்டொறுமுள்
ளகத்துவகை யரும்பா நின்ற
தோவாது மெய்யினிடைப் புளகமெழு
கின்றனகண் ணுருகா நின்ற
நாவாரத் துதிப்பதற்குத் துடிதுடிக்கின்
றதுவிரைந்து நாம்போ யின்னே
தேவாதி தேவனுக்கித் தவன்வரவை
விண்ணப்பஞ் செய்யல் வேண்டும். (8)

## கண்ணபிரானிடமிருந்து மீண்டுவந்த துவாரபாலகர் குசேலரிடம் கூறல்

(ஷை வேறு)

123. நின்னுடைய வரவு ரைத்தேம்
நிருபனுக் கப்போழ் தூற்ற
பன்னருங் களிப்பை யாமோ
பகர்ந்திட வல்ல மையா!
முன்னமங் கிருந்த வின்ப
முழுவது மறந்து நின்முன்;
நன்னர்நெஞ் சுடைய நீரார்
நட்பினிற் சிறந்த துண்டோ? (9)

124. ஆதலி னெம்பி ரானுக்
ககத்துமிக் குவகை யுய்ப்ப
ஏதமின் முனிவ ரேறே
யெழுந்தரு ளுகவென் றங்கைப்
போதகங் கூப்பி னர்கள்;
பொருக்கென வெழுந்து செம்மை
வேதமுற் றுணர்ந்த வையன்
விரைதர நடக்க லுற்றான். (10)

### கண்ணனது அன்பு நிலை

125. ஈங்கிவ னிவ்வா றெய்த
வின்னம்வந் திலனென் றையன்
பூங்கதிர் வரவு பார்க்கும்
பொற்றபுண் டரீகம் போலும்;
தீங்கதிர் வரவு பார்க்குஞ்
செவ்வரக் காம்பல் போலும்;
ஓங்குமை வரவு பார்க்கும்
ஒண்டமை மஞ்ஞை போலும். (11)

126. பொருந்துதாய் வரவு பார்க்கும்
புனிற்றிளங் கன்று போலும்;
திருந்துதன் வரவு பார்க்கும்
செம்மனத் தொருவன் போலும்;
அருந்துநீர் வரவு பார்க்கும்
அறனசை யுடையான் போலும்;
கருந்துழாய்க் கண்ணி யண்ணல்
கமழ்நறுஞ் சேக்கை மீதே. (12)

[குசேலர் கண்ணன் அருகில் வந்தனர்.]

அப்பொழுதுள்ள கண்ணனுடைய நிலை

127. வருந்துமோர் மிடியன் சேம
வைப்பெதிர் கண்டாற் போலும்;
அருந்துண விழந்தோன் விண்ணோ
ரமுதெதிர் கண்டாற் போலும்;
பரிந்துவெப் புழலு வோன்கற்
பகமெதிர் கண்டாற் போலும்;
சரிந்தபற் றினன்மெய் யாசான்
றனையெதிர் கண்டாற் போலும். (13)

குசேலர் கண்ணபிரானைத் தரிசித்தல்

128. எண்ணனைக் கிலங்கு மார்பம்
ஈந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம்
வலமிட முறக்கொண் டானை
மண்ணனைத் தும்பு ரக்கும்
வாசுதே வனைம ணக்கும்
கண்ணனைத் துளவத் தாமக்
கண்ணனைக் கண்ணிற் கண்டான். (14)

### கண்ணன் செய்த உபசாரம்

129. காண்டலு முவகை பூத்துக்
காலிசை கொடுந டந்தான்;
ஆண்டகை யவனுங் கண்ணுற்
றணையுடைத் தெழுநீத் தம்போல்
நீண்டபூம் பள்ளி நீத்து
நிலவுபே ரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று
பொன்னடி வணங்கினானால். (15)

130. திலகமண் டோய வையன்
திருவடி வணங்கிப் பின்னர்
நிலவுமெய்ப் புளகம்போர்த்து
நிரம்புறத் தழுவிக் கொண்டான்;
குலமறைத் தலைவ னென்றும்
கூர்ந்தமெய்ந் நட்ப னென்றும்
மலர்தலை யுலகங் கூறும்
வாய்மைகாத் தருளி னானே. (16)

### கண்ணன் குசேலரை உபசரித்து விருந்தளித்துப் பின் அவரை நோக்கிக் கூறல்

(கொச்சகக்கலிப்பா)

131. பூன்றதயை யென்னிடத்தெப் போதும்நீ வைத்தருள்க;
ஆன்றவென துளத்தினைவிட் டகன்றிலையிந் நாள்காறும்
சான்றகுணத் தாய்நின்னைச் சந்ததமு நினைந்திருப்பேன்;
தோன்றவநே கம்பெறினுந் தொன்னட்பிற் சிறந்தனவோ?
(17)

### கண்ணன் குசேலரை விசாரித்தல்

132. நின்னுடைய மனைக்கிழத்தி நிரம்புபெரு நீர்மையளே?
மன்னுடைய சொற்காத்துச் சோர்விலா மாண்பினளே?
தன்னுடைய வுயிராநின் றனைப்பேணுந் தன்மையளே?
உன்னுடைய வருவாய்க்குத் தக்கசெல வுஞற்றுவளே?
(18)

133. பைங்குதலே வாய்மைந்தர் பலர்பிறக்க வேண்டுமே!
எங்குமரும் புகழுடையா யெத்தனைமைந் தர்கள்பிறந்தார்?
அங்கவரைப் பேரவையோ ரணிதரச்செய் செயலனைத்தும்
சிங்கலறப் புரிந்தனையோ? செய்தனையோ வுபநயனம்?
(19)

134. நானமுதல் சந்திசெபம் நன்குநடக் கின்றனவே?
ஆனவிவை செய்மெய்திட மாகியிருக் கின்றதே?
மானமுறு மறைப்பொருளில் வைத்ததியா னஞ்சிதரு
தீனமற நிற்கின்ற தேயெவருஞ் சொலற்கரியாய்! (20)

135. சீரார்நின் னூர்நின்று சேரவிவண் வருவாரால்
நீரார்நின் றன்மையெலா நென்னல்வரைக் குந்தவறு
தாராய்ந்து கொண்டிருந்தே னகன்றபல நாட்களின்பின்
ஏராரின் பஞ்சிறப்ப விருவேமுங் கூடினேம். (21)

கண்ணன் குசேலர் கொண்டுவந்த அவலை உண்ணல்

(ஆசிரிய விருத்தம்)

136. பந்தனை யகன்ற மேலோய் பற்பல நாட்குப் பின்பு
வந்தனை யெனக்கென் கொண்டுவந்தனை யதனை யின்னே
தந்தனை யாயி னன்று தருசுவைப் பக்க ணத்தென்
சிந்தனை நின்ற தென்றுன் தெரிவரு வஞ்சக்கள்வன்.
(22)

137. இனியசிற் றுணவே தேனு மின்றிநீ வருவாய் கொல்லோ
இனியநின் னுள்ள மின்றேவெண்ணியா னறிதல் வேண்டும்
இனியநின் மனைவி வாளா வேகிவா வென்ப ளோமற்
றினியவெற்கன்றியார்க்குக் கொண்டுவந்திருக்கின்றாயோ?
(23)

138. திருந்தவிங் களித்தி யென்று
செங்கர மலர்த்தி நீட்டப்
பொருந்தவின் பாலுண் பான்பாற்
புளித்தகா டியைக்கொ டுத்திட்
டருந்திடென் றுரைத்தல் போலிவ்
வவற்கொடை யென்று வாளா
இருந்தனன் குசேல மேலோ
னிவனுள மறிந்த கண்ணன். (24)

**139.** மலிதரு மன்பின் வந்த வண்பொதி யவிழ்த்து நோக்கி
வலிதரு மவற்று ணன்று வாய்த்தது நமக்கீ தென்னு
ஒலிதரு கழற்கா லைய னொருபிடி யவலைக் காதல்
பொலிதர வெடுத்து வாயிற் போகட்டுக் கொண்டான் மாதோ.
(25)

**140.** செறிதரு சுவைத்தீ தென்றுந் தேவர்க்கு மரிய தாகும்
அறிதரு விருப்பி னில்லி லமைத்ததே பழைது மன்று
குறிதரு விலைப்பாற் சென்று கோடலிவ் வளத்த தோவென்
றுறியளை வாரி யுண்டோ னொருபிடி யவல்தின் றானே.
(26)

**141.** முன்னுமிவ் வவலொன் றேனு
முனைமுறிந் ததுவு மின்று
பன்னுமுட் டையுமின் றாகும்
பட்டவங் கையும ணக்கும்
கொன்னும்வாய் செறிப்பி னம்ம
குளமும்வேண் டுவதின் றென்னு
உன்னுபல் லுலக முண்டோ
னொருபிடி யவல்தின் றானே. (27)

**142.** நாட்டுமிவ் வவல்வி ருப்ப நமக்குமிக் குள்ள தென்று
கேட்டுளாய்கொல்லோமுன்னங் கிளந்திருப் பதுமன்றேயென்
றேட்டுமென் மலர்ப்பூந் தொங்க லிமையவர்க் கமிர்தமுன்னுள்
ஊட்டிய புகழின் மேலோ னொருபிடி யவறின் றானே.
(28)

[அன்றிரவு குசேலர் அங்கே தங்கினர். மறுநாள் அவர் கண்ணனிடம் விடைபெற்றுத் தம் ஊரை நோக்கித் திரும்பினர்.]

அவருக்கு நேர்ந்த வேறுபாடுகள்

(ஷை வேறு)

**143.** அருந்தவர்கள் புகழ்சீர்த்தி யமைந்ததிருக் கண்ணபிரா
னருளி னலே
பொருந்துவிர தாதிகளான் மிக்கிளைத்த தன்னுடம்பு
பூரிப் புற்ற

திருந்தபழங் கந்தைசெழும் பொன்னுடை யாயிற்று
　　விலங்கு கண்டப்
பெருந்துளப மணியாரம் பெருவிலைமுத் தாரமாப்
　　பிறங்கிற் றுலோ. (29)

வானவர் வாழ்த்தல்

(கலி விருத்தம்)

144. மண்ணென்பது தெரியாவகை வானத்திடை யமரர்
கண்ணென்பது நுழையாவகை கற்பத்தரு மலரை
எண்ணென்பது மின்றாம்வகை யிறைத்தார்களித் தார்த்தார்
புண்ணென்பது பொலிவேலவர் பூத்தாரிறும் பூது. (30)

VII

# தல புராணம்

## வீரவனப் புராணம்

வீரசேகரர் திருமுடித் தழுட்புற்ற படலம்

[வீரன் வரலாறு]

(ஆசிரிய விருத்தம்)

145. பரவுமிவ் வீர வனத்தழற் றிசையிற்
　　பகரரை யோசனை யளவில்
விரவுறு மடவி வாழ்பவன் விறலார்
　　வேடர்தங் கோவெனும் பூரிச்
சிரவன்மா மைந்தன் வீரனென் பெயரோன்
　　சிறப்புறு மறக்குடி யுதித்த
குரவுறு கூந்தற் சுமதியை மணந்தோன்
　　குஞ்சர நிகர்களிப் புடையான். (1)

அவன் தோற்றம்

146. தகரிரு மருப்புஞ் சமழ்ப்புற முகத்துத்
　　தயங்குறு திருகுரோ மத்தான்
பகர்மயிர் வினைஞர் கருவியெஞ் ஞான்றும்
　　பார்த்திடாச் சிகழிகை முடியான்

நிகர்வரை யெய்தா வகனிறத் துறமுள்
நிவந்தெனச் செறிகரு மயிரான்
புகர்படு முடைவாண் மருங்குற யாத்துப்
புலிப்பெரும் போத்தெனப் பொலிவான். (2)

அவன் வீரவனம் புகுதல்

**147.** அனையவ னொருநாண் ஞமலிபின் றொடர
வங்கையிற் சுரையிரும் பறைந்த
வனையநீள் கழியுங் கொண்டெழீஇ வீர
வனத்தினுட் புகுந்தன னாக
நினையமிக் கினிய வொருபெரு வீரை
நிலவடி யெழுந்தவோர் புற்றிற்
சினையநல் வள்ளிக் கொடியொன்று முளைத்துச்
செறிந்ததத் தருக்கிளை யனைத்தும். (3)

வீரன் கிழங்கு தேடுதல்

**148.** அன்னவன் மீகத் தகமறைந் தமரு
மம்பிகா பதியெமை யுடைய
முன்னவன் வீர சேகர நாதன்
முதிர்பெருங் கருணைவெங் கிராதர்
மன்னவ னுய்யச் செலுத்தின னந்த
மறவனுங் கொலைகரு தாது
தென்னவன் புரக்கு நாடுசெய் தவத்தாற்
றேடினன் கிழங்குடை யிலதை. (4)

வீரன் வள்ளிக்கோடியைக் காணல்

**149.** கொடிபடு கிழங்கு தேடுபு வருவோன்
குறித்துமுன் செய்தபுண் ணியத்தால்
வடிபடு மலர்சால் வீரையு மதன்கீழ்
மருவுவன் மீகமு மதன்மேற்
படிபடு சிறப்பிற் றோன்றியத் தருவிற்
படர்ந்தமர் வள்ளியுங் கண்டான்
பொடிபடு மேனிப் புண்ணிய னதனுட்
பொலிந்தினி தமர்திறங் காணான். (5)

வீரன் புற்றினை அழித்தல்

150. குறிதரு மூக மிருந்துமில் லானிற்
கொடியள வுணர்ந்ததி சயித்து
முறிதரு மினைய கொடிநிகர் கொடியான்
முன்னமிவ் வனத்திடைக் காணேன்
செறிதரு கிழங்கு நனியுள தென்று
சிந்தையு ணினைந்துகை யிருந்த
எறிதரு நுனைய விரும்பினுற் பெயர்த்தா
னெழுந்தபுற் றொழிந்துபோ யதுவே. (6)

கடவுள்முடிமீது இரும்பு படுதலும், வீரன் மூர்ச்சித்து வீழ்தலு

151. உற்றபுற் றொழியக் கிழங்கினை நோக்கி
யுடன்பெயர்ப் பானிரும் பூன்றக்
கற்றவர் புகழும் வீரசே கரனுர்
கலைநிலா முடியிலவ் விரும்பு
சற்றமுந் திடலாற் குமிழிகொண் டந்தோ
தவாதெழுந் ததுபெரு நெய்த்தோர்
மற்றதை யுணர்ந்த வீரனுண் மயங்கி
மண்மிசை மூர்ச்சித்து வீழ்ந்தான். (7)

ஞமலியின் செய்கை

152. விழிகளு மறைந்து மண்மிசைக் கிடக்கும்
வேடர்கோ மகன்றிற நோக்கி
வழிதொடர்ந் தடுத்த ஞமலிமற் றிவற்கு
வந்ததோர் தீங்கெனக் குறித்தாங்
கழிதுய ருழக்கு முகத்தினை மோக்கு
மலமரும் பஃறரஞ் சூழு
மொழியுமுன் காலால் வருடுமிக் கலறு
முகம்புலர்ந் தெங்கணு நோக்கும். (8)

ஞமலி சுமதிக்கு அறிவித்தல்

153. விள்ளருங் கவலை யுற்றநா யனையான்
விழைமனை யாட்டிபா லோடித்
தள்ளரு மனையா ளடிமிசை வீழ்ந்து
தவலரு மஞர்த்திறங் காட்டி

உள்ளரு நடுக்கங் கொண்டல றுதலு
முவளுநா யகன்வர லின்றி
எள்ளருந் திறத்துச் சுணங்கனிங் கேகற்
கேதுவென் னேவெனக் கலங்கி. (9)

சுமதி தன் கணவனைக் காணுதல்

154. அதுவழி காட்டி முன்னமோ டுதலா
லதன்பினர் விடாதுறத் தொடர்ந்தாள்
கதுமென வீர வனத்தினுட் புகுந்து
கற்பக தருவினுஞ் சிறப்ப
மதுமலர் சுமந்து கனிபல பழுத்து
வளம்படு வீரையின் பாங்கர்
முதுபசுங் கோடியின் மண்மிசைக் கொழுநன்
முகம்படக் கிடப்பது கண்டாள். (10)

155. கண்டுளம் பதைத்து வயிறலைத் தேங்கிக்
கண்பொழி தாரைநீர் பெருக்கி
உண்டுகொல் லுயிர்மற் றில்லைகொல் லிதனை
யுற்றறி வோமெனத் துணிந்து
மண்டுபல் வளைக்கை விரலவ னுசி
வைத்தன ளுயிர்ப்பெழ லுணர்ந்தாள்
விண்டுயி ரொழிநதா னலனிலங் கிடக்கும்
விதந்தெரி வாமென முயல்வாள். (11)

சுமதி புற்றினுள் சிவலிங்கப்பெருமானைக் காணுதல்

156. திருகுதீ ரவளு முன்னைநாட் புரிந்த
திருத்தவ முடையளா தலினல்
அருகுநோக் குற்று ளுடைந்தபுற் றடியோ
ரகன்கிழங் கிருப்பது கண்டாள்
கருகுரு வனைய கிழங்கய லெழுந்து
கதித்தநெய்த் தோரையுங் கண்டாள்
பெருகுமோ ரிறும்பூ திவனுள தென்று
பெயர்த்தனள் கிழங்கினை மாதோ. (12)

157. தன்பெருங் கொழுந னெடுந்தனக் காய
தவாமலக் கிழங்ககழ் வாள்போல்
நன்பெருங் கிழங்கை யகழ்தலும் கண்டா
ணக்கபொன் னுலகமர் வாரு
மின்பெருங் குலிசத் தண்ணன்மா 'மலர்மேல்
விரிஞ்சனு மொருபெரு வரையை
வன்பெருங் குடையாக் கொண்டமா யோனு
மதித்தினுங் காணொணு முதலை. (13)

[சுமதி அங்கே சிவலிங்கப்பெருமான் பாரையால் குத்தப்பட்டிருப்பதைக் கண்டு பதைபதைத்தாள்.]

சுமதியின் புலம்பல்

158. "அடுத்தவர் தமைக்காத் தாரருள் கொழிக்கு
மம்மையப் பருக்கிது தகுமோ?
கடுத்தநஞ் சருந்திக் கடவுளர்ப் புரந்த
கருணையா ளருக்கிது தகுமோ?
எடுத்தவெஞ் சீற்றக் கூற்றுதைத் தொருசே
யினையளித் தவர்க்கிது தகுமோ?
உடுத்தநீர் ஞால மொருங்குவந் தேத்து
முமாபதி யார்க்கிது தகுமோ? (14)

159. "தாயினு மினிய பேரருள் புரியுந்
தம்பிரா ஞர்க்கிது தகுமோ?
ஆயினு மயன்மாற் கினுமணுத் துணையு
மகப்படா தார்க்கிது தகுமோ?
காயினு மருளே யார்தரப் பொலியுங்
காலகா லருக்கிது தகுமோ?
வேயினும் பொலிதோ ளுமையொரு பாக
விமல்நா யகர்க்கிது தகுமோ?" (15)

சுமதியின் செயல்

160. என்றுநைந் துருகிப் புலம்புவ ளெழுவ
ளிருகரங் கொடுமுகத் தறைவள்
கன்றுமுட் கனிவிற் றிருமுடி துடைப்பள்
காறனின் றிலதெனக் கவல்வள்

ஒன்றுமிக் கசிவு நிலாதெனி னின்னே
யுயிர்துறப் பேனெனத் துணிந்தாள்
அன்றுமிக் கழுதா ளழுதநீர் கறைமுற்
றகற்றுநீ ராயதப் போது. (16)

[கடவுளின் கறை அகன்றது.]

அதனைக் கண்டு பின்னும் சுமதி இரங்கல்

161. "கொடியிடை யிரதி வேண்டலு மவட்குக்
கொழுநனை யளித்துளீர் சரணம்!
படியிடை யறியா தின்றிவன் புரிந்த
படுபிழை யுட்கொளா தொழித்து
முடியிடை மதிய முடித்துளீ ரினையான்
மூர்ச்சைதீர்ந் தெழும்படி செய்யின்
அடியிடை யென்றும் பணிந்துகுற் றேவ
லாற்றுவோம் யானுமென் றவனும்." (17)

வீரன் மூர்ச்சை தெளிந்து எழுதல்

162. என்றவ ளிரங்க வவளொன்றும் வேண்டா
திருக்குமுன் னேபெரு கன்பும்
கன்றவி லுண்மை ஞானமு மளித்த
கடவுளார் வேண்டிய காலை
ஒன்றது நல்கா திருப்பரோ நிலஞ்சோர்ந்
துற்றவன் மேலருள் செலுத்த
அன்றவன் மூர்ச்சை தெளிந்துகண் டெரிந்தாங்
காயதென் னேவென வெழுந்தான். (18)

வீரன் நிகழ்ந்ததை அறிதல்

163. நாயக னெழலும் பெருமகிழ் கூர்ந்து
நங்கைமற் றவன்முக நோக்கி
ஆயவிக் கிழங்கு கவருவா னிங்ங
னடுத்தநீ யென்செய்தா யளவாத்

தூயநம் பெருமான் முடிமிசை நின்கைச்
சுரைபடு மிரும்புதாக் குதலால்
மேயது செந்நீ ரென்றனள் பெருமான்
மேயின னேவிவ ணென்றான். (19)

## வீரன் இரங்குதல்

164. கண்ணினைக் கெனலுங் கண்டனன் மாலுங்
காணொணு தானையுள் ளஞ்சிப்
பண்ணினேர் மொழியாள் பங்கரிங் கமரும்
பண்பியா னறிந்தில னந்தோ
அண்ணினின் னமுதா மறவனு ரிங்ங
னமர்ந்ததை யறிந்தில னந்தோ
எண்ணிலின் பருளு மிறைவனு ரிங்ங
னிருப்பதை யறிந்தில னந்தோ. (20)

165. என்னையா டரவிக் கானகத் திருந்தா
ரிருந்ததை யறிந்தில னந்தோ
பொன்னைநேர் சடிலத் திறைவனு ரிங்குப்
பொருந்திய தறிந்தில னந்தோ
அன்னையே பொருவு மறவனு ரிங்ங
னமர்ந்ததை யறிந்தில னந்தோ
முன்னையூழ் கொல்லோ பலருமுள் ளிரங்க
முடித்தனன் முடிந்திலே னென்பான். (21)

166. புண்ணியர் சாதிக் கடுத்ததோர் குணமே
புரிந்தன னென்றசித் திடுவார்
அண்ணிய விஃதியான் செயவுநோன் றிருந்தா
ரருட்டிரு வுருவரா தவினல்
நண்ணிய விந்தப் பிழைதவிர்ந் துயலு
நமக்குள தோவென நவில்வான்
திண்ணிய வன்பு மறிவுநம் பெருமான்
திருவரு ளாற்பெற்ற வீரன். (22)

சிவபிரான் மறையவர் உருக்கொண்டு தோன்றிக் கூறுதல்

167. எனப்பல புகன்று கரைந்துநெக் குருகு
மிருஞ்சிலை வேட்டுவன் முன்னர்க்
கனத்தினுங் கரிய கண்டனு ருமையாள்
கணவனு ரொருமறை யவர்போல்
மனத்தினுங் கடுகத் தோன்றிமுன் னின்று
வரிசிலை வேடனை நோக்கி
அனத்தினும் பொலியு நடையினு ளொடியா
மறைவது கேட்டியென் றறைவார். (23)

168. உரைப்பது கேட்டி நின்னைநின் மனையை
யுவந்தினி தாளுதற் பொருட்டு
விரைப்பது மத்தோ னுதிவா னவர்கண்
மேவுதற் கரியயா மருளாற்
றரைத்தலை வெளிப்பட் டிருந்தனங் கருவி
தாக்கலிற் றிருமுடி நின்றும்
விரைத்தசெந் நீருந் தோற்றிநின் மனையாள்
வேண்டலின் மாற்றின மன்னே. (24)

169. திருமுடித் தழும்பு பூண்டகா ரணத்தாற்
றிருமுடித் தழும்பனென் றொருபேர்
மருவினம் வீரைத் தருவடி நாளும்
வயங்கியே சிலாக்கிய மாகி
ஒருவற வுறலின் வீரசே கரப்பே
ருற்றன மிவ்விரு பெயருங்
கருவஞ் ரொழிக்கும் புத்தியு மளிக்குங்
காலையிற் புகன்றிடு பவர்க்கே. (25)

சிவபெருமான் தாம் பெற்ற பல தழும்புகளைக் கூறல்

170. பரம்பரன் முடியிற் றழும்புறச் செய்தேன்
பாவியே னென்றுநீ கவலல்
பிரம்படித் தழும்பும் வில்லடித் தழும்பும்
பெயர்த்தெறி கல்லடித் தழும்பும்

வரம்பறு சிறப்பிற் செருப்படித் தழும்பும்
வயங்கிய வாள்வெட்டுத் தழும்பு
நிரம்பிய வியலிற் பரிக்குூத் தழும்பு
நிகழுறு பூசைவாய்த் தழும்பும். (26)

171. குடம்புரை செருத்தற் றேனுவோ டடுத்த
குழக்கன்றின் குளப்படிச் சுவடுந்
தடம்புயத் தொருவன் கதையடிச் சுவடுந்
தாங்கிய நமக்கிதோர் பொருளோ
இடம்பட வுணரி னின்னமும் பலவாம்
இசைப்பது நமக்குமுற் றுது
திடம்படு மிவைபோற் பலவுநந் தமக்குத்
திருவிளை யாட்டெனத் தேர்தி. (27)

சிவபெருமான் மறைதல்

172. இத்தலத் தெமையு மெமக்கொரு வடகீ
ழெல்லையி னமருமை தனையும்
நித்தலும் வழிபட் டேத்துபு வருதி
நின்மனை யாளொடும் பின்னர்
உத்தமக் கதிநல் குதுமென வுரைத்தவ்
வொளிதரு மிலிங்கத்துண் மறைந்தார்
சித்தமிக் குவந்து மனையொடு கிராதன்
சேவடி பன்முறை பணிந்தான். (28)

# VIII

# பிரபந்தங்கள்

## 1. கலிங்கத்துப் பரணி

### (i) சயதரன்பால் சிற்றரசர் மொழிவது

(கலித்தாழிசை)

173. எந்நக ரங்களு நாடு மெமக்கருள் செய்தனை
யெம்மை யிடச்
சொன்ன கரங்கள் கொணந்தன மென்றடி
சூடு கரங்களொடே. (1)

திறைப்பொருள்கள்

(ஷை வேறு)

174. ஆர மிவையிவை பொற்கல மானை யிவையிவை யொட்டகம்
ஆட லயமிவை மற்றிவை யாதி முடியொடு பெட்டகம்
ஈர முடையன நித்தில மேறு நவமணி கட்டிய
ஏக வடமிவை மற்றிவை யாதும் விலையில்ப தக்கமே;
(2)

175. இவையு மிவையு மணித்திர ளினைய வினைய தனக்குவை
இருளும் வெயிலு மெறித்திட விலகு மிவைமக ரக்குழை
உவையு முவையு மிலக்கண முடைய பிடியுவை புட்பகம்
உயர்செய் கொடியிவை மற்றிவை யுரிமை யரிவையர் பட்டமே.
(3)

176. ஏறி யருள வடுக்குமிந் நூறு களிறு மிவற்றெதிர்
ஏனை யரச ரொருத்தரொ ரானை விடுவ ரெனிற்புவி
மாறி யருள வவர்க்கிட யாமு மிசைவ மெனப்பல
மான வரசர் தனித்தனி வாழ்வு கருதி யிருப்பரே. (4)

(ii) சோழன் அருளும் வினவும்

(ஷை வேறு)

177. அரச ரஞ்சலென வடியி ரண்டுமவர்
முடியின் வைத்தருளி, அரசர்மற்
றுரைசெ யுந்திறைக ளொழிய நின்றவரும்
உள்கொ லென்றருளு பொழுதிலே. (5)

மந்திரிகள் கூறல்

178. கடவ தந்திறைகொ டடைய வந்தரசர்
கழல்வ ணங்கினர்க ளவருடன்
வடக லிங்கர்பதி யவனி ரண்டுவிசை
வருகி லன்றிறைகொ டெனலுமே. (6)

சோழன் கட்டளை

179. எளிய னென்றிடினும் வலிய குன்றரணம்
இடிய நம்படைஞர் கடிதுசென்
றளிய லம்புமத மலைகள் கொண்டணைமின்
அவனை யுங்கொணர்மி னெனலுமே. (7)

கருணாகரத் தொண்டைமான் கூறுதல்

180. இறைமொ ழிந்தளவி லெழுக லிங்கமவை
எறிவ னென்றுகழ றொழுதனன்
மறைமொ ழிந்தபடி மரபின் வந்தகுல
திலகன் வண்டைநக ரரசனே. (8)

(ஷை வேறு)

181. அடைய வத்திசைப் பகைது மிப்பனென்
றுரைசெ கொண்டடற் றொண்டைமான்
விடையெ னக்கெனப் புலியு யர்த்தவன்
விடைகொ டுத்தவப் பொழுதிலே. (9)

கண்டவர் கூற்று

182. கடல்க லக்கவோ மலை யிடிக்கவோ
கடுவி டப்பொறிக் கணப ணப்பணிப்
பிடரொ டிக்கவோ படைநி னைப்பெனப்
பிரள யத்தினிற் றிரள்வ குக்கவே. (10)

(வேறு)

183. அகில வெற்புமின் றானை யானவோ
அடைய மாருதம் புரவி யானவோ
முகில னைத்துமத் தேர்க ளானவோ
மூரி வேலைபோர் வீர ரானவோ? (11)

184. பார்சி றுத்தலிற் படைபெ ருத்தவோ
படைபெ ருத்தலிற் பார்சி றுத்தவோ
நேர்செ றுத்தவர்க் கரிது நிற்பிடம்
நெடுவி சும்பலா லிடமு மில்லையே. (12)

படையெழுச்சி

(வேறு)

185. எழுந்தது சேனை யெழலு மிரிந்தது பாரின் முதுகு
விழுந்தன கானு மலையும் வெறுந்தரை யான நதிகள். (13)

186. அதிர்ந்தன நாலு திசைக ளடங்கின வேழு கடல்கள்
பிதிர்ந்தன மூரி மலைகள் பிறந்தது தூளி படலம். (14)

187. நிலந்தரு தூளி பருகி நிறைந்தது வானின் வயிறு
வலந்தரு மேக நிரைகள் வறந்தன நீர்கள் சுவறி. (15)

188. தயங்கொளி யோடை வரைகள் தருங்கட தாரை மழையின்
அயங்களின் வாயி னுரையி னடங்கின தூளி யடைய. (16)

## 2. மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடுதூது

(கலிவெண்பா)

மதுரைச் சொக்கநாதருக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு

(கண்ணிகள்)

—தருமிக்கே

189. ஓர்வாழ்க்கை வேண்டி யுயர்கிழிகொள் வான்'கொங்கு
தேர்வாழ்க்கை' யென்றெடுத்த செய்தியும்—கீரன் (1)

190. இசையா வகையி னியம்பினு னென்றே
வசையாடித் தர்க்கித்த வாக்கும்—இசையான (2)

191. பாட்டுக் கிரங்கியொரு பாணனுக்குச் சேரலன்மேற்
சீட்டுக் கவிவிடுத்த சீராட்டும்—பாட்டியலில் (3)

192. நாத்திரமா மேவுபொரு ணன்று வறுபதெனும்
சூத்திரமாப் பாடியரு டோற்றமும்—மாத்திரமோ (4)

193. உன்னோ டவர்விளையாட் டொன்றோ? வடமதுரைக்
கந்நேர முன்பிறகே யார்வந்தார்?—மன்னவன்மேற் (5)

194. காரியார் நாரியார் கண்டகவி யைப்பகிர
வாரியிலாக் கானகத்தில் வந்தவரார்?—நாரிநெடும் (6)

195. போற்றியுறும் பத்திரற்காப் போந்து கிழவுருவில்
தோற்றி விறகு சுமந்தவரார்?—தேற்றியவற் (7)

196. கீயரிய பொற்பலகை யிட்டவரார்? மற்றவன்றன்
நேயமனே விக்கெதிரா நேர்ந்தவளேப்-போயவையில் (8)

197. தள்ளியிசை தாபிக்கத் தக்கவரார்? தென்மதுரைக்
குள்ளிருந்த சொக்கருனக் குள்ளன்றே? (9)

IX

# நீதி

## நீதிவெண்பா

(நேரிசை வெண்பா)

### ஆசையின் கொடுமை

198. ஆசைக் கடியா னகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியா ஞவனே—ஆசை
தனேயடிமை கொண்டவனே தப்பா துலகம்
தனேயடிமை கொண்டவனே தான். (1)

### தேர்ந்து செயல்

199. செய்யு மொருகருமந் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபஞ் சேருமே—செய்யவொரு
நற்குடியைக் காத்த நகுலனேமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர் துயரம் போல். (2)

### நாவின் நயம்

200. நாவி னுனியி னயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரு நண்ணுவார்—நாவினுனி
ஆங்கடின மாயி னலர்த்திருவுஞ் சேராண்முன்
ஆங்கே வருமரண மாம். (3)

அயலிடத்திற் சிறப்புப் பெறுவன

201. ஆனை மருப்பு மருங்கவரி மான்மயிரும்
கான வரியுகிருங் கற்றோரும்—மானே!
பிறந்தவிடத் தன்றிப் பிறிதொருதே யத்தே
செறிந்தவிடத் தன்றோ சிறப்பு. (4)

அடியார் சிறப்பு

202. ஈசனெதிர் நின்றாலு மீசனருள் பெற்றுயர்ந்த
நேசரெதிர் நிற்ப தரிதாமே—தேசுவளர்
செங்கதிர்முன் னின்றாலுஞ் செங்கதிர வன்கிரணம்
தங்குமண னிற்கரிதே தான். (5)

பொருளினால் வரும் துன்பம்

203. இன்ன றரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பால்
இழத்தலுந் துன்பமே யாம். (6)

பிறர்க்குக் கொடுத்து உண்டல்

204. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லென்றிவர்க்கீந்
தின்புறத்தா னுண்ட லினிதாமே—அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்ட றுன்கவர்மீன்
கொக்கருந்த லென்றே குறி. (7)

கீழோர், மேலோர்

205. மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில் வேறு
வினைவேறு பட்டவர்பால் மேவும்—அனமே!
மனமொன்று சொல்லொன்று வான்பொருளு மொன்றே
கனமொன்று மேலவர்தங் கண். (8)

மேலோர் நட்பு

206. பாலினீர் தீயனுங்கப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர் கண்டமையு மேன்மைபோல்—நூலினெறி
உற்றோ ரிடுக்க ணுயிர்கொடுத்து மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து. (9)

உத்தமர் முதலியோர் இயல்பு

207. உத்தமர்தா மீயுமிடத் தோங்குபனை போல்வரே
மத்திமர்தாந் தெங்குதனை மானுவரே—முத்தலரும்
ஆங்கமுகு போல்வா ரதம ரவர்களே
தேங்கதலி யும்போல்வார் தேர்ந்து. (10)

X

# தனிப்பாடல்கள்

பயனற்றவை

(நேரிசை வெண்பா)

208. மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிகநன்
னாடில்லான் செங்கோ னடாத்துவது—கூடும்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டிர்
விருந்தில்லா வீடு விழல். (1)

பாக்குவெட்டியை இழந்த ஓர் ஏழையின் கூற்று

(ஆசிரிய விருத்தம்)

209. விறகு தறிக்கக் கறிநறுக்க
வெண்சோற் றுப்புக் கடகுவைக்கப்
பிறகு பிளவு கிடைத்ததென்றால்
நாலா றுகப் பிளந்துகொள்ளப்
பறகு பறகென் றேசொறியப்
பதமா யிருந்த பாக்குவெட்டி
இறகு முளைத்துப் போவதுண்டோ
எடுத்தீ ராயிற் கொடுப்பீரே. (2)

சிவபிரான் நடனத்தைப்பற்றிச் சுவைபடக் கூறிய பாடல்

(நேரிசை வெண்பா)

210. நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகா லையாநின்
ஆட்டுக் கிரண்டுகா லானாலும்—நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்
போமோசொல் லாயப் புலி. (3)

### செருப்பின் பயன்

211. கல்லு முறுத்தாது காலின்முட் டையாது
எல்லைமார்த் தாண்டன்கூ டேறுது—தொல்லைவரு
மாலை யிருளில் வழிநடக்கக் கூசாது
காலிற் செருப்பிருந்தக் கால். (4)

### குடையின் பயன்

212. பகலோன் றெறுங்கிரணம் பாய்பறவை யெச்சம்
மிகமே லுறுதகற்றும் விண்ணின்—முகிலதனுல்
பெய்யுமழை யைத்தடுக்கும் பேரழகு மாமொருவர்
கையிற் குடையிருந்தக் கால். (5)

### ஏகவிருத்த ராமாயணம்

(ஆசிரிய விருத்தம்)

213. தாதையார் சொலராமன் காடு போதல்;
சார்ந்துளபொன் மானெனுமா ரீசன் சாதல்;
சீதையார் பிரிவெருவை மரணம் பானு
சேயொடுநட் புக்கோடல்; வாலி வீடல்;
ஓதநீர்க் கடற்பரப்பை யனுமன் றுண்டல்;
உயரிலங்கை நகரெரியால் வேவக் காண்டல்;
பாதகரா மரக்கரெலா மிறக்கத் தாக்கல்;
பாக்கியரா மாயணச்சீர்க் காதை யீதே. (6)

### 'சென்னைக்கு வந்து சிவனுனேன்' என்று ஒரு புலவர் சிலேடை வாயிலாகக் கூறியது

(நேரிசை வேண்பா)

214. சென்னபுரி வந்து சிவனுயி னேனல்ல
அன்னமது காணு தவனுகி—மன்னுசிரங்
கைக்கொண் டரைச்சோமன் கட்டிச் சடைமுறுக்கி
மெய்க்கொண்ட நீறணிந்து மே. (7)

## வாணபூபதியின் பெருமை

(ஆசிரியத் தாழிசை)

215\. தேரு ளைப்புரவி வாரணத் தொகுதி<br>
திறைகள் கொண்டுவரு மன்னநின்<br>
தேய மேதனது நாம மேதுபுகல்<br>
செங்கை யாழ்தடவு பாணகேள்<br>
வாரு மொத்தகுடி நீரு நானுமக<br>
தேச ஞறைநகர் காவலன்<br>
வாண பூபதி மகிழ்ந்த ளித்தவெகு<br>
வரிசை பெற்றுவரு புலவன்யான்<br>
நீரு மிப்பரிசு பெற்று மீளவர<br>
லாகு மேகுமவன் முன்றில்வாய்<br>
நித்திலச் சிகர மாட மாளிகை<br>
நெருங்கு கோபுர மருங்கெலாம்<br>
ஆரு நிற்குமொரு வேம்பு நிற்குமுயர்<br>
பனையு நிற்குமத னருகிலே<br>
அரசு நிற்குமா சைச்சு மந்தசில<br>
வத்தி நிற்குமடை யாளமே. (8)

# உரைநடைப் பகுதி

## 1. கவி வீரராகவ முதலியார்

சற்றேறக்குறைய நானூறு வருஷங்களுக்கு முன்பு தொண்டை நாட்டிலுள்ள பூதூரெனும் ஊரிலே *வீரராகவ முதலியாரென்ற தொண்டைநாட்டு வேளாளத் தமிழ்ப் புலவர் ஒருவர் இருந்தார். அவர் பிறவியிலேயே கண்ணை இழந்தவர். அதனுல் அவர் அந்தகக் கவி வீரராகவ முதலி யாரென்றே வழங்கப் பெறுவர். அவருடைய தந்தையார் பெயர் வடுகநாத முதலியாரென்பது. அவர் முன்னேர்கள் பொன்விளைந்த களத்தூருக்கு அருகிலுள்ள பூதூரில் பரம் பரையாக வாழ்ந்து வந்தனர்.

வீரராகவ முதலியார் இளமை தொடங்கியே கல்வியில் மிக்க ஊக்கமுடையவர். தம்முடைய முதுகில் எழுதச் சொல்லி எழுத்துக்களை அவர் கற்றனரென்று பெரியோர் சொல்லுவர். காஞ்சீபுரத்தில் இருந்தவரும் கந்தபுராணத்தை இயற்றியவருமாகிய கச்சியப்ப சிவாசாரியரிடத்தில் முதலி யார் பாடங்கேட்டனரென்று சிலர் கூறுவதுண்டு. அவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகப் பயின்ருர். கம்பராமாயணத்தில் அவருக்கு மிக்க அன்பு உண்டாயிற்று. அதனை முற்றும் ஐயந்திரிபறப் படித்து மனனம் செய்தார். அதிலுள்ள செய்யுட்களும் செய்திகளும் அவருக்கு அங்கை நெல்லிக்கனிபோல விளக்கமாகத் தெரிந்தன.

யாவரும் வியக்கும்படி கவிபாடும் திறமை அவருக்கு அமைந்திருந்தது. சைவ சமயத்திற் பற்றுடையவராதலின் பல தலங்களிலுள்ள சிவபிரான்மீது சில பிரபந்தங் களை அவர் இயற்றினர்; திருக்கழுக்குன்றப் புராணத்தைத்

---

* அவர் பிறந்த ஊர் பொன்விளைந்த களத்தூர், உழலூர் என்றும் கூறப்படும்.

தமிழிற் பாடினுர். பின்னும் பல நூல்கள் அவரால் இயற்றப்பெற்றுள்ளன.

ஒருநாள் காலையில் அவர் வெளியே புறப்படுகையில் நீராடுதற்காக வெந்நீர் வைத்திருக்கும்படி தம் மனைவியாரிடத்தில் சொல்லிவிட்டுப் போனுர்; சில நாழிகை யளவில் வீட்டுக்குத் திரும்பி வந்தார்; வந்தவுடன் நீராட எண்ணினுர்; அவர் தேவியார் நீரைக்கொணர்ந்து வைத்தனர். தொட்டுப் பார்க்கையில் அது சூடற்றதாக இருந்தது. "இது வெந்நீராக இல்லையே; தண்ணீராக இருக்கிறதே" என்று முதலியார் கூறினுர். அதுகேட்ட அவர் மனைவியார், "உங்களுடைய சம்பாத்தியத்துக்கு இந்த ஜலம் போதாதோ!" என்று சற்று இகழ்ச்சியுடன் சொன்னுர். அவ்வுரை செவியிற் பட்டபோது அக்கவிஞரது உள்ளம் மிக வருந்தியது. "நம் கல்வியின் மதிப்பை யறியாது அறிஞர்களால் மதிக்கப்படாத செல்வத்தை நினைத்தன்ருே இவள் நம்மை அவமதிக்கிருள். இனி இங்கே இராமல் எங்கேனும் சென்று இதுகாறும் பெருத பெருஞ்செல்வத்தைப் பெற்று வருவோம்" என்று அவர் உறுதிகொண்டார். ஆனுல் தம்முடைய கோபத்தை ஒரு சிறிதும் வெளியிடாமல் மறுநாள் மாணுக்கன் ஒருவனை அழைத்துக்கொண்டு வெளியூர் போய் வருவதாக மனைவியாரிடம் சொல்லி வீட்டைவிட்டுப் புறப்பட்டார். "கற்ருேர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு" என்பதை அவர் நன்கு அறிந்தவர். தமிழ் பயில்வார் யாரையும் நண்பராகச் செய்து அவர்களால் நன்மை பெறலாமென்ற துணிவு அவருக்கு இருந்தது.

அக்காலத்தில் இலங்கையை அரசாண்ட பரராச சேகரரென்ற அரசர் தமிழ் நன்கு பயின்றவரென்றும் தமிழ் வித்துவான்களை அவர் தாய்போலப் போற்றி வருபவரென்றும் வீரராகவர் அறிந்தார். அவ்வரசர் பரராச சிங்கமென்றும் வழங்கப் பெறுவார். அவரிடம் எங்ஙனமேனும் சென்று தம் கவிப்புலமையை வெளிப்படுத்தித் தக்க பரிசுகளைப் பெற்று வரலாமென்று கவி வீரராகவர் எண்ணினுர்.

எண்ணியபடியே மரக்கலத்தின் உதவியால் கடலைக்கடந்து இலங்கைக்குச் சென்றார்; பராச சேகரர் அரசாளும் இராசதானியை அடைந்து அவரது அரண்மனையை நண்ணினார். கற்றவர்கள் யார் வரினும் அரசருடைய கட்டளையின் படி அங்குள்ள ஏவலாளரும் அதிகாரிகளும் அவர்களுக்கு ஆவன செய்து உபசரித்தல் வழக்கம். அங்ஙனமே கவிஞராகிய வீரராகவருக்கும் உபசாரங்கள் நடைபெற்றன. "ஏவலாளர்களே இத்தகைய நல்லியல்புடையவர்களாயின் அரசர் எப்படி இருப்பாரோ! அவரோடு பழகுவதே ஒரு பேரூதியமாக இருக்கும்" என்ற எண்ணம் முதலியாருக்கு அப்போது உண்டாயிற்று. அரசரோடு பேசவேண்டுமென்ற ஆவல் அவருக்கு வரவர அதிகரித்தது.

முதலியாருடைய வரவை அரசருக்கு ஆங்குள்ளோர் அறிவித்தனர். அவருக்குக் கண்ணில்லையென்பதையறிந்த பொறாமைகொண்ட சில புலவர்கள், "குருடர்களை அரசர் பார்த்தல் கூடாது" என்று கூறி அதற்குரிய சில ஆதாரங்களையும் காட்டினர். அரசருக்கோ புலவரைக் கண்டு பேச வேண்டுமென்ற விருப்பம் பெரிதாக இருந்தது. தமிழருமை யறிந்தவராதலால் அவ்வரிய வித்துவானுடன் பேசி மகிழ்வதை இழக்க அவர் விரும்பவில்லை. அப்பால் உடனிருந்த சிலர், "இடையிலே திரையிட்டுப் பேசலாம்" என்று சமாதானமாக ஒரு வழி சொன்னார்கள். அரசருக்கு அங்ஙனம் செய்வதில் முழு விருப்பமும் இல்லாவிடினும் முதியோர் சிலர் பழைய வழக்கமென்று கூறவே அதற்கு இணங்கினர்.

இதற்கிடையே வீரராகவ முதலியாரிடம் யாரோ சிலர் வந்து, "அரசர் குருடரைப் பார்க்கமாட்டார். நீங்கள் ஏதேனும் பாடலை எழுதி யனுப்பிவிட்டுக் கிடைக்கும் பரிசைப் பெற்றுச் செல்லவேண்டியதுதான்" என்று கூறினர்கள். அதைக்கேட்ட தமிழ்ப்புலவர், "இவ்வளவுதூரம் வந்தும் நம் கருத்து நிறைவேறுமற் போகும்போலிருக்கிறதே! இராமேசுவரம் போனாலும் சனீசுவரன் பின்னோடே

யென்பதுபோல நம்முடைய அதிர்ஷ்டம் நம்மைத் தொடர்ந்தே வருகிறதே! இந்த அரசர் மிக்க தமிழன்புடையவரென்றல்லவோ கேள்வியுற்று வந்தோம்! கடவுள் என்ன வழி விடுவாரோ!'' என்றெண்ணிக் கலங்கி இறைவனது திருவருளை நினைந்திருந்தனர்.

அப்பால் அரசர் அழைப்பதாக ஒருவர் வந்து முதலியாரை அழைத்துச் சென்றனர். ஆனால் அரசரை நேரிற் பார்க்கமுடியாதபடி ஒரு திரை போடப்பட்டிருந்தது. புலவருடன் வந்த மாணாக்கன் மிகவும் கூரிய அறிவுடையவன். அரசரைப் பார்க்க வந்தபோது அவரைக் காணுமல் திரைமட்டும் இருப்பதை அவன் கண்டு வியந்தான்; அதனை ஆசிரியர் பெருமானுக்குத் தெரிவிக்க எண்ணினான்; உடனே, "சிவ சிதம்பரம்'' என்று உரக்கச் சொன்னான். பக்தியினால் அவன் அங்ஙனம் கூறுவது வழக்கம்போலுமென்று அரசரும் அங்கிருந்த ஏனையோரும் அப்போது எண்ணினர். ஆனால் அவன் அங்ஙனம் கூறுவது வழக்கமில்லையாதலால் ஏதோ ஒரு குறிப்போடு அதை அவன் சொல்லியிருக்க வேண்டுமென்று புலவர் கருதினார். குருடராகிய தம்மை அரசர் பார்க்கமாட்டாரென்று சிலர் கூறியதும் அப்போது அவர் நினைவுக்கு வந்தது. சிதம்பரத்தில் இரகசியத்தைத் திரையிட்டு மறைத்திருத்தல்போல அங்கும் திரையிடப்பட்டுள்ளதென்று அறிந்துகொண்டார். உடனே அவர்,

> "நரைகோட் டிளங்கன்று நல்வள நாடு நயந்தளிப்பன்
> விரையூட்டு தார்ப்புயன் வெற்பீழ மன்னனெனன் றேவிரும்பிக்
> கரையோட்ட மீதின் மரக்கலம் போட்டுன்னைக் காணவந்தால்
> திரைபோட்டு நீயிருந் தாய்சிங்க பூப சிரோமணியே''

என்னும் செய்யுளைச் சொன்னார்.

ஒருவிதமான பேச்சும் பேசாமல் வந்தவுடனேயே இந்தப் பாட்டை வித்துவான் சொல்லவும் அரசர் திடுக்கிட்டார்; "திரையிடப்பட்டதை இவர் எங்ஙனம் அறிந்தார்! இவர் குருடர் அல்லர்'' என்று எண்ணினார்; "இவர் குருட

ரென்பது உண்மையாயின் தெய்விக சக்தி பெற்றவராக இருக்கவேண்டும்; இவரை நேரிற்பாராமல் பேசுவது பிழை" என்று தீர்மானித்தார். உடனே திரை எடுக்கப்பட்டது.

மன்னரும் புலவரும் மனங்கலந்து பேசினர். இருவரும் பலநாட்பழகியவர்போன்ற அன்பு பூண்டனர். கவி வீரராகவர் பலநாள்வரை அங்கேயிருந்து அரசரால் உபசரிக்கப் பெற்றார்; கம்பராமாயணத்தில் அவதானம் செய்து காட்டினார். இன்ன விஷயம் இன்ன காண்டம், இன்ன படலம், இன்ன செய்யுளில் சொல்லப்பட்டிருக்கிறதென்று ஒருவர் கேட்கும் வினாவிற்கு உடனே விடை கூறுவது அந்த அவதானமாகும். இங்ஙனம் பலர் கம்பராமாயணத்திலுள்ள பல விஷயங்களைக் கேட்டனர். அவற்றிற்கெல்லாம் உரிய விடைகளை அளித்து அக்கவிஞர் எல்லோரையும் மகிழ்வித்தனர்; அப்பால் அரசர் விரும்பியபடியே இராமாயண வண்ணமொன்று பாடினர். அரசர் அவருடைய பேராற்றலை அறிந்து வியந்து போற்றினார்; அவரைப் பாராட்டிச் சில செய்யுட்களையும் பாடினார்.

சில தினங்களுக்குப் பிறகு முதலியார் விடை பெற்றுக் கொண்டு அவ்வரசர் வழங்கிய யானையையும் நாட்டையும் பெற்று ஊருக்குத் திரும்பினார்.

வீடு வந்தவுடன் தம் தேவியாரை அழைத்து, "யானைக் கன்றும் வளநாடும் பெற்ற எனக்கு வெந்நீர் வேண்டுமா வேண்டாமா?" என்று கேட்டார். மனைவியார் அவரைப் பலநாள் பிரிந்து வருந்தினவராதலின் தாம் செய்த பிழைக்காக வருந்தி அழுதனர்; பிழை பொறுக்கவேண்டுமென்று பணிந்து வேண்டினார். தம் மனைவியாரின்பால் மெய்யன்புடைய கவிஞர், "நீ அப்படிச் சொன்னதனாலன்றோ என்னுடைய புகழ் கடல்கடந்து பரவியது! நமக்கும் செல்வம் உண்டாயிற்று" என்று கூறி மகிழ்ந்தார்.

## 2. மாணுக்கர்களுக்குத் தலைமையாசிரியர் கூறிய அறிவுரை

அன்பார்ந்த இளைஞர்களே,

சில விஷயங்களை நான் உங்களுக்கு மனத்தில் நன்ருகப் பதியும்படி இன்று கூற விரும்புகிறேன். எல்லாம் வல்ல இறைவன் உங்களுக்குப் பல நலங்களையும் அருள்புரிவாஞக.

உங்களுடைய பெற்ருேர்கள் உங்களை இங்கே அனுப்பிய தன் காரணத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். பிறந்த காலந்தொட்டு உங்களுக்காக அவர்கள் படும்பாட்டையும், உங்கள் நன்மைக்காக அவர்கள் மேற்கொள்ளும் கவலைகளையும் நீங்கள் அறிவீர்கள். நீங்கள் படித்துவருவது கண்டு அவர்கள் அளவுகடந்த இன்பம் அடைகின்றனர். நீங்கள் நல்லவர்களென்றும், கல்விமான்களென்றும், குணசாலிகளென்றும் பிறர் சொல்லக் கேட்பதைக் காட்டிலும் அவர்கள் அடையும் ஆனந்தம் வேறு யாது உளது?

மாணவர்களே, இளமையின் பெருமையை நீங்கள் நன்ருக உணர்ந்திருப்பீர்களோ வென்று ஐயுறுகின்றேன். நம்முடைய நாட்டில், 'இளமை நலமுடைய முருகனையும், கண்ணனையும் போன்ற தெய்வங்களை மக்கள் எவ்வளவு மேன்மையாகக் கொண்டாடுகின்றனர்?' என்பதை ஆராய்ந்து பாருங்கள். ஒரு மனிதனுக்குரிய பருவங்களுள் இளமையே மிகவும் சிறந்தது.

ஒரு பூந்தோட்டத்திற்குள் நாம் செல்வோமாஞல் நம் மனத்தைக் கவர்வன ஆங்குள்ள இளந்தளிர்களும் அன்றலர்ந்த பூக்களுமே யல்லவோ? இளஞ்செடிகளையும் கொடிகளையும் காணும்போது நமக்குண்டாகும் ஆநந்தம் பழுத்த இலைகளையுடைய முதிய மரங்களைக் காணும்போது உண்டாகின்றதா? இல்லையே. ஏன்? இளமையே அழகு, ஒளி, வன்மை, கவர்ச்சி முதலியவற்றிற்கு இருப்பிடம். அதுவே நாளடைவில் வளர்ந்து உலகத்தில் விளங்கப்போகின்றது. முதுமை உடல் தளர்ந்து, நரைதிரைகளையுடைய மூப்பை

யடைந்துபெருமூச்செறிந்து, ஓய்விடத்தைத் தேடுகின்றது. இளமையோ ஊக்கத்துடனும் மனத்திண்மையுடனும் தலை நிமிர்ந்து உலக ஆட்சியை ஏற்றுக்கொள்ள நிற்கின்றது. அத்தகைய இளமை நலம் இப்போது உங்களிடம் இருப்பதால் நீங்கள் பாக்கியசாலிகளாவீர்கள். பிராயம் சென்ற உங்கள் பாட்டன்மார்களும், பெற்றோர்களும், உங்கள் கைகளில் உலக வியவகாரத்தை ஒப்பித்துவிட்டு ஓய்ந்திருக்கவும் ஒதுங்கிவிடவும் காத்திருக்கின்றனர். ஆதலால், உங்களுக்கென அமைந்துள்ள பெரிய காரியங்களை எண்ணிப்பாருங்கள். உலக ஆட்சிக்குரிய தலைமையிடம் உங்களுக்காக ஒழித்துவைக்கப்பட்டிருக்கிறது. அதில் ஏறிப் பெருமிதத்துடன் வீற்றிருந்து உலக ஆட்சியை நன்கு செலுத்தி நல்ல பெயர் வாங்கவேண்டுமென்ற அவா உங்கள் ஒவ்வொருவர் மனத்திலும் இப்பொழுது பொங்கி வழியவேண்டும்.

இன்னுமொரு விஷயம் உங்களுக்குச் சொல்ல விரும்புகின்றேன். மனிதன் மிக்க ஆற்றல் படைத்தவன் என்பதை நீங்கள் இப்பொழுது முதலே அறியவேண்டும். அவனால் ஆகக்கூடாதது ஒன்றுமே யில்லை. அசாத்திய மென்று நினைப்பது எதுவும் அளவற்ற முயற்சியால் சாத்தியமாகக் கூடியதே.

ஆனால் எல்லோரிடத்தும் அத்தகைய ஆற்றல் ஏன் வெளிப்படவில்லை யென்று கேட்கலாம். அதற்குக் காரணம் அறியாமையும், சோம்பலுமேயாம். முயற்சியுடையார்க்கு இகழ்ச்சியுண்டோ? நீங்கள் உங்கள் ஆற்றலையறிந்து அதனை வளர்க்கும் முறைகளைப் பயின்று முயலுவீர்களே யானால் உங்களை வெல்வார் எவரும் இலராவர்.

வித்தியார்த்திகளே! உங்களுக்கு உள்ள ஆற்றல்களைத் தெரிவிக்கவும் அவற்றை வளர்க்கவுமே பாடசாலைகள் இருக்கின்றன. ஆதலால், உங்கள் பெற்றோர்கள் உங்களை இங்கே அனுப்பியுள்ளார்கள். எங்களால் இயலுமட்டும் உங்கள் வளர்ச்சிக்கு உதவுவோம். ஆனால், 'குதிரையைத் தண்ணீர் இருக்குமிடத்துக்குக் கொண்டுபோகலாமே யல்லாமல்

குடிக்கச்செய்வது இயலாது' என்றபடி, நீங்களே உங்கள் ஆற்றலை வளர்த்துக்கொள்ள வேண்டும். நாங்கள் நல்ல துறைகளைக் காட்டுவோம்; அவற்றை மேற்கொண்டு பயனடைய வேண்டியது உங்களுடைய கடமை.

இக்கலாசாலையில் உங்களுக்கு அமைந்திருக்கும் உபாத்தியாயர்கள் பல்லாற்றானும் மேம்பட்டவர்கள். அவர்கள் குலம், அருள், தெய்வ பக்தி, மேன்மை, கட்டுரைவன்மை, உலகியலறிவு முதலிய பல சிறந்த இயல்புகள் வாய்ந்தவர்கள். உங்களிடம் அவர்களுக்கு உள்ள அன்புக்கோ அளவில்லை. அவர்கள் செய்யும் நன்றியை நீங்கள் உணர்வதெப்படி? அவர்களிடம் நிறைந்த பக்தி கொள்வதே அவ்வுணர்ச்சிக்கு அறிகுறியாகும். குருவைத் தெய்வமாக வணங்குவது நமது நாடு. அவ்வாறு வணங்கி வந்தமையால் நம் முன்னோர்கள் அடைந்த பேறும் பெருமையும் அளவற்றன. வணக்கமுள்ள அறிவாளிக்கு இயல்பாகவே நல்ல வழியிற் செல்லும் ஆற்றல் உண்டாகிறது. அவன் கண்களுக்கு நுண்ணிய பொருள்களும் தெள்ளிதிற் புலப்படுகின்றன.

நீங்கள் உபாத்தியாயர்களுக்கு அடங்கியிருப்பது போலவே கலாசாலைச் சட்டங்களுக்கும் அடங்கி நடக்க வேண்டும். வேலைகள் ஒழுங்காக நடைபெறவும், கலாசாலைக் கல்வியால் நீங்கள் முழு நன்மையைப் பெறவும் அவ்விதிகள் அமைக்கப்பெற்றுள்ளன. அவற்றைக் கடவாமல் நடப்பீர்களானால் உங்கள் இயல்பு திருத்தமுறும். பிறகு உலக வாழ்க்கையில் நீங்கள் நல்ல மதிப்புள்ள கனவான்களெனப் பெயர் பெறலாம்.

இக்கலாசாலையில் நீங்கள் கற்றுக்கொள்ளும் கல்வியை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன உடற்கல்வி, மனக்கல்வி, ஒழுக்கக்கல்வி என்பனவாம்.

கல்விகளுள் உடற்கல்வி அடிப்படையானது. சுவர் வைத்துக்கொண்டுதானே சித்திரம் வரையலாம். ஒருவன் சிறந்த கல்விமானாகி உடல்நலம் வாய்க்கப் பெறுமற்

போவானுனல் அவன் பெறும் பயன் என்ன? திடசரீர முள்ளவனே தனக்கும் பிறர்க்கும் பயன்படுகின்ருன். வாழ்க்கையில் உண்டாகும் இன்னல்களைப் பொறுப்பதற்கு உடல் உரம் பெற்றிருத்தல் இன்றியமையாததாகும்.

நல்லுணவும், நற்காற்றும், நற்பயிற்சியும் பெருதவர்கள் உடல் வலிமையும் பெறமாட்டார்கள். ஆதலால் நீங்கள் இக்கலாசாலையில் அமைக்கப்பெற்றிருக்கும் உடற்பயிற்சிக ளுக்குரிய துறைகளில் நன்கு பயிற்சி பெறவேண்டும். உங்க ளையே உங்கள் குடும்பமும் நாடும் நம்பியுள்ளன என்பதை மறவாதீர்கள்.

மனத்தைப் பழக்குவதற்குரிய பலவகை நூல்களைக் கற்றலே மனக்கல்வி யாகும். "வைத்ததொரு கல்வி மனப் பழக்கம்" என்று ஔவையார் கூறியிருக்கின்ருர். மனக் கல்விக்கு வேண்டிய பலவகைப் பயிற்சிகள் இங்கே உங்க ளுக்காக அமைக்கப்பெற்றிருக்கின்றன. தாய்மொழி, அரசியல்மொழி, பிறமொழிகள் இங்கே கற்பிக்கப்படுகின் றன. கணிதம் முதலிய பலவகைக் கலைகளும் உலகிய லறிவினை வளர்க்கும் பாடங்களும் முறையாகப் போதிக்கப் படும். 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்' என்ற பழமொழிப்படி இச்சந்தர்ப்பங்களை யெல்லாம் உப யோகித்துக்கொள்ளல் வேண்டும். இளமையே கல்விக் குரிய காலம். 'பருகுவன் அன்ன ஆர்வத்தனுகிச் செவி வாயாக, நெஞ்சுகளனுகக் கேட்டவை கேட்டவை விடா துளத்தமைத்துக் கற்பவரே' எளிதில் கல்வியை அடைய முடியும். அன்னப்பறவை போன்று தீயவற்றை நீக்கி நல்லவற்றை ஏற்றும், ஆவைப்போன்று ஓரிடத்திலிருந்து அமர்ந்து கற்றும் நீங்கள் பயின்று வருதல் வேண்டும். உலகம் கற்ருேர்க்கே சிறப்பிடந்தருகிற தென்பதை நீங்கள் தினமும் கண்டுகொண்டே வருகிறீர்கள். கல்வியாளன் உல குக்குத் தன்னறிவால் இன்னவிதத்தில் உதவுகின்ருனென் பதையும் நீங்களறிவீர்கள். கல்வி கற்குங்கால் நும்மினுங் கற்ருேரைக் கண்டு நீங்கள் மனந்தளர்ந்து மேலுங் கற்க

முற்பட வேண்டும். கல்வியில் உங்கள் ஊக்கம் சிறிதும் தளராதென்று நான் உண்மையாய் நம்புகின்றேன்.

உடற் கல்வியினுல் ஒருவன் மனக் கல்விக்குரிய நிலையை அடைகின்றுன். அப்பால் மனக்கல்வியினுல் ஒழுக்கப் பயிற்சியாகிய பயனை யடைகின்றுன். இவ்விரண்டு பயிற்சிகளில் மேலானது ஒழுக்கப் பயிற்சியே. இக்கலாசாலையின் நோக்கம் உங்களைக் கனவான்களாக்க வேண்டுமென்பதே. ஒழுக்கம் இன்னதென்று சொற்களால் சொல்ல முடியாது. ஆனுல் எவ்வித நடையும், பாவனையும், பேச்சும் பிறரை மகிழ்வித்து உங்களுக்கு அவர்களது மதிப்பைத் தருமோ அவையே நல்லொழுக்கம் என்று அறியுங்கள். ஒழுக்கமில்லாதவன் உடல்நலனும், மனநலனும் பெற்றுப் பயனில்லை. நற்பழக்கமே நல்லொழுக்கத்துக்கு வழி; இக்கலாசாலையில் உங்களுக்கு உயரிய பழக்கங்கள் வருவதற்கு வேண்டிய வழிகள் பல உண்டு. அவற்றில் உங்களை ஒழுகச் செய்வதில் நாங்கள் கண்ணுங் கருத்துமாயிருப்போம். நீங்களும் அவற்றிற் கருத்துக்கொண்டு பழகுதல் மிகவும் இன்றியமையாதது.

உங்கள் கல்வியானது வகுப்பறையில் மட்டும் இருப்பதன்றென்றும் உங்கள் கலாசாலை வாழ்க்கையின் ஒவ்வொரு பிரிவிலும் அமைந்துகிடக்கிறதென்றும் உங்களுக்குச் சொல்லவே உங்களை இன்று கூட்டினேன். இக்கலாசாலையில் நீங்கள் பயிலும் காலம் ஒரு நீண்ட திருவிழாவைப் போல் இன்பமுடையதாகவே இருக்கும். நீங்கள் இக்கலாசாலையின் பெயரை மேலோங்கச் செய்வீர்களென்றும், இதனைவிட்டு வெளியேறும் காலத்தில் நம் நாட்டின் மக்களுக்கு இயற்கையாயமைந்து, பல்லாயிரம் ஆண்டுகளாக உங்கள் பெரியோர்களால் காப்பாற்றப் பெற்றுவரும் நன்மதிப்பை நீங்கள் பின்னும் மேலோங்கச் செய்வீர்களென்றும் நம்பி, மறுமுறையும் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். கடவுள் உங்களைப் பாதுகாத்து உங்கள் நன்முயற்சிகளுக்குத் துணைபுரிவாராக!

## 3. சங்கீதத்தின் பெருமை

இளமையிலேயே குழந்தைகளுக்குச் சங்கீதத்தில் ஒரு கவர்ச்சி ஏற்படுகின்றது. அது குழந்தைகளுடைய நிர்மல மான மனத்தை இழுக்கின்றது. பசுக்களையும், பாம்புகளை யும் பாட்டும் வசப்படுத்துமென்று சொல்லுகிறார்கள். "ஆடிக் கறக்கும் மாட்டை ஆடிக் கறக்கவேண்டும்; பாடிக் கறக்கும் மாட்டைப் பாடிக் கறக்கவேண்டும்" என்பது ஒரு பழமொழி. சில மாடுகள் எவ்வளவு துஷ்டத்தனம்செய்தா லும் பாடிக்கொண்டே கறந்தால் அவை சாதுவாக நின்று பால் கறப்பதற்கு ஒரு தடையும் செய்வதில்லை. பசுக்களை ஆனயநாயனாரும், கண்ணபிரானும் சங்கீதத்தால் வசப் படுத்தினார்கள். ஆனயநாயனார் பசுபதியையும் வசமாக் கினார்.

கண்ணன் தன் புல்லாங்குழலை ஊதிச் செய்த அற்புதச் செயல்கள் பல. பாகவதத்தில் கண்ணன் வேய்ங்குழல் ஊதிய அத்தியாயமென்று ஒரு தனி அத்தியாயம் இருக் கிறது. திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காரென்பவர், "ஆக்குவித்தார் குழலால் அரங்கேசர்" என்று பாடுகின்றார். பல்லாயிரக் கணக்காக மேய்ந்துகொண்டிருக்கும் பசுக்களை மாலைக் காலத்தில் ஒருங்கே வருவித்து வீட்டிற்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்குக் கண்ணன் தன்னுடைய வேய்ங்குழற் கீதத்தை உபாயமாகக் கொள்ளுகின்றானாம். அவனுடைய வேணுகானத்தைக் கேட்ட மாடுகள் ஒன்று பட்டு அவனைச் சுற்றிக் கூடுகின்றன. அப்படியே அவற்றை ஊருக்கு ஓட்டிச் செல்லுகிறான்.

அழகர் கலம்பகம் என்ற பிரபந்தத்தில் கண்ணன் வேய்ங்குழல் ஊதிய சிறப்பை ஒரு கவிஞர் மிக அழகாக வருணிக்கின்றார்.

"கண்ணனுடைய குழலோசையினால் நீளத் திரிந்துழன்ற மேகம் தடைப்பட்டு, அவ்வோசையின் குளிர்ச்சியினால் குறுந்துளிகளைத் துளிக்கின்றது; அப்பொழுது பந்தலி

லிருந்து பன்னீர்த் துளிகள் துளிப்பதுபோன்ற காட்சி உண்டாகின்றது. பின்னும் கண்ணனது கானமிருதமானது பசுக்கள் தின்பதற்காக இடையர்கள் வெட்டிய மரங்களைத் தழைக்கச் செய்கின்றது. இடையர்கள் மரங்களை முழுவதும் அறும்படி வெட்டமாட்டார்கள்; அப்படியே சாய்ந்து தொங்கும்படி வெட்டப்பட்ட கிளையிலுள்ள தழையை ஆடுகளும் மாடுகளும் தின்னும். அங்ஙனம் தின்றதினால் தழையற்று மொட்டையாக இருந்த கிளைகள் தழைத்து, அலர்ந்து, பழுத்து, அப்பழங்களை விரும்புவோருக்குத் தாழ்ந்து உதவுகின்றன. புலிகளும் பாம்புகளும் தம்முடைய கொடுமையை மறந்து குழலோசையில் ஈடுபட்டுக் கிடக்கின்றன; கருங்கல் வெண்ணெயைப்போல உருகி வழிகிறது; கன்றை நினைந்து ஓடிவந்த பசுக்கள் தம் உணர்ச்சியையிழந்து மெய்மறந்து நிற்கின்றன." இத்தகைய நிலையில் கண்ணன் குழலூதுகின்றான்.

வண்டிக்காரர்கள் பாடும் தெம்மாங்கில் ஈடுபட்டு வண்டிக்காளைகள் மிகவும் பாரமான சுமையுடன் வண்டியை இழுத்துச் செல்கின்றன. குழந்தைகள் தம் தாய்மார் பாடும் தாலாட்டுப் பாட்டில் மதிமயங்கித் தம் சண்டித்தனத்தை நீத்து உறங்குகின்றன.

சங்கீதத்தைப் பாதுகாக்கவேண்டியது இளைஞர் கடமை. அதற்கு முக்கியமான சாதனம் நல்லொழுக்கம். மிகவும் நன்றாக இருந்த சாரீரம் ஒழுக்கக் கேட்டால் சீக்கிரத்தில் கெட்டுப்போய்விடும். சங்கீதப் பயிற்சிக்கு ஆகார நியமம் அவசியமாகும். கண்ட கண்ட ஆகாரங்களைக் கண்டபொழுதெல்லாம் உட்கொள்வது சாரீரத்தைக் கெடுத்துவிடும். மகா வைத்தியநாதையரென்னும் சங்கீத வித்துவான் ஆகார நியமத்தில் தவறியதேயில்லை. அவர் சரீரத்தை மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துவந்ததனால்தான் அவருடைய சாரீரம் அவர் சொன்னபடி கேட்டது. சிறுபிராய முதற்கொண்டு சங்கீத அப்பியாசம் செய்தவர்களுள் அவர் ஒருவர்.

ஞானசம்பந்தரும், நம்மாழ்வாரும் சிறுபிராயத்திலே கடவுளைத் தம்முடைய பாட்டுக்களால் வசப்படுத்தினார்கள்.

சங்கீதத்தால் மனவருத்தமும் நோய்வருத்தமும் போய் விடும். இதைப் பல சமயங்களில் பலர் உணர்ந்திருக்கக் கூடும். திருவாவடுதுறை ஆதீனகர்த்தராக இருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகரவர்கள் ஒரு சமயம் வாயுப் பிடிப்பினால் உபத்திரவமடைந்தார்கள். அப்போது ஒருநாள் பெரிய வைத்தியநாதையரென்ற சங்கீத வித்துவானுடைய சங்கீதத்தைக் கேட்டு நோயின் துன்பத்தை அவர்கள் மறந்தார்கள்.

காவடிச்சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியாருக்கு இலக்கிய இலக்கணங்களில் அதிகமாகப் புத்தி செல்லவில்லை; புதிய செய்யுள் இயற்றுவதிலேயே அது போய்க்கொண்டிருந்தது. அவரை ஆதரித்துப் போற்றியவர் ஊற்றுமலை ஜமீன்தாராகிய ஹிருதயாலய மருதப்பத்தேவரென்பவர். அந்த ஜமீன்தார் தமிழ்ப் பயிற்சியுடையவர்; அவர் ஒரு சமயம் கழுகுமலைக்குக் காவடியெடுக்கும் பிரார்த்தனை செய்து கொண்டார். அதன்படி காவடி யெடுத்தபோது அண்ணாமலை ரெட்டியாரும் உடன் சென்றார். ரெட்டியார் அதற்கு முன் தாம் இயற்றிவைத்திருந்த காவடிச்சிந்தை வழிநெடுகப் பாடிக்கொண்டே சென்றார். அதைக்கேட்டு இன்புற்ற ஜமீன்தாருக்கு வழிநடையில் உண்டான சிரமமே தோற்ற வில்லையாம்.

பண்டைக்காலத்தில் நமது நாட்டில் பல வீரர்கள் இருந்தனர். போர்க்களத்தில் புண்பட்டு விழுந்த வீரர்களை அவர்களுடைய மனைவிமார் சென்று பாதுகாப்பார்கள். அப்பொழுது அவர்கள் இனிய பாடலைப் பாடுவார்கள். அவற்றைக் கேட்டு அவ்வீரர்கள் தம்முடைய புண்ணால் உண்டாகும் வருத்தத்தை மறந்து விடுவார்கள். இந்த வரலாறு புறப்பொருள் வெண்பாமாலையென்னும் புத்தகத்தில் சொல்லப்படுகிறது. ஆகவே சங்கீதமும் ஒரு மருந்தாக உபயோகப்படுமென்பதை நாம் அறிகிறோம்.

இசையைப்போன்ற வித்தை வேறில்லை. எல்லா வித்தைக்கும் தலைவராக இருக்கும் சிவபெருமான் சங்கீதத்தில் அதிக பக்ஷபாதமுடையவராக இருக்கிறார். சங்கீதத்துக்கு மூலமாகிய சாமகானத்தை அவர் எப்பொழுதும் செய்துகொண்டிருக்கிறார். கம்பளர், அசுவதரர் என்ற இரண்டு கந்தர்வர்களை அவர் இரண்டு தோடுகளாகத் தம் திருச்செவியில் அணிந்துகொண்டு எப்பொழுதும் அவர்களுடைய கானத்தைக் கேட்டு மகிழ்ந்துகொண்டிருக்கிறார். அப்படிக் கேட்டுக்கொண்டிருந்தால் மற்றவர்களுடைய தோத்திரங்களையும், நம்முடைய குறைகளையும் எப்படிக் கேட்பாரென்ற சந்தேகம் தோன்றலாம். அவருடைய செவிகள் நம்முடையவை போன்றன அல்ல. அவர் எங்கும் செவியுடையவர். ஆயிரம் முகம், ஆயிரம் தலை, ஆயிரம் பாதமுடையவர் என்று வேதம் கோஷிக்கிறது. "என்றும் செவியுடையாய் கேளாயோ" என்று ஓர் அன்பர் அவரை விளித்துக் கூறியிருக்கிறார். ஆதலின் உலகத்தில் உண்டாகும் எல்லா ஒலிகளையும் அவர் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறார். ஆயினும் சங்கீதத்தைத் தாமே விரும்பி எப்பொழுதும் கேட்கிறார். அவர் தாமே வீணை வாசிக்கிறார். "எம்மிறை வீணை வாசிக்குமே" என்பது தேவாரம். தக்ஷிணாமூர்த்தி பேதங்களில் வீணா தக்ஷிணாமூர்த்தியென்பது ஒன்று. அந்த மூர்த்தி எப்பொழுதும் வீணை வாசித்துக்கொண்டேயிருக்கும் கோலத்தில் இருக்கும்.

நம்முடைய தமிழ்நாட்டில் பண்கள் திறங்கள் என்ற வரையறை சங்கீதத்தில் உண்டு. ஸம்பூரண ராகத்தைப் பண்ணென்றும், ஜன்ய ராகத்தைத் திறமென்றும் சொல்லி வந்தார்கள். ஆகமங்களில் உத்ஸவத்தில் திக்பந்தன காலத்தில் இன்ன திக்கில் இன்ன பண்ணைப் பாடவேண்டுமென்ற வரையறை யிருக்கிறது. இதனால் பண்களின் பழமையை உணரலாம். தமிழ்நாட்டில் இருந்த பண்களை யமைத்தே தேவாரங்கள் பாடப்பட்டன; திவ்விய பிரபந்தமும் அத்தகையதுதான்; ஆயினும் இக்காலத்தில் புத்தகங்களில் ஒவ்

வொரு பாட்டுக்கும் தனித்தனியே ராகம் அமைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு பண்ணையும் இன்ன இன்ன காலத்திற் பாடவேண்டுமென்ற வரையறையும் உண்டு. எல்லாக்காலத்திற்கும் பொதுவான பண்களும் உள்ளன.

ஒரு பெரிய செல்வருடைய பாதுகாப்பில் இருந்த சங்கீத வித்துவான் ஒருவர் காலம் மாறி ராகங்களை வாசித்தார் "ஏன் இப்படி மாறி வாசிக்கிறார்?" என்று அந்தச் செல்வர் கேட்டார். அருகிலிருந்த ஒரு புலவர், "எல்லாம் உங்களால்தான் ஏற்பட்டன; அவருக்குக் கவலையேயில்லாமல் விருந்துபண்ணி வைத்ததனால் அவர் வித்தையையே மறந்து விட்டார்; இரவில் வாசிக்கிறதைக் காலையில் வாசிக்கிறார்; காலையில் வாசிக்கிறதை இரவில் வாசிக்கிறார்" என்றார். இது புறநானூறு என்னும் நூலிலுள்ள வரலாறு.

காலத்துக்குரிய ராகங்களைப்போல ஒவ்வொரு ரஸத்துக்கும் ராகங்கள் இருக்கின்றன. இன்ன இன்ன வகையான பாட்டுக்களை இன்ன இன்ன ராகத்திற் பாடவேண்டுமென்ற நியதியும் உண்டு. வெண்பாவைச் சங்கராபரணத்திற் பாடவேண்டும்; கலித்துறையைப் பைரவியிற் பாடவேண்டும்; அகவலை ஆரபியிற் பாடலாம்.

சங்கீத வித்துவான்கள் தமிழ்ப் பாட்டுக்களைப் பிழையில்லாமற் பாடவேண்டும்; சாகித்தியம் எப்படியிருந்தாலென்னவென்று நினைக்கக்கூடாது; பாஷையிலும் அறிவுடையவராக இருப்பது விசேஷம். ஆபாஸமான முறையில் பதங்களை வெட்டியும், கொலைபண்ணியும், விழுங்கியும் பாடுவதனால் அவர்கள் பாஷைக்குப் பெரிய தீங்கை இழைக்கிறார்கள். பழைய காலத்தில் சங்கீத வித்துவான்கள் சாஸ்திரப் பயிற்சியுடையவராக இருந்தனர்; படித்த வித்துவான்களாக இருந்தால், சாகித்தியத்தின் பொருளைத் தெரிந்து கவியினது மனோபாவத்தை உணர்ந்து பாட முடியும். இந்த முயற்சியைச் சங்கீத வித்துவான்கள் மேற்கொண்டால் மிகவும் உபயோகமாக இருக்கும்.

## 4. திருவாங்கூர்

ஸ்ரீவாழுங்கோடு என்ற பெயர் முறையே திருவாழுங் கோடு, திருவிதாங்கோடு, திருவிதாங்கூர் என்று படிப்படியாக மருவி இக்காலத்தில் திருவாங்கூர் என்று சிதைந்து வழங்கு கின்றது. திருவநந்தபுரத்திற்குத் தென்கிழக்கே முப்பது மைல் தூரத்திலுள்ள திருவாழுங்கோடு என்னும் சிற்றாரே முன்னொரு காலத்தில் அந்த ராஜ்யத்தின் தலைநகராக விளங் கிற்றென்றும் அந்நகரின் பெயரே நாட்டிற்கு இடப்பட்டு மேற்கூறியவாறு மருவி வழங்கி வருகிறதென்றும் அறிந் தோர் கூறுவர்.

பரத கண்டமென்னும் நம் இந்தியாவில் மிகப் பழைய காலம் முதல் நாகரிகம் பெற்று விளங்கும் சில நாடுகளுள் திருவாங்கூர் ஒன்று. வடமொழியிலுள்ள இராமாயணம் பாரதம் என்ற இதிகாசங்களும், பல புராணங்களும், பல காவியங்களும் இந்நாட்டின் பெருமைகளைப்பற்றிக் கூறு கின்றன. அநுமான் இலங்கையை நோக்கிக் கடலைத் தாண்ட முயன்றது இந்நாட்டிலுள்ள மகேந்திரகிரி என்ற மலையின்மேலிருந்தே என்று கூறுவர். வடநாடு துறந்து விந்திய மலையின் செருக்கையடக்கி, தமிழ்நாடு போந்த அகத்தியர் வாழ்ந்த இடம் இப்பொழுதும் அகத்தியர்மலை என்ற பெயரால் இந்நாட்டில் விளங்குகின்றது.

இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டிற்கும் மேலைத் தேசங்களுக்கும் வியாபாரம் நடந்து வந்தது என்பதைப் பல ஆதாரங்களால் அறிகிறோம். இரண் டாயிரம் ஆண்டுகளுக்குமுன் இங்குவந்த ஐரோப்பிய யாத்திரிகர்கள் இதனைப்பற்றித் தம் குறிப்புகளில் நன்கு குறித்திருக்கின்றனர்.

பாரதப் போரில் சண்டையிட்ட பாண்டவர் துரியோ தனாதியர் என்னும் இருதிறத்தினர்க்கும் குறையாமல் சோறளித்த பேறு இந்நாட்டு மன்னன் ஒருவனுடையது என்று தமிழ்ப் புலவரொருவர் கூறுகின்றார்.

இத்தகைய பழமையும் பெருமையுங்கொண்ட திரு வாங்கூர் முற்காலத்தில் கேரளம், சேரநாடு, வஞ்சிநாடு முதலிய பல பெயர்களால் வழங்கிவந்தது. ஜமதக்கினி என்ற முனிவரின் குமாரரான பரசுராமர் உலகம் முழு வதையும் வென்று காசியபர் என்ற முனிவர் ஒருவருக்கு அதனைத் தானமாகக் கொடுத்தனர். பிறகு அவர் தாம் வாழ ஓர் இருப்பிடத்தை நாடிச் சென்று கடைசியாக வருணபகவானது உதவியால் புதிய நாடொன்று பெற்று அதனிற் பல புதிய குடிகளைக் கொணர்ந்து குடியேற்றின ரென்றும், அது மேலைக் கடற்கரையிலுள்ள கோகரணம் என்ற இடத்திலிருந்து கன்னியா குமரி முனை வரையிற் பரவிய நாடாகுமென்றும் பழைய வரலாறுகள் கூறும். அதுவே பிற்காலத்தில் பரசுராம க்ஷேத்திரமென்றும், கேரள மென்றும் வழங்கலாயிற்று.

இவ்விதம் சரித்திர ஆராய்ச்சிக்கு எட்டாத பழங்காலம் முதல் இன்றுவரையில் திருவாங்கூர் அழிவில்லாமல் விளங்கி வருவது மிகவும் பாராட்டற்குரியதே. இதனை ஆண்ட மன்னர்களிற் பலரைப்பற்றிப் பண்டைத் தமிழ் இலக்கிய நூல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. குலசேகரப் பெரு மாள், சேரமான் பெருமாள் போன்ற அரசர்களை வைணவ சைவமத நூல்கள் மேன்மக்களாகக் கொண்டாடுகின்றன. இந்தியாவிலுள்ள மிகவும் பழமையான கொள்கைகளையும், ஒழுக்கங்களையும் இங்கே இன்னும் காணலாம். மிகவும் புராதனமான இந்து ஆலயங்களும், கிறித்தவக் கோயில் களும் இங்கே யுண்டு. இந்து ஆலயங்களுள் திருவநந்த புரத்திலிருக்கும் ஸ்ரீபத்மநாபரின் அநந்த சயனம் மிகவும் பெயர்பெற்றது.

இவற்றிற்கெல்லாம் மேலாக இந்நாட்டின் இயற்கை வனப்பு மிகவும் சிறந்தது. உலகத்திலுள்ள மிகச் சில அரிய இயற்கைக் காட்சிகளை இங்கே காணலாம். இக்காட்சிகளைக் கண்டு வியவாதவர் இலரென்றே கூறலாம். அந்நிய நாட் டினர் பலர் இவ்வழகுகளைக் கண்டு களிக்கவேண்டுமென்று

பல்லாயிரம் மைல் தூரம் கடந்து இங்கே கூட்டங் கூட்டமாக வந்து செல்கின்றரெனின் இதன் பெருமைகளை உரைத்தலும் கூடுமோ?

இங்கே பகலில் பகலவன் ஒளிவீசப் பின்வாங்குவதில்லை; காலத்தில் மழை பொழிகிறது; மழையின்மையை இந்நாடு கண்டதேயில்லை. முடிவற்ற வேனிலான் இதற்குத் தங்கமுலாம் பூசுகின்றான். இயற்கை மாது தன்னிடமுள்ள உயர்ந்த பொருள்களை இந்நாட்டிற்கே அர்ப்பணஞ் செய்திருக்கின்றாள். இக்காட்சிகளால் வசீகரிக்கப்படாதவருமுண்டோ? "எங்கே உழவு நடைபெறுமோ அங்கே மற்ற இடங்களில் இல்லாத ஜனநெருக்கம் அமைந்திருக்கிறது. எங்கே காடுகளும், கழிகளும், நீர்த்துறைகளும் நிரம்பிக் கிடக்கின்றனவோ அங்கே தெய்வத்தன்மை பொருந்திய அற்புதக் காட்சி கண்களைக் கவர்கின்றது!" என்று நம் தேசத்து அரசப் பிரதிநிதியாக இருந்த கர்ஸன் பிரபு ஒருமுறை திருவாங்கூரின் இயற்கை நலனைப் புகழும்போது கூறியுள்ளார்.

திருவாங்கூரில் நீண்டகாலம் உத்தியோகம் வகித்த ஆங்கிலப் பெரியாரொருவர் அந்நாட்டுக் காடுகளைப்பற்றி வருணிக்கும்போது பின்வருமாறு கூறுகின்றார்:—

"உலகத்திலுள்ள இடங்கள் யாவற்றிலும் இங்குள்ள காடுகளே என் மனத்தை முற்றிலும் வசப்படுத்திக்கொண்டன. உட்பாதைகளெல்லாம் மரங்களடர்ந்து நிழலையளிப்பவை. கதிரவன் கிரணங்கள் இடுக்குகளின் ஊடே நுழைந்து காணப்படுகின்றன. எந்தப்பக்கம் சென்றாலும் மனோரம்யமும் உற்சாகமும் ததும்பிக்கொண்டிருக்கின்றன.

"வானத்தையளாவும் தூண்கள்போன்ற மரங்கள் அவற்றின் பல்வகைப்பட்ட இலைகளாலான கூரையைத் தாங்குவனபோன்றும் சிவப்பு, வெண்மை, காவி முதலிய பலநிறமுள்ள பூக்கள் மலர்ந்து படரும் கொடிகள் அதனின்று தொங்கும் தோரணங்கள் போன்றும் காணப்படுகின்றன. தரையில் மரங்களைச் சுற்றி வளர்வனவும் பூமியிற் படர்வனவு

மான கொடிகள் தம் பூக்களுடன் நிலத்தில் விரித்த கம்பளம் போலப் பரவிக்கிடக்கின்றன. மேலே மரங்களிற் குரங்கு கள் தாவுவதும், அணில்கள் பாய்வதும், காட்டுப் புறுக்கள் கூவுவதும், மரங்கொத்திகள் அடிமரங்களைக் கொத்துவதும், வண்டுகள் ரீங்காரம் செய்வதும் மிக விநோதமாக இருக் கின்றன. கீழே அச்சங்கொண்ட புள்ளிமான்கள் மனிதர் செய்யும் ஒலியைக் கேட்டு மருண்டு பாய்ந்து மறைகின்றன. ஒருபுறத்தில் யானைகள் மரக்கிளைகளை மடமடவென்று முறித்துத் தள்ளும் பேரொலியானது அப்பெரிய மிருகத் தின் உணவு நேரத்தைப் புலப்படுத்தா நிற்கின்றது."

மலைவளனும், நிலவளனும் இவ்வருணனைகளுக் கொத் தனவே. படிப்படியாக உயர்ந்து சென்றுகொண்டே வானத்தை அளாவும் மலைத்தொகுதிகளின் காட்சி ஒரு புறமும், நீண்டு அகன்ற புற்றரைகளும் பயிரிடப்பெற்ற வயல்களும் மந்தமாகவும் விரைவாகவும் ஓடும் ஆறுகளும் கால்வாய்களும் மற்றொருபுறமும் பார்ப்பவர்கள் கண் களுக்கடங்காத களிவிருந்தாகின்றன. பரசுராமர் காலம் முதல் வளர்ந்து வருவனபோலத் தோன்றும் காடுகள் ஒரு பாலும், புதிய தேயிலை காப்பி ரப்பர் என்னும் செடிகளும் மரங்களும் விளங்கும் தோட்டங்கள் ஒருபாலுமாக மலைப் பக்கங்கள் மிளிரும். இத்தகைய இயற்கை யழகிலேயே பிறந்து வளரும் மக்களின் மாண்புகளும் அவ்வியற்கைக்கு ஏற்ப அமைந்திருக்கின்றன. இந்திய மக்களுள் திருவாங் கூர் ஆடவர்கள் ஆண்மையிலும் அறிவிலும் தலைசிறந்து விளங்குகின்றனர். அங்குள்ள மகளிரின் இணையற்ற எழி லும், கல்வியும், எளிமையும், சுயேச்சையும் உலகத்தார் மனத்தைக் கவர்கின்றன.

அந்நாட்டை இப்பொழுது ஆளும் அரசர் ஸ்ரீ வஞ்சி பால ஸ்ரீ பாலராம வர்ம குலசேகர மன்னராவர். அவர் குலம் உலக சரித்திரத்தில் மிகப் பழமையான சேர குலம். பண்டைத்தமிழ் மன்னர்களான சோழ, பாண்டிய குலங் கள் அழிவடைந்தன; ஆயினும் சேரர் ஒருவரது குலமேனும்

இன்றுவரையும் நிலைத்து வருவது தமிழர்களுக்கு மிகுந்த பெருமிதத்தை யளிப்பதாகும். அவர் பேசும் மொழி மலையாள மெனினும் அம்மொழியும் நம் தமிழன்னையின் உதரத்துதித்த ஒரு மகவன்றோ? திருவாங்கூர் மன்னர்கள் தாம் முடிசூடுமுன் துலாபாரம், இரணிய கருப்பம் முதலிய பல அரிய தானங்களைச் செய்து முடிப்பர். அத்தகைய குலத்தி லுதித்த மன்னர் நீடு வாழ்க!

## 5. 'தருமம் தலைகாக்கும்'

கொள்ளிடத்தின் வடகரையில் ஆங்கரை என்பதோர் ஊர் உண்டு. அது திருச்சிராப்பள்ளி ஜில்லா லாலுகுடி தாலூகாவில், லாலுகுடிக்கு வடமேற்கே இரண்டுமைல் தூரத்தில் பல ஊர்களுக்குச் செல்லும் சாலைக்கு இடையே அமைந்துள்ளது. அங்கே உள்ள அக்கிரகாரம் இருநூறுக்கு மேற்பட்ட அந்தணர்களின் வீடுகளை உடையது. அவர் களிற் பெரும்பாலோர் ஸ்மார்த்தப் பிராமணர்களுள் மழநாட்டுப் பிரகசரணமென்னும் வகுப்பைச் சார்ந்தவர்கள். அவர்கள் யாவரும் சிவபக்தியுடையவர்கள்; தங்கள் தங்களால் இயன்ற அளவு விருந்தினர்களை உபசரித்து உண்பிக்கும் வழக்கம் உடையவர்களாக இருந்தனர். பழையகாலத்தில் இவ்வழக்கம் எல்லாச் சாதியினரிடத்துமே இருந்து வந்தது.

ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்குமுன் மேற்கூறிய ஆங்கரையில் சுப்பையரென்ற செல்வர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு இரண்டாயிரம் ஏகரா நன்செய் நிலங்கள் இருந்தன. அவை ஏழு கிராமங்களில் இருந்தன வென்பர். அவருடைய குடும்பம் பரம்பரையாகச் செல்வமுள்ளதாக விளங்கிய குடும்பம். அவர் தெய்வ பக்தியும், ஏழைகளிடத்தில் அன்பும், தருமசிந்தனையும் வாய்ந்தவர்.

நாள்தோறும் காலையில் நீராடிவிட்டு அவர் பூஜை முதலியவற்றை முடித்துக்கொள்வார்; பிறகு போஜனம் செய்வதற்குமுன் வெளியே வந்து தம் வீட்டுத்திண்ணை யில் யாரேனும் அதிதிகள் வந்துள்ளார்களா வென்று கவ னிப்பார். திரிசிரபுரம், ஸ்ரீரங்கம், திருவானைக்கா முதலிய இடங்களுக்குப் பாதசாரிகளாகச் செல்பவர்களும் அவ்வூர் களிலிருந்து தங்கள் தங்கள் கிராமங்களுக்குச் செல்பவர் களுமாகிய வழிப்போக்கர்கள் அவருடைய வீட்டுக்கு வந்து திண்ணையில் தங்கியிருப்பார்கள். அவர்களைச் சுப் பையர் உள்ளே அழைத்துப் பசியாற அன்னமிட்டு உப சரிப்பது வழக்கம். அவர் அன்னமிடுவதை யறிந்து பல பிரயாணிகள் அவர் வீட்டுக்கு வருவார்கள். அவருடைய வீடானது ஒரே சமயத்திற் பலர் இருந்து சாப்பிடும்படி விசாலமாக அமைந்திருந்தது. எல்லா வகையினருக்கும் அவரவர்களுக்கு ஏற்ற முறையில் அவர் உணவளிப்பார். பசியென்று எந்தநேரத்தில் யார் வரினும் அவர்கள் பசியை நீக்கும்வரையில் அவரது ஞாபகம் வேறொன்றிலும் செல் லாது.

தம்முடைய வீட்டிற்கு இரவும் பகலும் இங்ஙனம் வந்து போவாரை உபசரித்து அன்னமிடுவதையே தம்முடைய வாழ்க்கையின் பயனாக அவர் எண்ணினார். பசிப்பிணி மருத்துவராகி வாழ்ந்துவந்த அவருடைய புகழ் எங்கும் பரவியது. அவரை யாவரும்* அன்னதானம் ஐயரென்றும், அன்னதானம் சுப்பையரென்றும் வழங்கலாயினர்.

சுப்பையர் குடும்பம் மிகவும் பெரியது. அவருடைய சகோதரர்கள், அவர்களுடைய மனைவிமார், பிள்ளைகள், பெண்கள், மருமக்கள், பேரர்கள், பேத்திகள் முதலியோர் ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்தனர். அன்னதானம்

---

* அவருடைய பரம்பரையினருள்ளும், அவருறவினர் பரம்பரை யினருள்ளும் அன்னதான மென்ற பெயரையுடையவர்கள் இப்போதும் சிலர் உண்டு.

செய்யும்பொருட்டு அவர் தனியே சமையற்காரர்களை வைத்துக்கொள்ளவில்லை. அவர் வீட்டிலுள்ள பெண் பாலாரே சமையல் செய்வதும் வந்தோரை உபசரித்து அன்னமிடுவதுமாகிய வேலைகளைச் செய்துவந்தனர். சிறு பிள்ளைகள் முதற் பெரியவர்கள் வரையில் யாவரும் இலைகளைப் போட்டும், பரிமாறியும், பிற வேலைகளைப் புரிந்தும் தம்முடைய ஆற்றலுக்கு ஏற்றபடி உரிய காரியங்களைக் கவனிப்பார்கள். அதிதிகளுக்கு உபயோகப்படும்பொருட்டு அப்பளம், வடகம், வற்றல், ஊறுகாய்கள் முதலியவற்றை அவ்வப்போது செய்துவைக்கும் வேலையில் அவ்வீட்டுப் பெண்பாலார் ஈடுபட்டிருப்பார்கள். அவருடைய வீடு ஒரு சிறந்த அன்ன சத்திரமாகவே இருந்தது; குடும்பத்தினர் யாவரும் தர்மத்திற்காக அன்புடன் உழைக்கும் பணியாளர்களாக இருந்தனர்.

"இப்படி இருந்தால் எப்படிப் பணம் சேரும்? எப்பொழுதும் இந்த மாதிரியே நடத்தி வருவது சாத்தியமா?" என்று யாரேனும் சிலர் சுப்பையரைக் கேட்பார்கள். அவர், "பரம்பரையாக நடந்துவரும் இந்தத் தர்மத்தைக் காட்டிலும் மேற்பட்ட லாபம் வேறொன்று எனக்கு இல்லை. பசித்து வந்தவர்களுக்கு அன்னமிடுவதே சிவாராதனமென்று எண்ணுகிறேன். தெய்வம் எவ்வளவு காலம் இதை நடத்தும்படி கிருபை பண்ணுகிறதோ அவ்வளவு காலம் நடத்தியே வருவேன். நான் செய்வது கெட்ட காரியமன்று என்ற திருப்தியே எனக்குப் போதும்" என்பார்.

இங்ஙனம் அவர் இருந்துவரும் காலத்தில் ஒருசமயம் மழையின்மையாலும் ஆறுகளில் ஜலம் போதிய அளவு வாராமையாலும் நிலங்களில் விளைச்சல் குறைந்தது. ஆயினும் அவர் அன்னதானத்தைக் குறைக்கவில்லை. இப்படி ஒருவர் அன்ன மிடுகிறாரென்ற செய்தியை அறிந்த பல ஏழை ஜனங்கள் அங்கங்கே உண்டான விளைச்சற் குறைவினால் ஆதரவு பெறாமல் சுப்பையர் வீட்டிற்கு வந்து உண்டு அவரை வாழ்த்திச் சென்றார்கள். இதனால் அக்காலத்தில் வழக்கத்

திற்குமேல் அவர் அன்னதானம் செய்ய நேர்ந்தது. ஆயினும் அவர் மனங் கலங்கவில்லை. நாயன்மார்களுடைய வரலாற்றை உணர்ந்திருந்த பரமசிவ பக்தராகிய அவர் இறைவன் சோதனைக்கு உட்பட்டு அந்நாயன்மார்கள் பின்பு நன்மை பெற்றதையறிந்தவராதலின், தம்முடைய நிலங்கள் விளைவு குன்றியது முதலியனவும் அத்தகைய சோதனையே என்றெண்ணினர். தருமம் தலைகாக்குமென்ற துணிவினால், எப்பொழுதும் செய்துவரும் சிறப்புக்குக் குறைவில்லாமல் அன்னதானத்தை நடத்திவந்தார். பொருள் முட்டுப்பாடு உண்டானமையால் தம் குடும்பத்துப் பெண்பாலாரின் ஆபரணங்களை விற்றும் அடகு வைத்தும் பொருள்பெற்று அன்னதானத்திற்குப் பயன்படுத்தி வந்தார். அதனாற் குடும்பத்தினருக்குச் சிறிதேனும் வருத்தம் உண்டாகவில்லை; அப்பெண்களோ அந்த நகைகள் ஒரு நல்ல காரியத்துக்குப் பயன்பட்டதை எண்ணி மகிழ்ந்தார்கள். அந்தக் குடும்பத்திலுள்ள யாவரும் ஆடம்பரமின்றியிருந்தார்கள்.

பொருள் முட்டுப்பாடு அவ்வருஷத்தில் நேர்ந்தமையால் அரசாங்கத்துக்குச் செலுத்தவேண்டிய 'கிஸ்தி' (நிலவரி) யை அவராற் செலுத்த முடியவில்லை. பெருந்தொகை யொன்றை வரிப்பணமாக அவர் செலுத்த வேண்டியிருந்தது. அவ்வூர்க் கணக்குப்பிள்ளை மணியகாரர் ஆகிய கிராமாதிகாரிகள் இருவரும் வரிவசூல் செய்ய முயன்றார்கள். சுப்பையர் தம்முடைய நிலைமையை விளக்கினர். அவர்கள் சுப்பையருடைய உண்மை நிலையையும் பரோபகார சிந்தையையும் நன்கு அறிந்தவர்களாதலால் அவர் கூறுவது மெய்யென்றே எண்ணினர். ஆயினும் மேலதிகாரிகளுக்கு எவ்விதம் பதில் சொல்வது? அதனால் சுப்பையரை நோக்கி, "நாங்கள் என்ன செய்வோம்! உடனே வரியை வசூல் செய்யவேண்டுமென்று எங்களுக்கு உத்தரவு வந்திருக்கிறதே!" என்றார்கள். சுப்பையர், "என்னால் வஞ்சனையில்லை யென்பது உங்களுக்கே தெரியும். நான் வரியை இப்போது செலுத்த முடியாத

நிலையில் இருப்பதாக மேலதிகாரிகளுக்கே தெரிவியுங்கள். அவர்கள் இஷ்டம்போலச் செய்துகொள்ளட்டும். அவர்கள் நிலத்தை ஏலம் போடக்கூடும். தெய்வம் எப்படி வழிவிடு கிறதோ அப்படியே நடக்கும்; அதுவே எனக்குத் திருப்தி" என்றார்.

சிலர் அவரிடம் வந்து, "இந்தக் கஷ்டகாலத்திற் கூட அன்னதானத்தை ஏன் வைத்துக்கொள்ளவேண்டும்? சில காலம் நிறுத்திவைத்தால் வரியையும் கொடுத்துவிடலாம்; உங்களுக்கும் பணம் சேருமே" என்றார்கள். அவர், "இந் தக்காலத்தில் அன்னம் போடாவிட்டால் இவ்வளவு நாள் போட்டும் பயன் இல்லை; இப்போதுதான் அவசியம் இந்தத் தர்மத்தைச் செய்துவரவேண்டும். கஷ்டமென்பது எல்லோருக்கும் இருப்பதுதானே? பல ஏழைகள் பசியோடு வரும்போது நாம் சும்மா இருப்பதைவிட இறந்துவிடலாம். இப்பொழுது கடன்பட்டாவது இந்தத் தர்மத்தைச் செய்து வந்தால் நன்றாக விளையும் காலத்தில் உண்டாகும் லாபத்தில் ஈடு செய்துகொள்ளலாம். இப்பொழுது செய் யாமல் நிறுத்திவிட்டால் அந்த நஷ்டத்திற்கு ஈடு செய் யவே முடியாது" என்றார்.

கணக்குப் பிள்ளையும் மணியகாரரும் நடந்ததைப் *பேஷ்காரிடம் தெரிவித்தனர். அவர் வந்து பார்த்தார்; அவருக்கும் ஒன்றும் தோன்றவில்லை; தாசில்தாருக்குத் தெரிவித்தார். அவர் மிக்க முடுக்கோடு வந்து பயமுறுத்தி னார்; சில கடுமையான தொந்தரவுகளையும் செய்து பார்த் தார். சுப்பையர் தம்முடைய நிலைமையை எடுத்துச் சொன்னார். தாசில்தார், "இந்த அன்னதானத்தை நிறுத்தி விட்டுப் பணத்தைக்கட்டும்" என்று சொல்லவே சுப்பையர், "தாங்கள் அதைமட்டும் சொல்லக்கூடாது. எங்கள் பரம் பரைத் தர்மம் இது. இதை நிறுத்திவிடுவதென்பது முடி யாத காரியம். என்னுடைய மூச்சு உள்ளவரையில் இதை

---

* பேஷ்கார்—ரெவினியூ இன்ஸ்பெக்டர்.

நிறுத்தமாட்டேன்; எனக்கு என்ன துன்பம் வந்தாலும் வரட்டும்" என்றார்.

தாசில்தார், "இதெல்லாம் வேஷம்! அன்னம் போடு கிறேனென்று ஊரை ஏமாற்றுகிற வழி" என்றார். சுப்பை யர்பால் சில காரணங்களால் பொறாமைகொண்ட குமாஸ் தாக்கள் சிலர் தாசில்தாரிடம் அவரைப்பற்றி முன்னமே கோள் கூறியிருந்தனர். தாசில்தாரும் கோபியாதலின் சுப்பையருடைய குணத்தை அறிந்துகொள்ளவில்லை.

"உம்மால் பணம் கொடுக்க முடியாவிட்டால் உம்மு டைய நிலத்தை ஏலம் போடுவேன்" என்றார் தாசில்தார்.

"அவ்விதம் செய்வது அவசியமென்று உங்களுக்குத் தோன்றினால், தெய்வத்தினுடைய சித்தமும் அதுவாக இருக்குமானால், நான் எப்படி மறுக்கமுடியும்?" என்று சுப்பையர் பணிவாகக் கூறினார்.

தாசில்தார் நிலத்தை ஏலம் போட்டார்; 'இந்தத் தர்ம தேவதையின் நிலத்தை ஏலம் எடுத்தால் நம் குடும்பமே நாசமாகிவிடும்' என்ற பயத்தால் அவ்வூரிலுள்ளோரேனும் அயலூரினரேனும் வந்து ஏலம் எடுக்கத் துணியவில்லை. தம் அதிகாரமொன்றையே பெரிதாக நினைத்த தாசில் தாருக்கோ கோபம் பொங்கியது; மீசை துடித்தது; கண் கள் சிவந்தன; "இந்த மனுஷன் பொல்லாதவனென்று தெரிகிறது. இவனுக்குப் பயந்தே ஒருவரும் ஏலம் எடுக்க முன்வரவில்லை. இருக்கட்டும். இவனுக்குத் தக்கபடி ஏற் பாடு செய்கிறேன்" என்று சொல்லித் தாசில்தார் போய் விட்டார். சுப்பையரைப் போலவே வேறு பலர் வரி செலுத்தவில்லை. ஆயினும் அவர்கள் செலுத்தவேண்டிய தொகை சிறிதாதலின் எவ்வாறேனும் வசூல் செய்துவிடலா மென்ற தைரியம் தாசில்தாருக்கு இருந்தது. சுப்பையர் பெருந்தொகை செலுத்த வேண்டியவராக இருந்தமையால் அவர்மீது தாசில்தாருக்கு இருந்த கோபத்துக்கு அளவே யில்லை. உடனே, தாசில்தார் பலரிடமிருந்து வரிவசூல்செய் யப்படவில்லை யென்பதையும் அவர்களுள் பெருந்தொகை

செலுத்தவேண்டிய சுப்பையர் அதற்குரிய முயற்சியொன்றும் செய்யாமல் இருப்பதையும், அவருடைய நிலத்தை ஏலம் எடுக்க ஒருவரும் துணியாததையும் ஜில்லா கலெக்டருக்கு எழுதித் தக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று தெரிவித்தார்.

'எல்லாம் பரமசிவத்தின் திருவுள்ளப்படி நடக்கும்' என்ற மனச்சாந்தியோடு சுப்பையர் அன்னதானத்தை வழக்கம்போல் குறைவின்றி நடத்தி வந்தார்.

தாசில்தாருடைய கடிதத்தைக் கண்ட கலெக்டர் லாலுகுடிக்கு வந்து 'முகாம்' போட்டார். அவர் ஒரு வெள்ளைக்காரர்; மதியூகி; எதையும் ஆலோசித்துச் செய்பவர்; தர்மவான்; நியாயத்துக்கு அஞ்சி ஒழுகுபவர்; தமிழ்ப் பயிற்சி உள்ளவர்; பிறர் தமிழ் பேசுவதைத் தெளிவாக அறிவதோடு தாமே தமிழிற் பேசவும் தெரிந்தவர். அவர் லாலுகுடிக்கு வந்து தாசில்தாரையும் வரச்செய்து அவரிடம் சுப்பையரைப்பற்றி விசாரித்தார்.

தாசில்தார் தம்முடைய அதிகாரமொன்றும் சுப்பையரிடத்திற் பலிக்கவில்லை யென்ற கோபத்தினால் அவரைப் பற்றி மிகவும் கடுமையாகக் குறைகூறினார்; "அவன் பெரிய ஆஷாடபூதி. இவ்வளவு நிலம் வைத்திருக்கிறவனுக்குப் பணம் இல்லாமலா போகும்? ஏதோ சிலருக்குச் சோற்றைப் போட்டுவிட்டு அன்னதான மென்று பேர் வைத்துக்கொண்டு பணத்தை மறைவாகச் சேகரித்து வைத்திருக்கிறானென்றே நான் எண்ணுகிறேன். தன் வீட்டிலுள்ள நகைகளைக்கூட ஒளித்துவைத்திருப்பான். துரையவர்கள் சிறிதேனும் இரக்கம் காட்டாமல் அந்த மனுஷனைத் தக்கபடி சிக்ஷிக்கவேண்டும்; அப்போதுதான் மற்றவர்களும் பயப்படுவார்கள்" என்றார்.

தாசில்தாருடைய பேச்சில் கோபம் தலை தூக்கி நிற்பதைக் கலெக்டர் உணர்ந்தார்; அவருடைய வார்த்தைகளை அப்படியே நம்புவது அபாயமென்றெண்ணினார். ஆதலின், அந்தப் பக்கங்களில் இருந்த வேறு சிலரிடம் சுப்பைய

ரைப்பற்றி அந்தரங்கமாக விசாரித்தார். அவ்வந்தண உபகாரியிடம் பொறுமைகொண்ட சிலரன்றி மற்றவர்க ளெல்லாம் அவரைப்பற்றி மிக உயர்வாகவே சொன்ஞர்கள்; அவர் செய்யும் அன்னதானத்தைப்பற்றி உள்ளங்குளிர்ந்து பாராட்டினுர்கள். கலெக்டர்துரை எல்லாவற்றையும் கேட்டார்.

ஒருநாள் இரவு சுப்பையர் வழக்கம்போலவே தம்முடைய வீட்டுத் திண்ணையிலே படுத்திருந்தார். பகலிலும் இரவிலும் யாவருக்கும் அன்னமிட்டபின்பு, அகாலத்தில் யாரேனும் பசியோடுவந்தால் அவர்களுக்கு உதவும் பொருட்டு உணவுவகைகளைத் தனியே வைத்திருக்கச் செய்வது அவருடைய வழக்கம். சில சமயங்களில் மழை முதலியவற்ருல் துன்புற்று வழிநடைப் பிரயாணிகள் நள்ளிரவில் வருவார்கள். அவர்களுடைய பசியைப் போக்குவதற்கு அவ்வுணவு உதவும்.

சுப்பையர் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது நெடுந்தூரத்திலிருந்து, "சாமீ! சாமீ!" என்று ஒரு சத்தம் கேட்டது. அதனுல் சுப்பையருடைய தூக்கம் கலைந்தது. அவர் விழித்தெழுந்து சத்தம்கேட்கும் வழியே சென்ருர். அக்கிரகாரத்தின் கோடியிலிருந்து யாரோ ஒருவன், "சாமீ! சாமீ!" என்று கத்திக்கொண்டிருந்தான்.

"யாரப்பா அது?" என்று கேட்டார் சுப்பையர்.

"சாமீ! நான் பக்கத்திலுள்ள கிராமத்துப் பறையன். வேறு ஊருக்குப் போய்த் திரும்பி வருகிறேன். பசி தாங்க முடியவில்லை. இவ்வளவு தூரம் நடந்து வந்தேன்; மேலே அடியெடுத்து வைக்க முடியவில்லை" என்ருன்.

"அப்படியானுல், கொஞ்சநேரம் இங்கேயே இரு; இதோ வருகிறேன்" என்று சொல்லிச் சுப்பையர் தம் வீட்டுக்கு வந்தார். வந்து வெளிக்கதவைத் திறக்கச்செய்து சமையலறையிற் புகுந்தார். அங்கிருந்த கறி, குழம்பு, ரஸம், மோர் முதலியவற்றைத் தனித்தனியே தொன்னைகளிலும் கொட்டாங்கச்சிகளிலும் எடுத்து, அன்னத்தை ஒரு பெரிய

மரக்காலில் போட்டு அதன்மேல் கறி முதலியவற்றை வைத்து மேலே இலையொன்றால் மூடினார். அப்படியே அதை எடுத்துக்கொண்டு தெருவின் கோடிக்கு வந்து, “இந்தா, அப்பா! இந்த மரக்காலில் சாதம், குழம்பு, கறி, ரஸம் எல்லாம் வைத்திருக்கிறேன். அதோ இருக்கிறதே, அந்த வாய்க்காலுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு உன் ஊருக்குப் போ. முடியுமானால் மரக்காலை நாளைக்குக் கொண்டுவந்து கொடு; முடியாவிட்டால் நீயே வைத்துக் கொள்ளு” என்று சொல்லி அந்த மரக்காலை அவன் பார்க்கும்படி கீழேவைத்தார்.

பறையன் அதை எடுத்துக்கொண்டு, “சாமீ! உங்களைத் தெய்வம் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலைகாக்கும்” என்று வாழ்த்திவிட்டுச் சென்றான். அவனுடைய பேச்சில் ஒருவிதமான நாக்குழறல் இருந்தது; “பாவம்! பசியினால் பேசக்கூட முடியவில்லை! நாக்குக் குழறுகிறது!” என்று சுப்பையர் எண்ணி இரங்கினார்; அவனது பசியைத் தீர்க்க நேர்ந்தது குறித்து மகிழ்ந்து வீடுவந்து சேர்ந்தார்.

லாலுகுடியில் ‘முகாம்’ செய்திருந்த கலெக்டர் மேற்சொன்ன நிகழ்ச்சி நடைபெற்றதற்கு மறுநாள் தம்மிடம் வரவேண்டுமென்றும், தாம் விசாரணை செய்யவேண்டுமென்றும் சுப்பையருக்கு உத்தரவொன்றை முன்னமே அனுப்பியிருந்தார். விசாரணைக்கு ஏற்பட்ட நாளில் சுப்பையர் உரியகாலத்தே செல்லாமல் நேரம் கழித்துச் சென்றார்.

கலெக்டர் துரையின்முன்பு சேவகர்கள் அவரை நிறுத்தினார்கள். நீர்க்காவி ஏறிப் பழுப்பு நிறமாயிருந்த அவருடைய வஸ்திரம் இடையிடையே தையலையுடையதாயும், சில இடங்களில் முடியப்பட்டதாயும் இருந்தது; அவருடைய உடம்பில் விபூதி விளங்கியது; மார்பில் ருத்திராட்ச மாலை இருந்தது. அவர் நேரங்கழித்து வந்ததனால் அவரிடம் கோபம் கொண்டிருப்பவரைப்போலவே கலெக்டர்

---

* இது மலட்டாறென்று வழங்கும்.

இருந்தார்; முகத்திற் கோபக்குறிப்பு வெளிப்பட்டது. "இவரா சுப்பையர்?" என்று கேட்டார் துரை.

அருகிலிருந்த தாசில்தார், "ஆமாம்!" என்றார்.

கலெக்டர், "இவ்வளவு ஏழையாக இருப்பவரையா நீர் பெரிய பணக்காரரென்றும், வரிப்பணம் அதிகமாகத் தர வேண்டுமென்றும் எழுதியிருக்கிறீர்?" என்று கேட்டார்.

தாசில்தார்: இதெல்லாம் வேஷம். இப்படிவந்தால் துரையவர்கள் மனமிரங்கி வரியை வஜா செய்யக்கூடுமென்று வஞ்சக எண்ணத்தோடு வந்திருக்கிறார்.

கலெக்டர், அவரைக் கையமர்த்திவிட்டுச் சுப்பையரைப்பார்த்து, "நீரா ஆங்கரைச் சுப்பையர்?" என்று கேட்டார்.

சுப்பையர்: ஆம்.

கலெக்டர்: நீர் ஏன் சரியான காலத்தில் வரவில்லை? சர்க்கார் உத்தரவை அலக்ஷியம் செய்யலாமா?

சுப்பையர்: துரையவர்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. காலையில் எழுந்து ஸ்நானம்செய்து பூஜைபண்ணுவேன்; அப்பால் என் வீட்டுக்கு வருகிறவர்களுக்கெல்லாம் ஆகாரம் செய்விப்பது என் வழக்கம். இன்று பலர் வந்திருந்தார்கள். வழக்கப்படியே அவர்கள் யாவருக்கும் போஜனம் செய்வித்து நானும் ஆகாரம் செய்தபிறகு வந்தேன். தாமதத்தைத் துரையவர்கள் மன்னிக்கவேண்டும்.

கலெக்டர்: உம்முடைய வரிப்பணம் அதிகமாகப் பாக்கி இருக்கிறதே, தெரியுமா?

சுப்பையர்: தெரியும். என்மேல் வஞ்சகம் இல்லை; நிலம் சரியானபடி விளையாமையால் வரிப்பணத்தை என்னால் இப்பொழுது செலுத்த முடியவில்லை.

கலெக்டர்: அன்னதானத்தைமட்டும் எப்படிச் செய்கிறீர்?

சுப்பையர்: கிடைக்கும் நெல்லையெல்லாம் வைத்துக்கொண்டு செய்கிறேன். முன்பு, அன்னதானம் செய்தது

போக மிஞ்சுவதில் வரியைச் செலுத்தி வந்தேன். இப்பொழுது அது முடியவில்லை. அன்னதானத்திற்கே போதாமையால் என் வீட்டு நகைகளை அடகுவைத்துக் கடன் வாங்கியிருக்கிறேன்; சிலவற்றை விற்கவும் செய்தேன்.

கலெக்டர்: இவ்வளவு கஷ்டப்பட்டு நீர் அந்த அன்னதானத்தை ஏன் செய்யவேண்டும்?

சுப்பையர்: அது பாரம்பரையாக எங்கள் குடும்பத்தில் நடந்து வருகிறது.

கலெக்டர்: அன்னம் போடுவது பகலிலா? இரவிலா?

சுப்பையர்: இரண்டு வேளையும் போடுவதுண்டு. பாதசாரிகளாக வருகிறவர்கள் பசியோடு எப்போது வந்தாலும் போடுவது வழக்கம்.

கலெக்டர்: எந்தச் சாதியாருக்குப் போடுவீர்?

சுப்பையர்: பிராமணருக்கும் மற்றச் சாதியாருக்கும் அவரவர்களுக்கு ஏற்ற முறையில் போடுவதுண்டு. பசித்து வந்தவர்கள் யாரானாலும் அன்னமிடுவேன்.

கலெக்டர்: பறையருக்கும் போடுவதுண்டா?

சுப்பையர்: ஆகா, போடுவதுண்டு; எல்லோரும் சாப்பிட்டபிறகு போடுவோம்.

கலெக்டர்: இதுவரையில் அப்படி எத்தனை தடவை பறையர்களுக்குப் போட்டிருக்கிறீர்?

சுப்பையர்: எனக்கு நினைவில்லை; பலமுறை போட்டிருக்கிறேன்.

கலெக்டர்: சமீபகாலத்தில் எப்போதாவது போட்டதுண்டா?

சுப்பையர்: நேற்றுக்கூட ஒரு பறையன் பாதிராத்திரியில் பசிக்கிறதென்று வந்தான்; சாதம் கொடுத்தேன்.

கலெக்டர்: அப்படியா! என்ன என்ன கொடுத்தீர்? எல்லோரும் சாப்பிட்டு மிச்சமான சோற்றையா கொடுத்தீர்?

சுப்பையர்: அகாலத்தில் யாராவது வந்தால் உபயோகப் படுமென்று ரஸம், குழம்பு, மோர் முதலியவற்றிற் கொஞ்சம் கொஞ்சம் தனியே எடுத்து வைத்திருப்பது எங்கள் வீட்டு வழக்கம். ஆதலால் நேற்று வந்தவனுக்கு அன்னம், கறி, குழம்பு, ரஸம், மோர் எல்லாம் கொடுத்தேன்.

கலெக்டர்: இலை போட்டா சாப்பாடு போட்டீர்?

சுப்பையர்: இல்லை; அது வழக்கமில்லை. ஒரு மரக்காலில் அன்னத்தைப்போட்டு, அதன்மேல் தனித்தனியே தொன்னைகளிலும் கொட்டாங்கச்சிகளிலும் கறி முதலியவற்றை வைத்துக் கொடுத்தேன்.

கலெக்டரோடு வந்திருந்த உத்தியோகஸ்தர்கள் யாவரும் இவ்வளவு விரிவாகக் கலெக்டர் விசாரணை செய்வதை நோக்கிவியப்புற்றார்கள். சுப்பையர் சொன்னதைக் கேட்டுக் கொண்டே இருந்த துரை தாசில்தாரைப் பார்த்தார். அவர், "எல்லாம் பொய்" என்று சொல்லிவிட்டு முணுமுணுத்துக் கொண்டேயிருந்தார்.

கலெக்டர்: உமக்கு அந்தப் பறையனைத் தெரியுமா?

சுப்பையர்: இருட்டில் இன்னானென்று தெரியவில்லை.

கலெக்டர்: அவனிடம் கொடுத்த மரக்காலைக் கொண்டு வந்து காட்டுவீரா?

சுப்பையர்: அதை அவன் இன்னும் திருப்பிக் கொடுக்க வில்லை.

கலெக்டர்: அப்படியானால் அவனுக்கு நீர் சாப்பாடு கொடுத்ததற்கு வேறு சாக்ஷி என்ன இருக்கிறது?

சுப்பையர்: சாக்ஷி எதற்கு? தெய்வத்துக்குத் தெரியும். அப்படி நான் செய்ததை எதற்காக வேறு யாரிடமேனும் சொல்லிக்கொள்ளவேண்டும்?

கலெக்டர்: அந்த மரக்காலை அவன் திருப்பிக் கொடா விட்டால் என்ன செய்வீர்?

சுப்பையர்: 'முடியுமானுல் கொடு, இல்லாவிட்டால் நீயே வைத்துக்கொள்' என்று நானே சொல்லிக்கொடுத்தேன்; அவன் கொடாவிட்டால் எனக்கு ஒன்றும் நஷ்டமில்லை.

கலெக்டர், "அப்படியா!" என்று சொல்லிக்கொண்டே மேஜை முழுவதையும் தரைவரையில் மறைத்து மூடப்பட்டிருந்த ஒரு துணியை மெல்லத் தூக்கினுர். என்ன ஆச்சரியம்! அதன் கீழே ஒரு மரக்கால் காணப்பட்டது.

"நீர் கொடுத்த மரக்கால் இதுதானு பாரும்" என்று சொல்லிக்கொண்டே துரை அதை எடுத்து மேஜையின்மேல் வைத்தார்.

சுப்பையர் திடுக்கிட்டார்; தாம் கண்டதை அவர் நம்ப முடியவில்லை. கண்ணைத் துடைத்துத் துடைத்துப் பார்த்தார். தாம் முதல்நாள் பாதிராத்திரியில் ஒரு பறையனிடம் கொடுத்த மரக்கால் அங்கே எப்படி வந்திருக்கலாமென்று யோசித்தார்; ஒன்றும் தெரியவில்லை. அங்கே இருந்த எல்லோரும் ஒரு நாடகத்தில் மிகவும் ரசமான காட்சி யொன்றில் ஈடுபட்டு மெய்மறந்தவர்கள்போல் ஆனுர்கள்.

"என்ன, பேசாமல் இருக்கிறீர்? ராத்திரி நீர் செய்த அன்னதானத்துக்குச் சாக்ஷியில்லை யென்று எண்ண வேண்டாம். பாதி ராத்திரியில் வந்த பறையன் நான்தான்! நீர் கொடுத்த மரக்கால் இதுதான்! இந்த இரண்டு சாக்ஷிகளும் போதாவிட்டால், என்னுடன் அங்கேவந்த குதிரைக்காரன் ஒருவன் இருக்கிருன். நீர் சொன்னதெல்லாம் உண்மையே. உம்முடைய வீட்டு அன்னத்தையும் கறி முதலியவற்றையும் நான் ருசி பார்த்தேன். உம்முடைய ஜன்மமே ஜன்மம்" என்ருர் கலெக்டர்; அவருடைய கண்களில் நீர் ததும்பியது; உள்ளத்தில் உண்டான உருக்கம் அவர் தொண்டையை அடைத்தது. சிறிது நேரம் அவரால் பேச முடியவில்லை. பிறகு, "உமக்கு எந்தக் காலத்திலும் குறைவே வராது. தெய்வம் உம்மைக் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலைகாக்கும். உமக்காகவே மழை பெய்கிறது" என்ருர்.

அந்த வார்த்தைகளில் முதல் நாள் இரவு பறையன், 'தெய்வம் உங்களைக் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலைகாக்கும்' என்று சொன்ன வார்த்தைகளின் தொனி ஒலிப்பதை அப்போதுதான் சுப்பையர் உணர்ந்தார்; தமிழைப் புதிதாகக் கற்றுக்கொண்ட வேற்று நாட்டாராகிய துரையின் பேச்சானது, பசியினால் நாக்குழறிப் பேசுபவனது பேச்சைப்போல இராத்திரியில் தமக்குத் தோன்றியதென்பதை அறிந்தார். அவருக்கு இன்னது சொல்வதென்று தோற்றவில்லை.

"அப்படியே அந்த நாற்காலியில் உட்காரும். நீர் வரிப் பணத்தை மோசம் செய்யமாட்டீரென்பதை நான் நன்றாக அறிவேன். நானும் உம்முடைய மரக்காலை மோசம் செய்யாமல் இதோ கொடுத்துவிட்டேன்; எடுத்துக்கொள்ளும். உம்முடைய தருமம் குறைவின்றி நடைபெற இந்த வரிப் பணம் உதவுமானால், அதைவிட மேலான இலாபம் இந்த ராஜாங்கத்துக்கு வேறு இல்லை. உம்மால் எப்போது முடியுமோ, அப்போது வரியைக் கட்டலாம். உம்மை ஒருவரும் நிர்ப்பந்தம் செய்யமாட்டார். நான் இந்த ஜில்லாவில் இருக்கும் வரையில் உமக்கு ஒருவிதமான துன்பமும் நேராது" என்றார் கலெக்டர்; பிறகு தாசில்தாரை நோக்கி, "உம்முடைய வார்த்தையை நான் நம்பியிருந்தால் பெரிய பாவம் செய்திருப்பேன். இனிமேல் தீர விசாரியாமல் இந்த மாதிரி ஒருவரைப்பற்றியும் நீர் எழுதக்கூடாது" என்று கண்டித்துக் கூறினார்.

மேஜைத் துணியாகிய திரையைத் துரை தூக்கியதும், அம் மேஜைக்கு அடியில் அவ்வந்தணவள்ளலது அன்ன தானத்தை அளந்த மரக்கால் இருந்ததும், அதனைத் துரை எடுத்து மேஜையின்மேல் வைத்து மனமுருகிப் பேசிக் கண்களில் நீர் ததும்ப வீற்றிருந்ததுமாகிய அக்காட்சிகளை நம்முடைய அகக்கண்ணால் நோக்கும்போது நமக்கே மயிர் சிலிர்க்குமாயின், அங்கேயிருந்து கண்ணால் பார்த்தவர்களுடைய உள்ளமும் உடலும் எப்படி யிருந்திருக்குமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

## 6. தேனீக்கள்

நீண்டகாலமாக மக்கள் தேனின் உபயோகத்தைக் கண்டறிந்திருக்கின்றனர். பண்டைக்காலத்தில் நம் பெரியோர்கள் விருந்தினரை உபசரித்தற்கும், தெய்வங்களை ஆராதித்தற்கும் தேனை இன்றியமையாததொரு பொருளென மதித்திருந்தனர். மற்றும் அதனை நல்ல உணவுப் பொருளாகவும், பல வியாதிகட்கு மருந்தாகவும், சில மருந்துகளை யுண்ண அநுபானமாகவும் உபயோகித்து வந்தனர். எளிதிற் கேடுறும் பழங்களையும், முட்டைகள் போன்ற பொருள்களையும் அழியாமற் காக்கும்பொருட்டு அவற்றைத் தேனிலிட்டு வைக்கும் முறையைச் சில தேயத்தினர் இன்றும் மேற்கொண்டு வருகின்றனர்; இம்முறையை முரபா என்று கூறுவர்.

பிற்காலத்தில் செயற்கைப் பொருளாகிய சர்க்கரையும் வெல்லமும் உலகத்திற் பரவவே தேனின் பெருமை குன்றியது. அதனை உணவுப்பொருளாகச் சேகரித்தலிற் கவனத்தைச் செலுத்தாது, மருந்துப்பொருளுக்கு வேண்டிய அளவுமட்டும் கிடைத்தாற் போதுமென்று மக்கள் எண்ணலாயினர். அதனால் இயற்கை வாயிலாய்க் கிடைக்கும் ஒரு நல்லுணவை அவர்கள் இழக்க நேர்ந்தது.

இவ்வாறு தேன் மதிப்பிழந்ததும், அதனைச் சேகரிக்கும் தொழிலுக்கும் பெருமை குன்றியது. மலைகளிலும் காடுகளிலும் உள்ள வேடுவர், நூதன முறைகளின் பயிற்சியில்லாமல் பழைய முறைகளையே மேற்கொண்டு தேன் சேகரித்து விற்று உபாய ஜீவனம் செய்கின்றனர். தேனீக்களின் தன்மையையும், அவற்றின் தொழில்களையும்பற்றி அவர்கள் அறிந்த விஷயங்கள் மிகச் சிலவே. திருந்திய முறைகளில் தேனைச் சேகரிக்கவும், அதனைக் காக்கவும் அவர்கள் அறிந்திராமையால் அவர்களுக்குக் கிடைக்கும் தேனும் நலங்குன்றி வருகின்றது.

இக்குறைகளை நீக்கி நாட்டினர்க்குத் தேனீக்களைப் பற்றியும், தேனைப்பற்றியும் நல்லறிவு ஊட்டுவதற்காக இக்

காலத்தில் அறிஞர் பலர் நூல்கள் எழுதியும், பிரசங்கங்கள் புரிந்தும் வருகின்றனர். மற்றும் குறைந்த வருவாயினல் இடர்ப்படும் நம் கிராம மக்கட்குத் தேன் திரட்டலை ஒரு சிறு தொழிலாகக் கற்பிக்கவும் முயற்சிகள் நடந்து வருகின்றன. சாதாரணமாக நம் நாட்டுக் கிராமவாசி யொருவனது சராசரி வருஷவருமானம் முப்பத்தைந்து ரூபாய் முதல் ஐம்பது ரூபாய் வரை யிருக்கும் என்று கணக்கிட்டிருக்கின்றனர். குறைந்த இவ் வருவாயைக்கொண்டு அவன் நல்வாழ்வு பெறுதல் கூடுமா? ஆகவே மிகவும் சுலபமான தொழில்களால் அவன் தன் நிலையை விருத்தியாக்கிக் கொள்ளுதல் நல்லதன்றே? ஐந்து ரூபாய் முதலைக் கொண்டு ஒரு குடியானவன் நூதன முறையில் தேனீக்களை வளர்த்து ஆண்டொன்றுக்குக் குறைந்தது பதினைந்து ரூபாய் முதல் முப்பது ரூபாய் வரையில் இலாபம் அடையலாம் என்று கணக்கெடுத்திருக்கின்றனர். ஆதலால், ஜீவனத்துக்கு வழிதேடும் கிராமவாசிகளிற் பெரும்பாலோர் தேனீக்களின் வகைகள், அவை தேன் சேகரிக்கும் முறை, தேனீக்களை வளர்த்துத் தேனெடுக்கும் விதங்கள் இவற்றைப்பற்றி அறிந்துகொள்வது இன்றியமையாததாகும்.

தேனீ மற்ற ஈக்களைப்போல முதலில் முட்டை வடிவமாக இருந்து, பின்பு கை கால்களில்லாத புழுவாகி, அப்பால் உருவம் சிறிதளவு அமைந்த ப்யூபா (pupa) என்னும் நிலையை யடைந்து பின்பு பெரிய பூச்சியாக வளர்கிறது.

மனிதர் சமூக வாழ்க்கையை நடத்துகின்றனர் என்பது யாவரும் அறிந்ததே. ஒவ்வொரு சமூகத்திலும், அதனிலுள்ளவர்களின் ஒழுக்கத்திற்காகச் சில விதிகளும் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு கிராமத்தில் சிலர் வியவசாயம் செய்தும், சிலர் நூல் நூற்றுத் துணி நெய்தும், சிலர் புரோகிதம் முதலிய ஆத்ம காரியத்தைக் கவனித்தும், சிலர் பல்வகைக் கல்விகளையும் கற்றுத் தாம் கற்ற கல்வியை ஊராருக்குப் பயன்படுத்தியும். சிலர் பானை வனைதல், தச்சு, கொத்து முதலிய தொழில்கள் புரிந்தும் கிராம வாழ்க்

கையைச் செவ்வைப்படுத்தி வருகின்றனர்களே. அவ்வித வரையறையின்றி எவரும் தம் மனம்போனபடி நடப்ப தென்றால் சமுதாய வாழ்க்கையில் எவ்வளவோ இடர்ப்பாடு கள் நேரும். அவ்வாறே பிராணி வருக்கங்களிலும் பல சமுதாயக் கட்டுப்பாடுகள் காணப்படுகின்றன. எறும்பு, செல், தேனீ இவற்றினிடையே உள்ள சமுதாய முறைகள் மிகவும் வியப்பானவை.

தேனீக்கள் கூட்டம் கூட்டமாகவே வசிக்கின்றன. ஒரு கூட்டத்தில் மூவகை ஈக்கள் உண்டு. அவை முறையே ராணி ஈ, வேலை செய்யும் ஈ, சோம்பேறி ஈ எனப்படும். ஒரு கூட்டத்தில் ராணி ஈ ஒன்றே இருக்கும். அக்கூட்டத் திற்கே அது தாயாகும். அதன் தொழில் முட்டையிடுதலே. பிற ஈக்களைவிட உருவத்தில் அது பெரியதாகக் காணப் படும். ஒரு ராணி ஈ சாதாரணமாக மூன்று ஆண்டுகள் வரை வாழ்கின்றது. நல்ல பருவகாலத்தில் நாளொன் றிற்கு ஒரு ராணி ஈ இரண்டாயிரத்திற் கதிகமான முட்டை களை இடுகிறதென்று நிபுணர்கள் கணக்கெடுத்திருக்கின் றனர்.

இரண்டாவது வகையைச் சேர்ந்தனவாகிய வேலை செய்யும் ஈக்களே கூட்டத்தில் முக்கியமானவை. அவை பெண்களே யெனினும் சிறிய அறைகளில் வளர்வதால் முட் டையிடும் சக்தியை அடைவதில்லை. அவை ஆயிரக்கணக் காகக் கூடுகளைச் சுற்றிப் பறப்பதை நாம் காணலாம். சில கூடுகளில் அறுபதினாயிரத்துக்கு அதிகமாய் வேலை செய்யும் ஈக்கள் இருப்பதாகத் தெரிகிறது.

இந்த ஈக்களே கூட்டில் முக்கியமானவை என்று கூறி னோம். இவற்றின் வேலைகள் இன்னவையென்று கவனிப் போம். இவைகளே கூடுகளைக் கட்டுகின்றன. அக்கூடுகள் ஈக்களின் உடம்பிலிருந்து வரும் ஒருவகை மெழுகினால் கட் டப்படுகின்றன. இவைகள் முட்டைகளை அடைகாத்தும், புழுக்களுக்கு உணவூட்டியும், பிறகு அவற்றிற்குச் சுவ ரெழுப்பியும் இளம் பூச்சிகளைப் பாதுகாத்து வளர்க்கின்றன.

இனத்துக்கு விரோதமாக வரும் பகைகளுடன் சண்டை யிட்டு அவற்றைத் துரத்துவதும் இவற்றின் வேலையே.

இன்னும் சில இறந்த பூச்சிகளை அப்புறப்படுத்தி, அசுத் தங்களைக் களைந்து கூட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்கின்றன. நீண்டதூரம் பறந்து தேனைக்கொண்டு சேர்ப்பதும் இவ்வீக்களின் தொழிலாகும். இவற்றிற்கு வேலை இவ்வளவு கடினமாக இருப்பதால் ராணி ஈயைப் போல இவை நீண்டகாலம் உயிரோடிரா. சாதாரணமாக நம் நாட்டில் இவை ஆறுவாரம் முதல் மூன்று மாதம் வரை யிலேதான் வாழ்கின்றன. ஆயினும், ராணி ஈ அளவற்ற முட்டைகளையிட்டு வருகின்றமையால் கூட்டத்தின் தொகை குறையாமலே இருந்து வருகிறது.

மூன்றுவது வகையாகிய சோம்பேறி ஈக்களான ஆண் கள் வேலைசெய்யாமல் தேனடையிலுள்ள தேனைக் குடித்துப் பாழாக்குவதால் அவற்றை வேலைசெய்யும் ஈக்கள் பெரும் பாலும் கொன்றுவிடுகின்றன. இவ்வாறு தேனீயின் சமூக வாழ்க்கை இனிது நடந்தேறுகின்றது. இச் சமூகத்தில் ஒவ்வோர் அங்கத்தில் இருப்பனவற்றிற்கும் தனித்தனி வேலையுண்டு. வேலை செய்யாமலிருப்பவற்றை வாழ முடி யாமற் செய்துவிடுவதே தேனீ ராஜ்யத்தின் முறை.

சில சமயங்களில் தேனீக்கள் இடம்விட்டு இடம் மாறுத லுண்டு. இம்மாறுதல்கள் சீதோஷ்ணங்களால் ஏற்படுகின் றன. ஓரிடத்தின் சீதோஷ்ணநிலை ஈக்களின் வாசத்திற்கு அனுகூலமாயிராவிடின் பூச்சிகள் எல்லாம் அவ்விடத்தை விட்டு வேறோரிடம் செல்லும்; சிறிதுகாலம் வரையில் அப் புதிய இடத்திலிருந்து பிறகு பழைய இடத்தையே சாரும். இவ்வண்ணம் மலைகளிலிருக்கும் ஈக்கள் நாட்டுக்கு வருவ தும் பின்பு திரும்புவதும் நம் தேசத்தில் வழக்கமாக உள்ளன.

இன்னுமொரு விதமான பெயர்ச்சியும் இவ்வீக்களிடம் உண்டு. ஒரு கூட்டம் மிகப் பெரிதாகிவிட்டதாகத் தோன் றினல் அக்கூட்டத்தின் ஒரு பகுதி வேறோரிடம் போக

முயலும். போவதற்குச் சில நாட்கள் முன்பாக ராணி ஈ இருக்கத்தக்க சில அறைகளைக்கட்டி அங்கே ராணிப் புழுக் களை வேலைசெய்யும் ஈக்கள் மிகவும் ஜாக்கிரதையாக வளர்க்கும். புதிய ராணி ஒன்று தோன்றியவுடனே பழைய ராணியும் சில சோம்பேறி ஈக்களும், வேலை செய்யும் ஈக்களும் ஒரு கூட்டமாய்ப் புறப்பட்டு மற்றோ ரிடத்துக்குச் சென்றுவிடும். சிற்சில சமயங்களில் ஒன் றுக்கு மேற்பட்ட கும்பல்களும் புறப்படுவதுண்டு. அப் பொழுது முன்னே பிறந்த ராணி கும்பலுடன் செல்ல, பின்னே பிறந்த ராணி கூட்டில் தங்கும். வெளியேற்றம் நின்றுவிடுமாயின் ராணிகள் வளரும் அறைகள் அழிக்கப் பட்டுவிடும். ஏனெனில் ஒரு கூட்டத்திற்கு ஒரு ராணிக்கு மேல் இருப்பதில்லை.

தேனீக்களுக்குச் சில விரோதிகள் உண்டென்று சொன்னோமல்லவா? சில பறவைகளும், வண்டுகளும், ஈக் களும், பல்லிகளும் அவற்றை அழிக்கின்றன. ஒருவகை விட்டில்கள் இரவில் தேன் கூட்டில் நுழைந்து தேனைக் குடித்துவிட்டு அங்கே தம் முட்டைகளை யிட்டுவிட்டுச் செல் கின்றன. அம்முட்டைகள் வெடித்தவுடன் புழுக்கள் வெளி யாகித் தேன்கூட்டைப் பாழாக்குகின்றன. தேனீயை வளர்க்கிறவர்கள் இந்த விரோதிகள் தேன்கூட்டினிடம் அணுகாமற் பாதுகாக்கவேண்டும்.

தேனீயிடம் பழகியவர்கள் அதன் கொடுக்கின் வன்மை யைப்பற்றி நன்கு அறிவர். கொடுக்கு ஒரு கொக்கிபோல் பின்புறமாக வளைந்திருத்தலால், அது நம் உடலிற் பட்ட வுடன் அங்கே தங்கிவிடுகின்றது. அதனுடன் ஈயின் வாற் புறத்தின் ஒரு பாகமும் ஒடிந்துவிடுகிறது. இவ்விதம் ஒருவ ரைக் கொட்டினபின் தேனீ உயிர் வாழ்வதில்லை. கொடுக்கின் அடிப்புறத்தில் ஒரு சிறிய விஷப்பை இருக்கிறது. அவ்விஷம் உடலிற் பாய்ந்தவுடன் எரிச்சலும் வீக்கமும் உண்டாகின் றன. சிலர் கொட்டின இடத்தை நன்கு தேய்த்து விடுகின் றனர். அப்படிச் செய்வது விஷம் நன்கு பாவவே உதவு

மாதலால், கொட்டின இடத்தைத் தேய்க்காமல் ஒரு கத்தி யினலோ ஊசிமுனையினலோ அக்கொடுக்கை எடுத்துவிட முயல்வதே மிகவும் நன்மையாகும். நீருடன் கலந்த நவச் சாரத்தை அந்த இடத்தில் தடவுவதும் நல்லதென்பர்; வீக் கத்தை நீக்க வெந்நீர் ஒற்றடம் உதவியாகும். ராணி தன் கொடுக்கால் கொட்டுவதில்லை. சோம்பேறி ஈக்குக்கொடுக்கே இல்லை.

தேனீயின் உறுப்புக்களில் முக்கியமானவை இன்னும் சில. ஈயின் நாவானது மலருக்குள் நுழைந்து வெளிவரத் தக்கவாறு அமைந்துள்ளது. பின்னங்கால்கள் மகரந்தங் களைச் சேகரிக்கும்படி அகன்றும் மயிரடர்ந்தும் இருக்கின் றன. வேலை செய்யும் ஈயின் அடிவயிற்றிலுள்ள நான்கு இரட்டை எலும்புகளின் உதவியால், அது மெழுகைச் செய் கிறது. மெழுகு அடைகட்ட உதவும். ஒரு ராத்தல் மெழுகைச் செய்ய ஈக்கள் ஏழு முதல் இருபது ராத்தல் வரையில் தேனைக் குடித்தல் அவசியமானது என்கின்றனர்.

ஈக்கள் தேனை எடுப்பது விசித்திரமானது. செடிகள் பூக்களின் மூலமாக ஒருவிதமான ரசத்தை வெளிப்படுத்து கின்றன. அதனைத் தேனீ தன் நாக்கால் உறிஞ்சி வயிற்றினிடத்திலுள்ள ஒருபையிற்சேர்க்கிறது. அப்பையில் ரசம் தங்குங் காலத்தில் அது சில மாறுதல்களை யடைந்து தேனுகிறது; தன் பை நிறைந்தவுடன் ஈ கூட்டுக்கு வந்து ஓரறையில் இருந்து தேனை அங்கே உமிழ்ந்து விடுகின்றது.

தனக்கு உணவாக ஈ தேனைச் சேகரிக்கிறது. ஆனல் அது தேனகப்படும் வரையிற் சேகரித்துக்கொண்டே யிருக் கும். பூக்களில் வருஷம் முழுவதும் ரசம் அகப்படுவ தில்லை. இடத்திற்குத் தக்கபடி பூக்கள் ரசத்தைக் கொடுக் கின்றன. தாழ்ந்த நிலங்களில் ஜனவரி மாதம் முதல் ஏப்ரில் வரையிலும் ஈக்களுக்கு ரசம் கிடைக்கும். தேனீ வளர்ப்பவர்கள் ரசந்தரும் பூக்களையுடைய செடிகளைச் சமீ பத்தில் வளர்ப்பது நலம். எனினும் ஈக்கள் பூவிருக்கு மிடமெல்லாம் தேடி அலைந்து தேன் கொண்டுவருவதால்

நம்மால் செடி கொடிகள் வளர்க்கப்படாவிடினும், ஈக்கள் நமக்காகத் தேனைக் கொண்டுவருகின்றன. சில சமயங்களில் அவை பூக்களை நாடி மூன்று மைல் தூரங்கூடச் செல்கின்றனவென்று சொல்வார்கள். பல்லாயிரம் பூக்களிலிருந்து எடுக்கப்படும் தேன் சிறிதளவே ஆகிறதென்று நாம் அறியும்போது ஈக்கள் செய்யும் வேலையின் மிகுதியும் உயர்வும் நமக்குப் புலனாகும். நல்ல ரசமுள்ள ஒருவகையான நாற்பத்தாறாயிரம் பூக்களினின்றும், அதனினும் சிறிதளவு குறைந்த அளவு ரசமுள்ள மற்றொரு வகையான லக்ஷத்து இருபதினாயிரம் பூக்களிலிருந்தும் எடுக்கப்படும் தேன் ஓர் அவுன்ஸ் அளவுள்ளதென்றால் தேனீக்களின் உழைப்பின் பெருமையை யாரே பகர்வர்!

நம் நாட்டில் காணப்படும் தேனீக்களில் மூன்று வகை இந்நாட்டிற்கே உரியன. அவற்றுள் பாறை ஈ (Apis Dorsata) என்பது மலைப்பாறைகளிலும், நீளமான மரக்கிளைகளிலும் கூடுகட்டும். தேனடை ஒன்றிலிருந்து கிட்டத்தட்ட அறுபது அவுன்ஸ் தேன் எடுக்கப்படும். ஆண்டொன்றுக்கு ஏழு லக்ஷம் ரூபாய் பெறுமான மெழுகு நம் நாட்டினின்று ஏற்றுமதியாகின்றது. அதிற் பெரும்பாகம் இந்த ஈக்களின் அடைகளினின்றே கிடைப்பது.

பாறை ஈக்களின் கொடுக்குகள் மிகவும் கொடியன. யானைகளையும் அவ்வீக்கள் கொன்றுவிடும். மனிதர்களை அவை பல மைல்கள் தூரம் துரத்திச் செல்லும். தண்ணீருள் மூழ்கி ஒளிந்துகொள்ள நினைத்தாலும் அவை விடமாட்டா. மூழ்கியவர் மூச்சுவிட வெளியில் வரும் வரையில் நீர்ப்பரப்பின்மேலேயே பறந்துகொண்டிருந்து, அவர்கள் தலையைத் தூக்கியவுடன் கொட்டிவிடும். வேடர்கள் அடையினடியில் புகையிட்டும், நெருப்புப் பந்தங்களைச் சுழற்றியும் பூச்சிகளைக் கொன்று தேனை எடுக்கிறார்கள்.

இரண்டாவது வகை ஈ இந்தியன் ஈ (Apis Indica) என்று வழங்கப்படுகிறது. உருவத்தில் இது பாறை ஈயைக் காட்டிலும் சிறியது. இந்த ஈக்கள் மலைகளிலும் நாடுகளிலும்

வசிக்கின்றன. ஒரே தடவையில் எதிரெதிராகப் பல அடைகளை இவை கட்டுகின்றன. சாதாரணமாக ஒரு பெரிய அடையினின்று எழு அவுன்ஸ் தேன் கிடைக்கும்.

மூன்றாவது வகை ஈ இன்னும் சிறியது. இது கோசுத்தேனீ (Apis Florea) என்று வழங்கப்படுகின்றது. இவ்வகை ஈக்களின் கூட்டம் ஒரு சமயத்தில் ஓரடையே வைக்கும்; அடையும் உள்ளங்கை அகலமேயிருக்கும். வீட்டுக் கூரைகளிலும், சந்துகளிலும், புதர்களிலும் இவ்வடைகள் வைக்கப்படும்.

இவைகளையன்றி ஐரோப்பிய ஈயென்னும் ஒருவகை ஈ நம் நாட்டிற் குடியேறியிருக்கிறது. இந்த ஈ மிகவும் சுறுசுறுப்புள்ளது. அதிகமாக இது கொட்டுவதில்லை. பல வழிகளில் இது மிக்க சிறப்பு வாய்ந்திருக்கின்றமையால் நூதனமாகத் தேனீக்களை வளர்க்க விரும்புகிறவர்கள் இவ்வகை ஈக்களைத் தங்கள் கூடுகளிற் குடியேற்றுகிறார்கள்.

தேனீக்களை வளர்க்கும் விதத்தைப்பற்றி இனிமேல் கவனிப்போம். மலைவேடர்கள் மரக்கட்டைகளில் துவாரமிட்டு அவற்றையும், தென்னங் கொட்டாங்கச்சிகளையும், பானைகளையும் மரங்களில் தொங்கவிட்டும், வீட்டுக் கூரைகளிற் கட்டியும் தேனீக்களை வளரவிடுகிறார்கள். நாடுகளில் ஈக்கள் தாமே புதர்களிலும் வீட்டுச் சுவரிலுள்ள துவாரங்களிலும் விட்டங்களிலும் கூடு கட்டுகின்றன. தேனீ வளர்த்தலினால் உண்டாகும் இலாபத்தைப்பற்றிய அறிவு நம் நாட்டினர்க்கு இன்னும் உண்டாகாமையால் ஈக்களுக்காகக் கூடமைக்கவும், அவற்றிற்கு நல்ல உணவைச் சேகரித்துக் கொடுக்கவும் சுத்தமான முறையில் தேனை எடுக்கவும் கூடாதவர்களாகிப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் எவ்வித முறைகளைக் கையாண்டனரோ அவ்வித முறைகளையே இன்றும் பின்பற்றி வருகின்றனர்.

நவீன காலத்திலோ, பலவித சுலபமான யந்திரங்களின் மூலமாய் ஈக்கள் துன்பமில்லாமல் கூடு கட்டவும் அடை வைக்கவும் அனுகூலம் உண்டாகி இருக்கிறது. சாதாரண

மான கள்ளிப்பெட்டி ஒன்றினால் ஒரு கூடுசெய்து அதிற் பல சட்டங்களை மேல்மூடியிலிருந்து கீழ் நோக்கித் தொங்கும் படியாக அமைக்கிறார்கள். அச்சட்டங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தேனடையைப்போல் பல அறைகள் கொண்டதாக இருக்கும். பெட்டியின் பக்கப் பலகைகளிற் காற்றோட்டத்திற்காகத் துவாரங்கள் விடப்பட்டும், மேற்பாகம் மழையும் வெயிலும் காற்றும் புகாவண்ணம் மூடப்பட்டும் இருக்கும். ஆனால் ஈக்கள் வந்து போகமட்டும் இடம் அங்கே காணப்படும்.

ஈக்கள் வீணாக மெழுகு செய்து களைத்துப்போகா வண்ணம் அடைகட்டுமிடங்களில் மெல்லிய மெழுகுக்காகிதங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. தேனிருக்கும் அறைகளில் ராணி முட்டையிட்டு அதனைக் கெடுக்காவண்ணம், வேலை செய்யும் ஈக்கள் மாத்திரம் நுழையத்தக்கபடி மெல்லிய இரும்புக்கம்பிகள் சில அடைகளின் முன்னால் வைக்கப்படும். அவை ராணியை உள்ளே புகவிடமாட்டா. இவ்வகையமைப்பே தேன் மகரந்தம் முதலியன கலவாமல், சுத்தமாக இருக்க ஏதுவாகின்றது.

ஈக்களைப் பிடித்து வருவதற்கும் சுலபமான சில வழிகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அவற்றைப் பிடிக்கப் போலிக் கூடுகளும் வலைகளும் இருக்கின்றன. அவற்றால் ஈக்களைப் பிடித்து வருதல் சுலபமாகும். அவற்றைக் கொண்டு வந்து நம் கூட்டில் வைத்துவிட்டால் அவை திரும்பவும் ஓடிப்போவதில்லை. ஆனால் கூடு அவற்றிற்குப் பொருந்தியிருக்கிறதா என்று அடிக்கடி நாம் பார்த்து வரவேண்டும். குளிர்காலத்திலும் மழைக்காலத்திலும் ஈக்கள் வெளியிற் போகா. அக்காலத்தில் சாக்கினாலோ கம்பளியினாலோ கூட்டை மூடிவைப்பது நலமாகும்.

சாதாரணமாகத் தேனீக்கள் தம் உணவைத் தாமே தேடிக்கொள்ளுகின்றன. தேனே அவற்றின் உணவு. புழுப் பருவத்தில் மகரந்தத்தை அவை உண்ணுகின்றன. தேனும் மகரந்தமும் எப்பொழுதும் அகப்படுமாயினும் மாரிக்

காலத்தில் பூக்கள் அதிகமின்மையால் தேன் அகப்படுவது அரிது. அக்காலத்தில் சிறிதளவு சர்க்கரை அல்லது தேன் கலந்த நீரைக் கூட்டினருகில் வைப்பதால் இந்த எளிய உணவைக்கொண்டு அவை காலங் கழிக்கும். இவ்வுணவு அளவுக்குக் குறைந்தே யிருத்தல் வேண்டும். அளவுக்கு மிஞ்சினால் இவற்றை ஈக்கள் அறையிற் கக்கித் தேனை உண்டாக்க முயலும். அத்தேன் பயனற்றதாதலால் பஞ்சகால உணவுபோலச் சிறிதளவு உணவு கொடுத்தலே நல்லது. மகரந்தத்திற்குப் பஞ்சமுண்டாகுமானால் அரிசி முதலிய தானியங்களின் மாவை உபயோகிக்கலாம். இதுவும் அளவுக்குக் குறைந்தே இருத்தல் வேண்டும். இவ்வுணவுகளைக் கொடுக்கப் பாத்திரங்கள் இருக்கின்றன.

தேனை எடுக்கவும் சில உபகரணங்கள் உண்டு. அவற்றின் உதவியால் பூச்சிகளின் உணவைக் குறைக்காமலும், அவைகளுக்குச் சேதம் வராமலும், பிறபொருள்கள் அதனோடு கலவாமலும் அடைகளைப் பிழிந்து தேனை எடுக்கிறார்கள். கூட்டிலேயே தேன் நன்றாக முற்றியிருத்தல் வேண்டும். முற்றாத தேன் சீக்கிரத்திற் கெட்டுவிடும்.

தேனைப்பற்றி எழுதப்பெற்ற நூல்கள் பல இருக்கின்றன. துரைத்தனத்தார் தம் வியவசாயப் பண்ணைகளில் தேன் சேகரிக்கும் முறைகளைக் கற்பிக்கிறார்கள். கிராம மக்கள் அவற்றை நன்கறிந்து அவ்வண்ணமே தத்தம் கழனிகளிலும் தோட்டங்களிலும் சில கூடுகளை வைத்துக் கொண்டு நூதன முறைப்படி ஈக்களைக் காப்பாற்றித் தேனெடுத்து விற்பதனால் அவர்களுக்கும் ஊதியம் உண்டு; நாடும் மேன்மையுறும்.

## 7. நாலந்தா பல்கலைக் கழகம்

ஆதிமுதல் நம் பரத கண்டமானது கல்வியையே கருந்தனமாகக்கொண்டு போற்றி வருகின்றது. உலகத்திற் பெரும்பாகம் அறியாமை யென்னும் இருளில் அழுந்திக் கிடந்த மிகப் பழைய காலத்திலே இந்தியாவின் பல்வேறு

இடங்களில் பெரிய மன்னர்களும், சிற்றரசர்களும், பிரபுக்க ளும், மடாதிபதிகளும் கல்விச்சாலைகளை அமைத்து அவற் றில் பல்லாயிரக்கணக்கான மாணவர்களைப் பயிற்றியும், உயரிய நூலாராய்ச்சிகளைச் செய்வித்தும், புதிய பல நூல் களை இயற்றுவித்தும் கல்வியறிவைப் பரப்பி வந்தனர். அத்தகைய கல்விச்சாலைகளுள், வடஇந்தியாவில் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையில் விளங்கிய நாலந்தா சங்காராமம் என்பது மிகவும் பெயர் பெற்றது.

சங்காராமம் என்பது பௌத்த பிக்ஷுக்கள் தங்குவதற் காகக் கட்டப்பட்ட விடுதியாகும். சங்கத்திற்குரிய சோலை யென்பது அதன் பொருள். மாரிக்காலத்தில் எங்கும் அலைய முடியாமல் ஓரிடத்தில் தங்கவேண்டியவர்களான பௌத்த சந்நியாசிகளுக்காக இத்தகைய விடுதிகள் மன்னர்களாலும், பொதுமக்களாலும் அங்கங்கே கட்டப்பட்டிருந்தன. பிக்ஷுக்கள் அவ்விடுதிகளில் தங்கித் தங்கள் காலத்தைத் தியானத்திலேயே செலவிட்டு வந்தனர். பிறகு நாளடைவில் அவ்விடங்கள் பிக்ஷுக்களின் நிலையான இருப்பிடங்களாக வும், கல்விமான்கள் கூடிச் சல்லாபஞ்செய்யும் சங்கங்களாகவு மாயின. இவ்விதம் சிறிது காலம் தங்குவதற்காக அமைக் கப்பட்ட இடங்கள் நிலையான இருப்பிடங்களாக மாறவே, கல்வியை விரும்பும் மாணவர்கள் அங்கே குழுமத் தொடங் கினர்; உபாத்தியாயர்களும், அவர்களுக்குத் தலைவர்களும் சேர்ந்தனர். போஜன சாலைகள் பல அமைக்கப்பெற்றன.

இவ்வாறு வளர்ச்சி பெற்ற சங்காராமங்களில் நாலந்தா என்னும் இடத்திலிருந்தது ஒன்று. நாலந்தா இப்பொழுது இருந்த இடமும் தெரியாமல் பாழடைந்த ஒரு சிற்றூராக மாறிவிட்டது. அது பாடலீபுரத்துக்கு அருகே வயல்களா லும் தோப்புக்களாலும் சூழப்பெற்றுக் கவனிப்பாரற்றுக் கிடக்கிறது. ஆயினும் ஏறக்குறைய ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே அங்கிருந்த சங்காராமம் உலகத்தை வியக்கச்செய்யும் ஸ்தாபனமாக இருந்தது.

புத்தர் காலத்திலேயே நாலந்தா செழிப்பும் செல்வமும் நிறைந்த கிராமமாக விளங்கிற்று. அப்பெரியார் அங்கே பலதடவைகள் சென்று தங்கியும் வந்தனர். அக்காலத்தில் மகத நாட்டின் தலைநகராயிருந்த இராஜகிருஹம் என்ற நகருக்கு அருகில் நாலந்தா இருந்தமையால் மகத மன்னர்களும் அந்தக் கிராமத்தைச் செவ்வனே பாதுகாத்து வந்தனர். அசோகன் என்னும் மகத மன்னன் பௌத்த மதத்தை மேற்கொள்ளலாயினன்; அவனே நாலந்தாவில் முதன்முதல் விகாரமொன்றினைக் கட்டுவித்தனன். பௌத்த மதத்தின் இரு பிரிவுகளுளொன்றான மகாயானம் என்னும் பகுதியைச் சார்ந்த பிக்ஷுக்கள் அங்கே தங்கலாயினர்.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் அரசாட்சிசெய்த குப்த மன்னர்கள் காலத்திலேதான் அவ்விகாரம் புகழ்பெறத் தொடங்கிற்று. சக்கராதித்தியர் என்ற குப்த மன்னர் அவ்விடத்திலே பெரிய கட்டிடங்கள் கட்டுவித்து நூற்றுக்கணக்கான பிக்ஷுக்கள் தங்குவதற்குரிய ஏற்பாடுசெய்தனர். கொஞ்சங்கொஞ்சமாக மாணவர்களும் அங்கேவந்து கூடினர். அவர்களுடைய உணவுக்கும் பிற வசதிகளுக்கும் அந்தக் கிராம மக்களும், பிரபுக்களும், சிற்றரசர்களும் மானியங்கள் விட்டனர். கன்னோசியில் அரசாண்ட ஹர்ஷ மன்னனும், அந்நிய நாடுகளான ஜாவா ஸுமத்ரா என்பவற்றிலிருந்த மன்னர்களும் அதன் வளர்ச்சியில் ஊக்கங்கொள்ளலாயினர். திபெத், சீனா, காந்தாரம், தக்ஷசிலம், காஞ்சி முதலிய தூர தேசங்களினின்றும் யாத்திரிகர்களும், குருமார்களும், மாணவர்களும் திரள் திரளாக அங்கே வந்து கல்வி பயில்வாராயினர். நாலந்தா விரைவில் உலகப்பிரசித்தி பெற்றது.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஹ்யூன்-த்ஸாங் என்ற சீன யாத்திரிகர் அங்கு வந்து சில மாதங்கள் தங்கிக் கல்வி கற்றார். அப்பொழுது அவர் எழுதிய குறிப்பில் பின்வரும் விஷயம் தெரிகிறது:—

"சாலையின் நான்கு புறங்களிலும் செம்பூராங் கற்சுவரொன்று சூழ்ந்து கிடந்தது. ஒரு கோபுரத்தின் வழியாய்

நுழைந்தால் கலாசாலைக்குள் புகலாம். அதையன்றி அங்கு மிகப் பெரிய மண்டபங்கள் எட்டு இருந்தன.

"மிகவும் நன்றாக அலங்கரிக்கப்பெற்ற கோபுரங்களும், மிகச் சிறந்த வேலைப்பாடுகள் அமைந்த சூளிகைகளும் சித்திரிக்கப்பட்ட மலைச்சிகரங்களைப்போலத் திகழ்ந்தன; நக்ஷத்திரசாலை யொன்று அவற்றின் மிக்குயர்ந்து மேகங்களைக்கடந்து வானத்துள் நுழைந்து மறைவதுபோலத் தோன்றிற்று.

"ஜன்னல்களிலிருந்து பார்த்தால் மேகங்கள் அருகே செல்வது தெரியும்; வானத்தில் உள்ள சூரிய சந்திரர்களும், கிரஹங்களும் அருகிலிருப்பது போலத் தோன்றும்.

"இவற்றிற் கப்பால் நான்கு உப்பரிகைகளுள்ள பிக்ஷுக்களின் இருப்பிடங்கள் காணப்பெறும். யாளிகளின் வாய்கள்போன்ற வாய்களையுடைய முன்னணிகளும், வர்ணம் பூசப்பெற்ற பலகணிகளும், பவழம்போன்று சிவந்த தூண்களும் அங்கே உண்டு. அழகிய உருவங்களும், அலங்கரிக்கப்பெற்ற சிறு தூண் வரிசைகளும் பகலவன் ஒளியைப் பல நூறு கிரணங்களாகப் பகுத்தொளிரும் நிறம் வாய்ந்த ஓடுகளாலமைந்த கூரைகளும் கண்களையும் மனங்களையும் ஒருங்கே கவர்வனவாக இருந்தன."

இத்தகைய வளமை மிகுந்த கல்விச்சாலையில் அக்காலத்துச் சிறந்தனவாயும் இன்றியமையாதனவாயும் கருதப்பட்ட கலைகளெல்லாம் பயிலப்பெற்றன. வேதங்களையும், வேதாங்கங்களையும், பௌத்தமதத் திரிபிடகங்களையும், மகாயானக் கொள்கை நூல்களையும், மந்திர சாஸ்திரத்தையும், பல்வகைக் கலைகளையும் மாணவர்கள் கற்றனர். கல்வியின் நோக்கம் பணம் பெறுதலென்ற கொள்கை அக்காலத்தில் இல்லை. உண்மை யறிதலும், உலகம் இன்பத்தையும் அழகையும் பெறுதலில் உதவி புரிதலும், தத்துவங்களை யறிந்து போதித்தலும் கல்வியின் பெரும்பயனாக அப்பொழுது மதிக்கப்பட்டன. அதற்குரிய துறைகளையே கலாசாலைகளிலும் மேற்கொண்டு வந்தனர்.

அந்நாளில் இந்தியாவில் பெரிய கல்விமான்களாக இருந்தவர்கள் நாலந்தாவில் பண்டிதர்களாக விளங்கினர். அவர்களுள் நாகார்ஜுனர், ஆரியதேவர், தின்னுகர், தரும பாலர், சீலபத்திரர், தருமகீர்த்தி முதலியோர் மேன்மை யுற்றவர்களாவர். தின்னுகரும், தருமபாலரும் தமிழ் நாட்டிற் பிறந்து காஞ்சீபுரத்திற் கல்வி பயின்று அறிவால் மிக்கு நாலந்தாவின் கழகத் தலைவர்கள் ஆனார்கள். பௌத் தர்களுக்குள் இன்றளவும் அவர்கள் பெயர்கள் இணையில் லாப் புகழுடன் விளங்குகின்றன. அவர்களுடைய பெயர் சீனு, திபெத் முதலிய அந்நிய நாடுகளிலும் பரவிற்று.

நாலந்தாக் குருமார்களில் துறவுபூண்ட மன்னர்கள் சிலரும் இருந்தனர். ஒரு சமயம் கன்னேசியில் ஹர்ஷ மன்னன் கூட்டிய பௌத்த சபைக்கு நாலந்தாவிலிருந்து ஆயிரம் குருமார்கள் சென்றிருந்தனராம்.

நாலந்தாவின் வாழ்க்கை மிகவும் கடுமையானது. ஆசிரியர்களும், மாணவர்களும் விடியற்காலையி லெழுந்து குளிர்ந்த நீரில் மூழ்கி, ஆங்குள்ள விக்கிரகங்களுக்குத் தூப தீப நைவேத்தியங்களுடன் பூஜை செய்யவேண்டும். ஜப தபங்களை நேர்மை தவறுமல் நடத்தவேண்டும். அந்தியிலும் இத்தகைய பூஜைகள் உண்டு. ஆங்குள்ள யாவரும் பிரம சரிய விரதத்தையே கைக்கொள்ளுதல் வேண்டும். அக்கா லத்து நாலந்தா வாழ்க்கையை நேரிற் கண்ட யாத்திரிக ரொருவர் பின்வருமாறு எழுதுகின்றார்:—

"தினந்தோறும் குருக்களில் ஒருவர் அப்பெரிய ஆச்சிர மத்தைச் சுற்றிக் கடவுள்வாழ்த்துக்களை உரக்கச் சொல் லிக்கொண்டே செல்வர்; அவருக்குமுன் இளைஞர்களும் பணியாளர்களும் பூக்கள், தூமங்கள் முதலியவற்றை ஏந் திச் செல்வர். ஒவ்வொரு மண்டபத்துள்ளும் அவர் நுழைந்து மூன்று முதல் ஐந்து சுலோகங்களை உரக்கக் கூவு வர். விடிவதற்குள் இதுவும் முடிந்துவிடும்.

"சிலர் புத்த வடிவத்தின் முன் இருந்து கடவுளைப் புகழ் வர்; இன்னும் சிலர் அங்கு வந்து மண்டியிட்டுக் கண்களை

மூடித் தியானத்தில் இருப்பர்; முடிவில் அவர்கள் மும் முறை புத்தருக்கு வணக்கம் செய்துவிட்டுச் செல்வர்."

இவ்விதம் தினந்தோறும் காலையில் ஆங்குள்ள அனை வரும் செய்துவந்தனர்.

மாணவர்களும் இவ்விதியின்படி ஒழுகுபவர்களே யாவர். முன்பு நாம் குறித்தபடி கல்வி யொன்றையே நோக்க மாகக்கொண்டு, பிரமசரிய ஒழுக்கத்தினின்றும் வழுவாமல் மாணவர்கள் அக்கலாசாலையில் பயின்று வந்தனர். சிலர் ஆரம்ப வகுப்புக்களிலிருந்தே அங்கே கல்வி கற்றனர். அவர் கள் ஆறு பிராயத்தில் கல்வி கற்கத் தொடங்குவார்கள்; சிறிது எழுதப் படிக்கத் தெரிந்தவுடன் அவர்கள் எழுத் துக்களின் அளவையும் உச்சரிப்புக்களையும் நன்கு கற்றுக் கொள்ளப் பழகுவர்; பிறகு இலகுவான இலக்கணப் பாடங் கள் போதிக்கப்படும். எட்டுப்பிராயம் ஆவதற்குள்ளேயே வடமொழி இலக்கணங்களைக் கற்க அவர்கள் தொடங்கி விடுவர். வடமொழிப் பகுதிகளெல்லாம் அவர்களுக்குப் பாடங்களாகக் கற்பிக்கப்படும். பிறகு சிறிது சிறிதாக இலக்கணங்களின் பல பகுதிகளும் அவர்கட்குப் பாட மாகும். இவ்விதம் பதினைந்து பிராயம் அடைவதற்குள் அவர்கள் இலக்கண வித்துவான்களாகி வேதங்கள், வேதாங் கங்கள், சாஸ்திரங்கள், தருக்கநூல்கள் இவற்றையும் கற்கத் தொடங்குவர். இருபது பிராயத்திற்குள் அவர்கள் அவற்றி லும் தேர்ந்து உயர்தரக் கல்விக்கு உரியவர்களாவர்.

சிலர் அயலிடங்களில் கீழ்நிலைக் கல்விகளைப் பெற்று உயர்நிலைக் கல்விக்கே அங்கு வருவர். அவர்களின் கல்வியறி வைச் சோதிக்கும்முறை அதிக விந்தையானது. வாயில் காவலர் அவர்களைச் சில நாட்கள் வாசலிலேயே இருத்திப் பலவிதமான கேள்விகளைக் கேட்பர். அவற்றிற்குத் தக்க விடையளித்த பிறகே அவர்களை உள்ளே விடுவர். இவ் விதம் வருகிறவர்களுள் பத்துக்கு எட்டுப் பெயர்கள் இச்சோதனைகளில் தேர்ச்சி பெறாமல் திரும்பி விடுவ துண்டு.

கலாசாலைக்குள் மாணவர்கள் மிக்க எளிமையும் பணிவும் உள்ள வாழ்க்கையையே கடைப்பிடிக்கவேண்டும். அவர்கள் படிப்புக்காகச் செலுத்தவேண்டிய கூலி தொண்டு புரிதலே. குருக்களின் வீடுகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டியதும், அவர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரிவதும் அவர்களுடைய தொழில். ஆசிரியரும் மாணவர்களிடம் மிக்க அன்புகாட்டி வருவார். யாரேனும் ஒருவருக்கு நோய் நேரிடுமானால் குரு, சீடன் என்ற வேற்றுமையின்றி ஒருவருக்கொருவர் உதவிபுரிவர்.

ஒவ்வொரு குருவினிடமும் சிற்சில மாணவர்களே கல்வி கற்பர். கல்வி மிக ஆழ்ந்து பயிலவேண்டியதாயிருக்கும்; பல கலைகளிலும் நுனிப்புல்மேய்வதைக் காட்டிலும் சில கலைகளிலேனும் ஆழ்ந்த அறிவு பெறுவதே மேலானதென்பது அவர்களது கொள்கையாகும். மாணவர்கள் பெரும்பாலும் பிக்ஷையெடுத்துண்பதே அக்காலத்து வழக்கம். நாலந்தாவில் அறிவினால் ஏற்றத் தாழ்வு காணப்பட்டதேயன்றிப் பிறப்பினால் வேற்றுமையில்லை.

சிற்சில சமயங்களில் பலரை ஒன்று கூட்டிப் பொது உபந்நியாசங்களை அங்கே நடத்துவார்கள். அவை மிகத் தேர்ந்த பண்டிதர்களாலேயே செய்யப்படுமாதலின் கலாசாலை முழுமையும் அப்போது கூடுவதுண்டு. அவை மாணவர்களின் அறிவு விளக்கத்திற்குப் பெரிதும் பயன்பட்டு வந்தன.

நாலந்தாக் கல்வியில் மிக முக்கியமான பகுதி வாதம் புரிதலே. கலைகளைப்பற்றியும், சாஸ்திரக் கொள்கைகளைப் பற்றியும் மாணவர்கள் பலமுறை வாதங்கள் செய்வர். பல சமயங்களில் புறத்தேயிருந்துவரும் பண்டிதர்களும் அங்கு வந்து பலநாட்கள் ஒவ்வொரு பொருள்பற்றி வாதம் செய்வதுண்டு. ஆதிசங்கரர்கூட ஒருமுறை அங்கு வந்து வாதம் நிகழ்த்தியதாகக் கூறுவர். இவ்வித வாதங்களால் கல்வி மிகுதியும் உரம்பெறும்; ஐயங்களெல்லாம் அகலும்; நுட்பமான பகுதிகளிலும் கவனம் செலுத்தும் வாய்ப்பு

உண்டாகும்; பேச்சுவன்மை உறுதிப்படும். இந்த வாத முறைகளில் நன்ருகத் தேர்ந்தபின்பே மாணவர்கள் படித்துத் தேர்ந்தவர்கள் என்ற பெயர் பெறுவர்.

உணவு வகைகளைப் போலவே உடைவகைகளும் எளிமையும் நேர்மையும் உடையனவாக இருந்தன. மஞ்சள் நிறமுள்ள உள்ளங்கியொன்றும், நீண்டு தொங்கும் மேலங்கியொன்றும் குருக்களால் தரிக்கப்பட்டன. தலைமையாசிரியரான 'பண்டிதர்' சில சமயங்களில் தலைப்பாகை யொன்றையும் அணிந்துவந்தனர். காலையில் நீராகாரமும், நடுப்பகலில் கறிவகைகள் வெண்ணெய் பால் பழம் இவற்றுடன் கூடிய அரிசிச்சோறும், இரவில் எளியதோருணவும் உண்ணப்பட்டன; விரதநாட்களும் இடையிடையே உண்டு.

பிள்ளைகள் பொழுது போக்குக்காகச் சொக்கட்டான் ஆடிவந்தனரென்று தெரிகிறது. யானையேற்றம், குதிரையேற்றம், மல்யுத்தம் முதலிய விளையாட்டுக்களிலும் சிலர் பழகினர். ஆயினும் பெரும்பாலும் அவர்களுடைய கவனம் கல்வியிலேயே இருந்தது.

நாலந்தாவில் இருந்த நக்ஷத்திரசாலையில் வானசாஸ்திரமும், சில கைத்தொழில்களும் பயில்விக்கப் பெற்றன. சிற்பம், சித்திரம் முதலியனவும் இன்றியமையாக் கலைகளாக எண்ணப்பட்டன. ஒரு பெரிய புத்தகசாலை அங்கே இருந்தது.

அங்கே படித்துத்தேர்ந்த பண்டிதர்கள் உலகத்தில் பல பகுதிகளுக்கும் சென்று தாம் கற்ற கல்வியைப் பரவச் செய்தனர். சிலர் இராஜ சேவையில் அமர்ந்து அமைச்சர்களாயினர். பலர் உபாத்திமைத் தொழிலைக் கைக்கொண்டனர். பெரும்பாலோர் தம் அறிவு விளக்கமே தாம் கற்ற கல்வியின் பயன் என்று கருதி மேன்மேலும் கல்வித் துறைகளிலேயே ஈடுபட்டுப் புதிய நூல்களை ஆராய்வதிற் காலங் கழித்தனர். இங்ஙனம் நாலந்தா அறிவு உலகத்துக்கு ஒரு ஜோதியாய் விளங்கிற்று.

எதற்கும் முடிவு உண்டு. எண்ணூறு ஆண்டுகள் தனக்கு இணையில்லாமல் விளங்கிவந்த இப்பல்கலைக்கழகம் சிறிது சிறிதாக மங்கத்தொடங்கியது. பௌத்த மதம் இந்தியாவில் மலினத்தை அடையவே நாலந்தாவும் தன் ஒளியில் குறைய ஆரம்பித்தது. பிறகு பன்னிரண்டாம் நூற்றாண்டில் வடஇந்தியாவைச் சூறையாடிய ஹூணர்களின் கைகளில் அக்கலைவாழ் நகரும் அகப்படவே அது சின்னபின்னமாக்கப் பெற்று இப்பொழுதுள்ளபடி உருத்தெரியாத நிலையில் வீழ்த்தப்பட்டது. சமீபகாலத்தில் பூமியைத் தோண்டிப் பார்க்க, அங்கே எட்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு தனக்கு இணையில்லாமல் இருந்த அரிய கலாசாலையின் சின்னங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அகப்பட்டன. அதைப்போல இவ்விந்திய நாட்டு மண்ணுக்குள் மறைந்து கிடக்கும் அழகிய நகரங்கள் இன்னும் எத்தனையோ அறியோம்!

## 8. சொற்சாதுரியங்கள்

பிறக்கும்போதே பெருமைக்குரிய ஆற்றலுடன் பிறப்போர் ஒரு சாரார்; வேறு சிலருக்குப் பல காரணங்களால் பெருமை ஏற்றப்படுகிறது. இவ்விரு வகையினருள்ளே முதல் வகையினரையே சிறந்தோராக உலகம் மதிக்கும்.

தமிழ்நாட்டின் தவப்புதல்வராய்த் தோன்றிப் புகழ் படைத்த புண்ணிய சீலர்களுள் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் ஒருவர்.

இப்புலவர்சிகாமணி பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே 1815-ஆம் ஆண்டில் திரிசிரபுரத்தைச் சார்ந்த அதவத்தூர் என்னும் ஊரில் சிதம்பரம்பிள்ளை என்பவருடைய செல்வக்குமாரராகத் தோன்றினார். ‘விளையும் பயிர் முளையிலே தெரியும்’, ‘குலவித்தை கல்லாமற் பாகம்படும்’ என்னும் முதுமொழிகளுக்கேற்ப இவருடைய கல்வியறிவு அதி பால்யத்திலேயே யாவரும் வியக்கும்படி வளர்ச்சியுற்றது. அரிய ஞாபகசக்தியும், ஆராய்ச்சித் திறனும் இவர்பால் செவ்வனே அமைந்திருந்தன. தமிழ்

இலக்கண இலக்கியங்களையும், சைவ சாஸ்திரங்களையும் இவர் முறையாகக் கற்றார். பிற்காலத்துக் கம்பரென்று யாவரும் கொண்டாடும்படி கவி பாடுதலில் இவர் வல்லவ ராக இருந்தார். பல தலபுராணங்களையும், சில காப்பியங் களையும், பலபிரபந்தங்களையும் இவர் இயற்றியுள்ளார். அவ் வப்போது இவர் செய்துள்ள தனிப்பாடல்கள் மிகப்பல. இவருடைய செய்யுட்களில் பலவகைச் சுவைகளும் நிரம்பி யிருக்கும்.

இவர் சைவமடங்களுள் ஒன்றாகிய திருவாவடுதுறை மடத்தில் ஆதீன வித்துவானாக இருந்து பலருக்குப் பாடம் சொல்லிவந்தனர். இவருடைய கவியாற்றல் முதலிய வற்றைக் கண்டு அவ்வாதீனத்து அதிபராக இருந்த ஸ்ரீ அம் பலவாண தேசிகர் இவருக்கு 'மகா வித்துவான்' என்னும் பட்டத்தை யளித்தனர்.

பல மாணாக்கர்களுக்கு இடைவிடாது பாடஞ் சொல்லு வதும், தம்மிடம் வருவோருக்குத் தமிழ் நூல்களிலுள்ள அருமைச் செய்திகளை எடுத்துக்கூறி மகிழ்விப்பதும், புதிய செய்யுட்களை இயற்றுவதும் இவருடைய காலப்போக்காக இருந்தன. ஆசிரியருக்கு உரியனவாக நன்னூலில் உரைக் கப்பட்ட இயல்புகளுக்கெல்லாம் இவர் உறைவிடமாக விளங்கினர். படிப்பவர்களுடைய தரமறிந்து பாடஞ் சொல்லுதலில் இவர் மிக வல்லுநர். மற்றச் செயல்களை விடப் பாடஞ்சொல்லுதலே இவருக்கு மிகவும் இனிமையாக இருக்கும். மாணாக்கர்களுக்கு அன்னமளித்தும் பிற உதவி களைச் செய்தும் படிப்பித்தலில் இவர் விசேஷமான ஊக்க முடையவர். தமக்கு என்ன துன்பம் வரினும் மாணாக்கர் களை நல்ல நிலைமையில் வைத்துப் பார்த்தலில் இவருக்கு ஆவல் அதிகம்; அவர்கள் வேண்டியவற்றை அவர்களுக் குத் தெரியாமலே குறிப்பாலறிந்து உபகரிக்கும் வள்ளல். இவரிடமிருந்து பாடம் கேட்டோர் பல மதத்தினரும் பல சாதியினருமாவர். இவருடைய மாணாக்கர்களாக இருந்த பெருமை வாய்ந்தவர்களுள் ஒவ்வொருவரும் நல்ல நிலை

மையை அடைந்திருக்கின்றனர். அதனால் பல இடங்களி லிருந்து பலர் வந்து இவரிடம் பாடங்கேட்க வேண்டு மென்று முயலுவார்கள். மாதக் கணக்காகவும் வருடக் கணக்காகவும் இருந்து பாடங்கேட்டுப் பயனடைந்தோர் பலர். ஆனால் தம்மிடம் யார் பாடங்கேட்க வந்தாலும் அவரை முதலிற் பரீட்சை செய்து, பாடங்கேட்க அவர் தகுதியுள்ளவராக இருந்தால் மட்டும் அவருக்குப் பாடஞ் சொல்ல இவர் இசைவார். அவர் தகுதியில்லாதவராகக் காணப்படின் அவரைத் திரும்ப அனுப்பிவிடுவார்.

### (1) "எழுவாய் பயனிலை"

பாடஞ்சொல்லுவதில் இவருக்குள்ள கீர்த்தியை அறிந்த ஒருவர் தக்க கனவானிடமிருந்து ஒரு கடிதம் வாங்கிக் கொண்டு ஒரு சமயம் இவரிடம் வந்தார்; கொணர்ந்த கடி தத்தை இவரிடம் கொடுத்து வணக்கத்துடன் நின்ற னர். அச்சமயம் இவரிடம் பலர் பாடங் கேட்டுக்கொண் டிருந்தனர். கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு இவர் வந்தவரை ஓரிடத்தில் இருக்கச் சொல்லி அவரை நோக்கி, "என்ன படிக்கவேண்டும்?" என்று கேட்டார். அவர் இலக்கியம் பாடங்கேட்க வேண்டுமென்று கூறவே இவர், "இலக்கணம் படிக்கவேண்டாமா?" என்று வினவினர். வந்தவரோ சிறிதும் அச்சமில்லாமல், "இலக்கணம் நான் படித்திருக்கிறேன்" என்று விடை பகர்ந்தார். உடனே இப்புலவர் சிகாமணி, "அப்படியா? சந்தோஷம்! ஏதேனு மொரு செய்யுள் சொல்லுக, கேட்போம்" என்றனர். உடனே அவர் தமக்குத் தெரிந்த செய்யுளொன்றைக் கூறி னர். "நல்லது; இப்பாடலில் எழுவாய் பயனிலை என்ன?" என்று இவர் கேட்கவே, அவர் நெடுநேரம் யோசித்து ஒன் றும் தெரியாமல் மயங்கி விழித்தனர். அப்போது இவர் "எழுவாய், பயனிலை" என்று பகர்ந்தனர். "எழுந்து செல்லலாம், யோசிப்பதிற் பிரயோசனமில்லை" என்பது இவரது கருத்து. வந்தவர் அதனை உணராமல் பின்னும்

யோசனை செய்துகொண்டே யிருந்தார். உடனிருந்தவர்கள் குறிப்பாக அக்கருத்தை அவருக்குப் புலப்படுத்தினார்கள். அப்பால் அவர் அதனை யறிந்து இவருடைய மாணாக்கர் ஒருவரிடம் இலக்கணத்தைக் கற்று இவரிடமும் பின்பு சிலமாதமிருந்து இலக்கிய பாடங்கேட்டுத் தமிழில் நல்ல பயிற்சியுற்று விளங்கினார்.

## (2) "தேசிகர்"

வித்துவான்களை வறுமை யென்னும் கொடிய நோய் வருத்துமென்பதை யாவரும் அறிவர். இவ்விதிக்கு இப் புலவர் பெருமானும் விலக்காகவில்லை. இதனை யொருவகையாக அறிந்த இவருடைய மாணாக்கர்கள் தங்கள் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்தும் தங்களுக்குத் தெரிந்த தமிழபிமானிகளைக்கொண்டு அவ்வப்போது வேண்டிய உதவிசெய்வித்தும் வந்தனர். அத்தகைய மாணாக்கர்களுள் ஒருவரான வன்றொண்டச் செட்டியாரென்னும் கனவான் பாண்டி நாட்டில் உள்ள சில சிவ ஸ்தலங்களுக்கு இவரைக் கொண்டு புராணங்கள் பாடச் சொல்லலாமென்றும், அங்கங்கேயுள்ள பிரபுக்கள்மூலம் தக்க பொருளுதவி செய்விக்கலாமென்றும் எண்ணி அதற்கு வேண்டிய முயற்சி செய்தார். நகர வைசியப் பிரபுக்கள் இவருடைய புகழை நன்கறிந்தவர்கள். ஆதலின் மேலே குறித்த மாணாக்கருடைய நன் முயற்சி பயனுற்றது. கோயிலூர் வேதாந்த மடத்துத் தலைவராக இருந்த சிதம்பர ஐயா என்பவருடைய விருப்பத்தின்படி இவர் கோயிலூர்ப் புராணத்தைப் பாடி முடித்துப் பல தக்க வித்துவான்கள் கூடிய மகா சபையில் அரங்கேற்றி உயர்ந்த சம்மானத்தையும் நன்மதிப்பையும் பெற்றார். மேற்படி புராணத்தை ஆக்குவித்த சிதம்பர ஐயா என்பவரை, 'சிதம்பர தேசிகர்' என்று இவர் அப்புராணத்திற் கூறியிருந்தார். சில மாதங்கள் பொறுத்து இவர் திருவாவடுதுறைக்கு வந்தார். திருவாவடுதுறை மடத்திலிருந்த சில தம்பிரான்கள் கோயி

லூர்ப் புராணத்தை முற்றிலும் படித்துப் பார்த்துவிட்டு, “சைவரும் நமது மடத்து வித்துவானுமாகிய இவர் சிதம்பர ஐயாவைத் தேசிகரென்று சொல்லிவிட்டாரே. அவர் இவருக்குக் குருவா? அது முறையாகுமா? பணங்கொடுத்து விட்டால் வித்துவான்கள் யாவரையும் எந்தவிதமாகவும் புகழ்வார்கள்” என்று தங்களுக்குள் சொல்லிக்கொண்டனர். நேரே இவரிடம் வந்து கேட்க அவர்களுக்கு மனம் துணியவில்லை. அதனை ஒருவகையாக அறிந்துகொண்ட இக்கவிஞர் பெருமான், மேற்படி தம்பிரான்களுள் முக்கியமான ஒருவரைப் பார்த்து, “என்னைப்பற்றி இவ்வாறு *அங்குத்தி குறைகூறியதுண்டோ?” என்று கேட்டனர். “ஆம், சொன்னதுண்டு” என்றார் அவர். அப்பால் இவர், “பதினோராவது நிகண்டு ஞாபகத்திலிருக்கிறதா? தேசிகனென்பதற்கு அதில் என்ன பொருள் கூறியிருக்கிறது?” என்று கேட்டனர். அவர், “தேசிகன் வணிகன் ஆசான்” என ஒப்பித்தார். உடனே இவர், “அந்த நிகண்டின் பொருளைப் பின்பற்றித்தானே நானும் சொல்லியிருக்கிறேன். தவறொன்றும் செய்யவில்லையே. தேசிகரென்னும் சொல் வணிகரையும், ஆசிரியரையும் குறிக்கவில்லையா?” என்றார். இவருடைய சமற்காரமான விடையை அவர் கேட்டு ஒன்றும் சொல்ல முடியாமல் சமாதானமுற்றுச் சென்றார்.

## (3) “அத்துக் கேட்டுவிடும்”

கும்பகோணத்துக்குத் தென்மேற்கே ஏறக்குறைய நான்குமைல் தூரத்தில் திருமலைராயன் என்னும் நதிக்கு வடகரையில் பட்டீச்சுரம் என்ற ஒரு சிவஸ்தலம் உள்ளது; பல அற்புத சரித்திரங்களையுடைய பெருமைவாய்ந்தது. அத்தலத்தில், இப்புலவருடைய காலத்தில் ஆறுமுகத்தா பிள்ளையென்ற சைவ வேளாளப் பிரபு ஒருவர் இருந்தார். இவ

---

*நீங்களென்னும் பொருளில் சைவமடங்களில் வழங்கும் ஒரு சொல். அங்குற்றியென்பதன் மரூஉ. அவ்விடத்தில் உற்றவரென்பது இதன் பொருள்.

ரைப் பலகாலம் வைத்திருந்து அவர் ஆதரித்தவர்; இவ ருடன் எத்தனை பேர்கள் இருந்தாலும் அவர்கள் எல்லோ ருக்கும் அன்னவஸ்திரமளித்தும் வேறு உதவிகள் செய்தும் வந்தவர்; இவரிடமும் இவர் மாணுக்கர்களிடமும் விசேஷ மான அன்பு கொண்டவர்.

வரவர ஆறுமுகத்தா பிள்ளைக்குக் குடும்பத்தில் கடன் உபத்திரவம் ஏற்பட்டது. ஒரு சமயம் ஒரு கனவானிடம் குடும்பச் செலவுக்காக ஆறுமுகத்தா பிள்ளை ஒரு பெருந் தொகை கடன் வாங்கினுர். அதற்காக ஒரு பத்திரம் எழு திக்கொடுக்க வேண்டியிருந்தமையால், பத்திரம் எழுதிப் பூர்த்தியானவுடன் ஆறுமுகத்தா பிள்ளை இவரைப்பார்த்து, "இதில் நான் ஆறுமுகம் பிள்ளை யென்று கையெழுத் துப்போடவா? ஆறுமுகத்தா பிள்ளை யென்று போடவா?" என்று கேட்டனர். உடனே இவர், "ஆறுமுகம் பிள்ளை யென்ருல் அத்துக்கெட்டுப் போய்விடுமே; ஆறுமுகத்தா பிள்ளை யென்றே போடலாம்" என்று சமற்காரமாகச் சொன்ஞர். அத்து என்பதற்கு அதிகார எல்லை யென்பது ஒரு பொருள். பக்கத்திலிருந்து கேட்டவர்கள் யாவரும் மிக மகிழ்ந்தனர்.

### (4) "மூன்ருவது தெரு"

மேலே குறிப்பிட்ட பத்திரத்தில் ஒருவர் சாக்ஷிக் கையெழுத்துப் போடவந்தார். அவருடைய இருப்பிடம் கும்பகோணத்திலுள்ள சுண்ணும்புக்காரத் தெரு. அதை நீற்றுக்காரத் தெருவென்றும் சிலர் வழங்குவார்கள். சாக்ஷிக்காரர், "பத்திரத்தில் இந்த இரண்டு பெயர்களில், சுண்ணும்புக்காரத் தெருவென்று போடலாமா அல்லது நீற்றுக்காரத் தெருவென்று போடலாமா? சொல்லுங்கள்" என்று கேட்டபோது இவர், "இரண்டும் வேண்டாம்; மூன்ரு வது தெரு என்று போட்டுவிடுங்கள்" என்று மிக விரைவில் சொன்ஞர். மூன்ருவது என்னும் மொழி உலக வழக்கில் சுண்ணும்பைக் குறிக்கும். இந்தச் சொல்வன்மையை உட னிருந்த யாவரும் கேட்டு மிகவும் வியப்புற்ருர்கள்.

## 9. மின்சார உலகம்

மனிதன் தன் பகுத்தறிவைக்கொண்டு பல அரிய காரியங்களை நிறைவேற்றி வருகின்றான்: பஞ்ச பூதங்களும் அவன் வசப்பட்டு அவனுக்கு ஊழியஞ் செய்கின்றன. வானத்திற் பறப்பதும், நீண்ட கடற்பரப்பினைத் தாண்டுவதும், நீருக்குள் மூழ்கி நீண்டதூரம் செல்வதும், தூரத்தில் நடைபெறும் விஷயங்களை எளிதில் அறிவதும், தொலையில் உள்ள அரிய காட்சிகளைக் காண்பதும், இவைபோல்வன பலவும் அவனுக்குச் சுலபமாயின. காற்றுப் புகமுடியாத இடங்களிலும் அவன் புகுவதற்குக் கற்றுக்கொண்டுள்ளான். மிகப் பெரிய மலைகளும் தங்கள் ரகசியங்களை அவனுக்குக் காட்டிவிடுகின்றன; மிகச் சிறிய அணுவுக்குள்ளும் அவன் கண் ஊடுருவிச் செல்லுகின்றது. அவனால் கண்டுபிடிக்கப்பட்ட அரிய பொருள்கள் மிகப்பல. அவற்றுள் மின்சார சக்தி மிகவும் அருமையானது.

இப்போதுள்ள உலகத்தை மின்சார உலகம் என்றழைப்பது மிகையாகாது. நாகரிகம் பெற்ற நாடுகளில் இயற்கைக்கு அடுத்தபடியாக மின்சாரம் இன்று தாண்டவம் புரிகின்றது. தூரத்திலிருப்பவர்களோடு பேசுவதற்கு உபயோகப்படும் தந்தியும், சிரவணக்கருவி (Telephone) யும், அதனாலேயே நடைபெறுகின்றன. நம் வீடுகளில் அது விளக்காக எரிகிறது; விசிறிகளை அசைக்கிறது; அடுப்பெரிக்கிறது; துணிகளை வெளுக்கச் செய்கிறது; வண்டிகளை இழுக்கிறது; யந்திரங்களை இயக்குகிறது; ஒலியை உலகமெல்லாம் பரப்புகிறது; தூரதிருஷ்டியைத் தருகிறது; உடலிலுள்ள அவயவங்களைக் காட்டுகிறது; நோய்களுக்கு அரிய சிகிச்சை செய்கிறது; மூட்டைகளைத் தூக்குகிறது. மின்சாரமில்லையேல் உலகமில்லையென்று எண்ணுமாறு அவ்வளவு பிரபலமாக இன்று அது விளங்குகிறது. அதன் வரலாற்றைச் சிறிது ஆராய்வோம்.

மிகவும் புராதனமான காலமுதற்கொண்டே மக்கள் மின்னலை அறிந்திருப்பினும் அதன் தன்மைகளை உள்ள படியே அறிந்த பெருமை இக்காலத்து அறிஞர்களுக்கே உரியதாயிற்று. ஒரு பொருளை மற்றொரு பொருளின்மேல் உரைப்பதால் சூடேறுகிற தென்பதை நம் முன்னோர்கள் தெரிந்துகொண்டிருந்தார்கள்; ஆனால் ஆங்குண்டாகும் பிற அரிய சக்திகளைப்பற்றி அவர்கள் ஆராயவில்லை. மற்றும் வானத்தில் மிளிரும் மின்னலும், பொருள்களின் உராய் தலாலுண்டாகும் சக்தியும் ஒரு தன்மையன வென்பதை யும் அவர்கள் அறிந்திலர்.

ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னே இங்கிலாந்தில் அரசு புரிந்துவந்த எலிஸபெத் மகாராணியாரின் சேவையில் கில்பர்ட் (Gilbert) என்ற ஒரு வைத்தியர் இருந்தார். அம்பர் (amber) என்னும் ஒரு பொருளை மற்றொன்றின் மேல் தேய்க்க அது பிற மெல்லிய வஸ்துக்களைத் தன்பா லிழுக்கும் ஆற்றல் பெற்றதை அவர் கண்டார். இவ் வாற்றலையே இக்காலத்தினர் மின்சாரசக்தி என்கின்றனர். உலகத்திற்கு இது மிக்க வியப்பைத் தந்தது.

பிறகு ஒரு நூற்றாண்டு கழிந்தது. அங்கங்கே சிற்சிலர் மின்சார ஆராய்ச்சிகளைச் செய்யலாயினர். மின்சாரசக்தி யின் நுட்பங்களும், தன்மைகளும் ஒருவாறு அறியப்பட் டன. பொருள்களைத் தேய்ப்பதால் மின்சாரம் உண்டா கும் என்பதே பதினேழாம் நூற்றாண்டு அறிஞர்களுக்குத் தெரிந்த முறை. ஆனால் அடுத்த நூற்றாண்டில்தான் வான மின்னலுக்கும் மின்சாரத்துக்கும் உள்ள ஒற்றுமை தெரிய வந்தது. பெஞ்சமின் பிராங்க்லின் என்ற ஒரு சாதாரண அமெரிக்கர் இடிதாங்கியைக் கண்டுபிடித்தார். அவர் செய்த இம்மகோபகாரத்தால் மின்னலால் ஏற்படும் பெருந் துன்பம் உலகத்தில் ஒருவாறு நீங்கலாயிற்று.

பெஞ்சமின் ஓர் ஏழைக்குடியிற் பிறந்தவர். அவரை நன் றாகப் படிக்கவைக்க அவருடைய பெற்றோர்களுக்குச் சக்தி யில்லை. பெஞ்சமின் சில்லறை வேலைகளில் நுழைந்து, தம்

உண்மையாலும் விடாமுயற்சியாலும் பிலடெல்பியா என்னும் மாகாணத்தில் சிறப்புற்று விளங்கலானர். வானமின்னலும் மின்சாரமும் ஒன்ருகவே இருக்கவேண்டுமென்று எண்ணி அவர் தமது பட்டு உருமாலையால் ஒரு படத்தைச் செய்து, அதன்மீது ஒரு மெல்லிய கம்பியை நாட்டி, அப்படத்திற்கு ஒரு கயிற்றையும் அக்கயிற்றுக்கு ஒரு பட்டு நாடாவையும் கட்டி, அக்கயிற்றையும் நாடாவையும் ஓர் உலோகக் கம்பியினல் பிணைத்து அப்படத்தைப் பறக்க விட்டார். அப்பொழுது மெல்லிய மேகமொன்று வானத்தில்சென்றுகொண்டிருந்தது. தம்சோதனை என்னவாகுமோ என்று தம் மார்பு படபடக்கப் படத்தின் கயிற்றையே நோக்கிக்கொண்டிருந்த பெஞ்சமின் கயிறு விறைத்து நிற்பதைக் கண்டார். அக்கயிற்றிலிருந்த ஓர் உலோகக்கம்பியினிடம் அவர் தம்கையை நீட்டவே, கையில் தீப்பற்றியது போல ஓர் எரிச்சல் உண்டாயிற்று. இவ்விதம் அவர் மின்னலின் தன்மையை அறிந்து இடிதாங்கி உபயோகிக்கும் முறையை உலகத்தாருக்குக் காட்டினர். வீடுகளின் உயர்ந்த இடங்களில் கூர்மையான உலோகக் கோலொன்றை நாட்டி, அதிலிருந்து ஒரு கம்பியைக் கொண்டுவந்து தரையில் விட்டுவிட்டால், மின்னல் அதன் வழியாகப் பூமியுள் இறங்கிவிடும்; கட்டிடத்திற்குச் சேதமும் உண்டாகாது.

பெஞ்சமினுக்குப் பிறகு பல அறிவாளிகள் மின்சாரத்தைப்பற்றிய வெவ்வேறு ஆராய்ச்சிகளைச் செய்யலாயினர். வோல்டா என்பவர் மின்சாரம் உண்டாக்க ஒரு நூதன முறையைக் கண்டுபிடித்தார். இப்பொழுது மின்சார ஓட்டத்தின் அமுக்கும் சக்தி 'வோல்ட்' என்ற பெயரால் வழங்குவதை நாம் அறிவோம். அச்சொல்வோல்டா என்ற பெயரின் சிதைவேயாகும்.

பின்பு மின்சாரத்துக்குச் சுடுகிற சக்தி உண்டென்பது தெரியவந்தது. அதனல் அடுப்பு எரித்தல் போன்ற தொழில்கள் மின்சாரத்தின் உதவியால் நடைபெறலாயின. அப்பால் இச்சக்திக்கும் காந்தசக்திக்கும் உள்ள ஒற்றுமை

தெரியவந்தது. காந்தம் உபயோகப்படும் இடங்களிலெல் லாம் மின்சாரத்தை உபயோகிக்கலானூர்கள்.

மின்சார ஆராய்ச்சியாளர்களில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுபவர் மைகேல் பாரடே (Michael Faraday) என்பவராவர். 1931-ஆம் வருஷத்தில் அவருடைய நூற்றுண்டுவிழா உலகம் முழுமையும் கொண்டாடப்பட்டது. இன்று அவரை உலகம், 'மின்சாரத் தொழிலின் பிதா' என்று பாராட்டுகின்றது. பாரடே தமது இருபத்திரண்டாம் பிராயத்தில் (1813) அக்காலத்தில் விஞ்ஞான நிபுணராய் விளங்கிய ஸர் ஹம்ப்ரி டேவி (Sir Humphry Davy) என்பவரின் இரசாயனச் சாலையில் வாரமொன்றிற்கு இருபத்தைந்து ஷிலிங் சம்பளத்தில் ஒரு வேலைக்காரராய் அமர்ந்தார். அதற்கு முன்னரே மின்சாரப் பயிற்சியை அவர் சிறிது பெற்றிருந்தார். சீக்கிரத்தில் அவர் மின்சார நிபுணரென்னும் பெயரையடைந்து பல புதிய நுட்பங்களையும் கண்டறிந்தார்.

காந்தத்தின் வழியாக மின்சாரம் உற்பத்தி செய்யப்படலாமென்பது பாரடேயின் ஆராய்ச்சிகளுளொன்று. இதனுல் நூதன முறையில் மின்சாரம் உற்பத்தி செய்யப்படலாயிற்று. இன்றுள்ள வைத்யுத யந்திரம் (dynamo) பாரடேயின் ஆராய்ச்சியின் பயனேயாகும். இன்னும் பாரடேயின் முயற்சிகளாற் பல நுண்ணிய உண்மைகள் வெளியாயின. அவை விரிப்பிற் பெருகும்.

பாரடே வாழ்ந்த காலத்திலேயே மின்சார சம்பந்தமான ஆராய்ச்சிகள் வேறு பலராலும் செய்யப்பட்டன. அவற்றுள் தந்தி மிகவும் முக்கியமானது. ஒரு நீண்ட கம்பி வழியாக மின் ஓட்டமொன்றனைச் செலுத்தி அதனுல் அடுத்த நுனியிலுள்ள ஒரு காந்த ஊசியை அசைக்கக் கூடுமாயின் அவ்வசைவுகளினுல் ஒருவிதமான குறிப்புப் பேச்சை நடத்திக்கொள்ளலாம் என்று கருதிச் சிலர் ஆராய்ச்சிகளைச் செய்யலாயினர். கி. பி. 1836-இல் அதாவது இற்றைக்கு நூறுண்டுகட்கு முன்னே கூக் (William

Fothergill Cooke), வீட்ஸ்டன் (Charles Wheatstone) என்ற இரண்டு நிபுணர்களும் மேற்கூறியவாறு முயன்று முதன்முதலாக இங்கிலாந்தில் தந்தி வழியாய்ச் செய்திகள் அனுப்பும் முறையைக் காட்டலாயினர்.

அன்றுமுதல் தந்தியில் பல சீர்திருத்தங்கள் செய்யப் பட்டு இன்று உலகத்திலுள்ள பல்வேறு சிறிய ஊர்களும் தந்தியாற் பிணைக்கப்பட்டுள்ளன. இக்காலத்தில் தந்தி வியப்பான பல முன்னேற்றங்களை அடைந்திருக்கிறது. செய்திகள் யந்திரங்களினாலேயே அச்சடிக்கப்படுகின்றன.

தந்திப் பரப்பில் மிகவும் விந்தையானது கடல்களின் வழியாகச் செல்லும் பெருங் கம்பிகளே. மக்களாற் செய் யப்பட்ட அரிய முயற்சிகளுள் மிகவும் அரியதொன்று இரண்டாயிரம் மைல்கள் அகலமுள்ள அட்லாண்டிக் பெருங் கடலில் இக்கம்பிகளை யிட்டதே. இம்முயற்சியில் ஈடுபட்ட வர்களுட் சிறந்தவர் கேல்வின் பிரபு (Lord Kelvin) ஆவர். அவர் பட்ட பாடுகள் அளவற்றன. இன்று ஏறக்குறைய மூன்று லக்ஷம் மைல்கள் நீளமுள்ள கம்பிகள் கடல்களி னுள்ளே செல்கின்றன. தரையின்மேற் செல்லும் கம்பி களின் நீளத்தையும் சேர்த்தால் அவற்றின் நீளம் அறுபத் தைந்து லக்ஷம் மைல்களுக்கு மேலாகும்.

தந்தி இவ்வளவு மேன்மையுடன் விளங்கியபோதிலும் அதன் மூலமாகப் பேச்சை நேராக அனுப்புதல் கூடாத காரியம். வெகுதூரத்திலுள்ள ஒரு நண்பரிடம் கடிதமூல மாய்ச் செய்திகள் அனுப்புவதினும் நேரில் அவருடன் பேசக்கூடுமானால் அஃது எவ்வளவு நன்றாக இருக்கும்? ஆகவே தந்தியைக் கண்ட நிபுணர்களின் அறிவு பேச்சுத் தந்தியைக் கண்டுபிடிக்கும் அவாவை எழுப்பியது. நாம் பேசும்போது நம்மிடமிருந்து வெளியாகும் சத்தங்கள் ஆகாயத்திற் சில சலனங்களை உண்டாக்குகின்றன. அச் சலனங்களை மின்சார உதவியால் கம்பியிற் செலுத்தி, மற் றொரு புறத்தில் அவற்றை ஒலிக்குமாறு செய்வதால் நீண்ட தூரத்திற்கும் பேச்சுக்களை அனுப்பிவிடலாமென்று அலெக்

ஸாண்டர் கிராஹாம் பெல் (Alexander Graham Bell) என்ற அமெரிக்கர் பலகாலம் முயன்று கடைசியாக 1876-ஆம் ஆண்டில் கண்டுபிடித்தார். அவர் காலத்திற்குப் பிறகு பேச்சுத் தந்தியில் பல சீர்திருத்தங்கள் செய்யப் பெற்று உலகமுழுதும் இன்று சுலபமாகவும் பிறருதவி யின்றியும் பேச்சுக்கள் நடைபெறுகின்றன.

இவற்றினும் அதிசயமான மின்சார ஆராய்ச்சிகள் கம்பியில்லாத்தந்தி வழியாகச் செய்தி யனுப்புதலும் (Wireless), ஒலிபரப்புதலுமே (Broadcasting) யாகும். 1888-இல் ஹார்ட்ஸ் (Hartz) என்ற நிபுணர் தம் அறை யில் ஒரு மின்சாரக் கருவியை உபயோகித்து வந்தனர். அவ்வறையின் ஒருபுறத்தில் ஒரு மின்பொறி யெழ, அவ் வறையின் மற்றொரு புறத்திலுள்ள வேறிரண்டு கம்பிகளுக் கிடையில் அதேமாதிரி பொறியானது தற்செயலாகத் தோன்றியதை அவர் கண்டனர். இதன் காரணத்தை அவர் ஆராய்ந்து, கம்பிகளில்லாமலே மின் பொறிகளைத் தொலை யிடங்களுக்கும் அனுப்பலாமென்று கண்டறிந்தனர். இவ் வாராய்ச்சி பின்னும் பலரால் தொடரப்பெற்றது. கடைசி யாக 1896-இல் மார்கோனி (Senator Marconi) என்ற அறிஞர் கம்பியில்லாமல் நீண்ட தூரங்களுக்குச் செய்திகளை யனுப்பும் முறைகளைக் கண்டறிந்தார். இப்பொழுது கம்பி யில்லாத்தந்தி எங்கும் பரவியிருப்பது யாவருமறிந்ததே.

மார்கோனியின் வாழ்க்கைச் சரிதையும், அவர் ஆராய்ச்சி முறையும் படிப்பதற்கு விநோதமாயிருக்கும். குக்கிலியெல்மோ மார்கோனி (Guglielmo Marconi) என் பது அவர் முழுப்பெயர். அவர் 1874-ஆம் ஆண்டு இத்தாலி யாவில் போலோனா என்னும் நகரத்தில் சிறந்த குடும்ப மொன்றிற் பிறந்தவர். இத்தகைய ஆராய்ச்சியாளர் களுக்கு வழக்கமாயிருப்பதுபோலவே மார்கோனியும் தம் இளம்பிராயத்திலேயே பொருள்களின் உண்மைகளை ஆராய் வதில் சிறந்து விளங்கினார். வீட்டுக்கருகிலுள்ள பழங்களை யெல்லாம் பிழிந்து எழுதும் மையாக அவற்றின் ரசத்தை

உபயோகித்துக்கொண்டாரென்று ஒரு கதை இவரைப்பற்றிச் சொல்வதுண்டு.

கலாசாலையில் படிக்கும்போது மார்கோனியின் கவனம் மின்சாரத்தின் அபூர்வ சக்திகளைப்பற்றி ஆராய்வதில் ஊன்றியது. கம்பியில்லாமல் சிறிய தூரங்களுக்கு மின்சார அலைகளை அனுப்பும் வழிகளை அவர் தம் பள்ளிப்பருவத்திலேயே கண்டறிந்திருந்தனர். மார்கோனி தம் வீட்டுக் கொல்லைப்புறத்தில் துடைப்பக்குச்சிகளை நாட்டி அவற்றில் ஆராய்ச்சிகளைச் செய்து பார்த்தார்; பலன் கைகூடியதைக் கொண்டு அவர் தம் ஆராய்ச்சிகளை ஊக்கத்துடன் விருத்தி செய்து தாம் இருபத்திரண்டு பிராயம் அடையுமுன் பல மைல்களுக்கப்பாலும் கம்பியில்லாமல் தந்தியடிக்கும் முறையைக் கண்டுகொண்டார்.

பலர் அவரைப் பரிகசித்தனர்; அவர் கண்டது கனவு எனக்கூறி அவரை இகழ்ந்தனர். ஆனால் அவற்றை மார்கோனி ஒரு சிறிதும் பொருட்படுத்தாமல் 1897-ஆம் ஆண்டில் இங்கிலாந்து சென்று அங்கே தாம் அறிந்தவற்றைப் பிரசாரப்படுத்தலானார். ஆங்கில நாட்டுத் தபால் அதிகாரிகள் அவருக்கு மிக்க ஊக்கமளித்தனர். முதன் முதலாக 'வைட்' (Isle of White) என்னும் தீவிலிருந்து இந்நூதன முறையால் மூன்று மைல்களுக்கப்பால் செய்திகள் அனுப்பப்பட்டன.

சிறுகச் சிறுக மார்கோனியின் புகழ் பரவலாயிற்று. பல கப்பல்களின் சொந்தக்காரர்கள் மார்கோனியின் கருவிகளைத் தம் மரக்கலங்களில் அமைக்கலாயினர். 1900-ஆம் ஆண்டில் நடந்த ஒரு சம்பவம் மார்கோனியின் வேலைக்கு நல்ல உற்சாகத்தை அளித்தது. 'கிளமெண்டைன்' என்ற பெல்ஜியக் கப்பலொன்றில் அக்கருவி அமைக்கப்பட்டிருந்தது. அது கடலில் யாத்திரை செய்துகொண்டிருந்தபோது 'மெடோரா' என்ற சிறிய கப்பலொன்று ஒரு கற்பாறையில் சிக்கிக்கொண்டு முழுகிப்போகும் தருணத்திலிருந்தது. கிளமெண்டைன் தான் மெடோராவுக்கு நேரில் உதவிசெய்ய

முடியாமையைக் கண்டு, கம்பியில்லாத் தந்திக்கருவியால் அருகிலுள்ள ஓரூருக்குச் செய்தி யனுப்ப, அங்கிருந்து உடனே உதவிக் கப்பலொன்று வந்து மெட்டோராவைச் சமயத்தில் காத்தது. இச்செய்தி உலகமெல்லாம் பரவ, மார்கோனியின் செல்வாக்கு அதிகரித்தது.

என்றாலும் நீண்ட தூரங்களுக்குச் செய்தியனுப்பும் முறையை உலகத்துக்குக் காட்டினாலன்றி மார்கோனி தம் காரியம் நிறைவேறியதாக ஆகாதென்று எண்ணினார். இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலுள்ள இரண்டாயிரம் மைல் வழியே செய்திகளை அனுப்பிவிட்டால் அவரது மனோரதம் கைகூடிவிடும். அதற்காக அவர் இங்கிலாந்தில் கார்ன்வால் மாகாணத்தில் போல்தூ என்னுமிடத்தில் மிக உயரிய ஸ்தம்பங்களை நிறுத்தி, அங்கே வலிய மின்சார அலைகளை எழுப்ப ஏற்பாடுகளையும் செய்தார். தினந்தோறும் குறித்த ஒரு நேரத்தில்—பகல் மூன்று மணிக்கு—ஒருவித சங்கேதக் குறியை அந்த அலையில் அனுப்புமாறு சிலரை ஏவிவிட்டு, இரகசியமாகக் கப்பலேறி இரண்டு துணைவர்களுடன் அமெரிக்கா சென்றார். இது நடந்தது 1900-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம். அமெரிக்காவில் நியூபவுண்ட்லாந்து என்ற தீவில் ஓரிடத்தில் தம் கருவிகளை அமைத்து, வானத்தில் அலைகளை வசீகரிப்பதற்கு உயர்ந்த கம்பங்களை நடாமல் பெரிய படமொன்றை அமைத்து, அதனை அவர் பறக்கவிட்டார். அப்படம் ஒன்பதடி நீளமுள்ளது. அதைக் காற்று இழுத்துக்கொண்டுபோய்விட்டது; அவர் இரண்டாமுறை ஒரு சிறிய புகைக்கூண்டில் ஜலவாயுவை (hydrogen) நிரப்பி அதனைப் பறக்கவிட்டார். அதுவும் காற்றாடியின் கதியை அடைந்தது. மறுபடியும் டிசம்பர் மாதம் 12-ஆந் தேதி வியாழக்கிழமையன்று மற்றொரு காற்றாடியை அவர் விடுக்க அது நானூற்றடி உயரத்திற் பறந்தது. அதன் அடிப்புறக் கம்பியுடன் சிரவணக் கருவி (Telephone Receiver) இணைக்கப்பட்டிருந்தது. அதனைக் காதில் மாட்டிய வண்ணமே

மிகுந்த கவலையுடன் மார்கோனி இருந்தார். அப்பொழுது அவரடைந்த கவலையை யாரே அறிவர்!

திடீரென அவர் காதுகளில் ஏதோ சத்தம் கேட்டது; அவர் அருகிலிருந்த தம் நண்பரிடம் அக்கருவியைக் கொடுத்துக் கேட்பிக்கச் செய்ய அவர் உண்மையாக அச் சத்தம் கார்ன்வாலிலிருந்து அனுப்பப்பட்ட சங்கேதக் குறியே யென்று கூறினார்.

இச்செய்தியை அன்று அவர் வெளிப்படுத்தாமல் மறு நாளும் முன்போலவே முயன்றார். உண்மை திடப்பட்ட வுடன் அவர் தம் வெற்றியை உலகுக்கு அறிவித்தார். அன்று முதல் விஞ்ஞான அறிவில் புதிய சகாப்தமொன்று ஏற்பட்டது. மக்களின் வாழ்க்கையில் புதியதொரு மாறு தல் உண்டாயிற்று. இன்று கம்பியில்லாத்தந்தி நாகரிகம் பெற்ற நாடுகளிலெங்கும் பரவியிருக்கிறது. இவ்விதம் புக ழென்னும் அரண்மனையில் மார்கோனி தமக்கொரு மண்ட பத்தைக் கட்டிக்கொண்டார்.

இவ்வாறு பேச்சுத்தந்தியும் கம்பியில்லாத்தந்தியும் ஏற்பட்டவுடன், அவற்றிற்கு அடுத்தபடியாக ஒலிபரப்புங் கருவியைக் கண்டுபிடித்தல் சுலபமாயிற்று. கம்பியில்லாத் தந்தி வழியாய் வரும் மின்குறிகள் (electric symbols) மிகவும் மெல்லியனவாக இருந்தன. அவற்றை மிக அதிக மாகப் பெருக்குதற்குரிய கருவியொன்றனைப் பேராசிரியர் ப்ளெமிங் (Professor Fleming) என்பவர் 1904-இல் கண்டு பிடித்தனர். அன்று முதல் அவ்வாராய்ச்சி வளர்ச்சி யடையவே, இன்று நம் வீடுகளில் ஒரு சிறிய யந்திரத்தை முடுக்கிவிட்டு ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் நடை பெறும் பாட்டுக் கச்சேரிகளையும், பிரசங்கங்களையும் நேரிற் கேட்பதுபோல் கேட்டானந்திக்கின்றோம். என்னே மின்சா ரத்தின் பெருமை! கம்பியில்லாப் பேச்சுத்தந்தியும் (Radio Telephone), கம்பியில்லாத் தூரப்பார்வையும் (Television) சென்ற சில வருஷங்களுக்குள் உண்டான வேறு ஆச்சரியங்கள்.

இவற்றின் உதவியால் மக்கள் பெற்ற பெரும்பயனை என்னென்று சொல்வது! உலகம் முழுமையும் ஒரே அரங்கமாகி வருகின்றது. 'தூரம்' என்னும் சொல்லை இனி நம் பேச்சிலிருந்து எடுத்துவிடலாமென்றே தோற்றுகிறது. உலகத்தில் எங்கே எப்போது எது நடந்தாலும் நாம் அப்பொழுதே அதனைக் கண்டு கேட்டுக் களிக்கலாம். இன்னும் மின்சாரம் என்னென்ன செய்யக் காத்திருக்கின்றதோ அறியோம்!

நம் வீடுகளிலும், தெருக்களிலும் விளக்காய் எரிவதும், நமக்கு விசிறியாய் வீசுவதும் அதுவே. டிராம்வண்டிகளையும் இருப்புப்பாதை வண்டித்தொடர்களையும் அது மிக எளிதில் இழுக்கின்றது. தோட்டங்களுக்கு அது தண்ணீர் இறைக்கிறது. பழங்களைப் பழுக்கச் செய்கிறது; மாவரைக்கிறது; ஆலைகளில் நூல் நூற்றுத் துணி நெய்கிறது; இரும்பை உருக்குகிறது; வைத்தியர்கள் கையிலிருந்து அது செய்யுந்தொழில்கள் அளவற்றன. உடலுக்குள்ளிருக்கும் நுட்பமான உறுப்புக்களையும் ஊடுருவி அது படத்திற் காட்டுகின்றது.

பொருள்களின் உட்புறங்களிலுள்ளனவற்றைப் படத்திலே காட்டும் கருவிக்கு எக்ஸ்-ரே என்று பெயர். நவீன காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஆச்சரியங்களுள் மிகப் பெரியது இந்த எக்ஸ்-ரேயே. இதனை உலகத்துக்கு நன்கு அறிவித்தவர் ரோண்ட்ஜென் (Wilhelm Konrad Rontgen) என்ற பெயருள்ள ஜர்மானியர். அவர் இளமை முதற்கொண்டே பௌதிக சாஸ்திர அறிவில் ஆர்வமுள்ளவராக விளங்கினார். அவர் படிப்படியாகப் பல உத்தியோகங்களில் வளர்ச்சியுற்றுக் கடைசியாக ஒரு பெரிய கலாசாலையில் பௌதிக சாஸ்திரப் பேராசிரியராக அமர்ந்தார். 1895-ஆம் ஆண்டில் அவர் பல ஆராய்ச்சிகள் செய்ததன் பயனாக மின்சார ஒளியின் ஒருவகைக் கிரணங்களைச் சில கருவிகளின் மூலமாகச் செலுத்தினால், அக்கிரணங்கள் முடிவில் பாயும் பொருள்களின் உட்புறத்தில் உள்ளனவற்றைப் படம் பிடித்துக் காட்டக்கூடும் என்பதைக் கண்டறிந்தார். அவர் முத

வில் ஒரு காகிதத்திலும், பின்பு ஒரு புத்தகத்திலும், கடைசியாகத் தம் கைகளிலும் அக்கிரணங்களைச் செலுத்தி ஆராய, அவை ஒவ்வொன்றிலும் தம் ஆராய்ச்சி பயன்பெற்றதைக் கண்டு குதூகலம் அடைந்தார்.

இதனால் உலகம் அடைந்த பயனை அளவிடமுடியாது. ஒரு ஸ்திரீ ஒருமுறை தன் காலின்கட்டை விரல்கள் தனக்கு அளவில்லாத துன்பம் கொடுத்தனவாகையால், அவற்றை வெட்டிவிடவேண்டுமென்று ஒரு வைத்தியரிடம் வந்து கேட்டாள். அவர் எக்ஸ்-ரேயால் அவள் கால்களைச் சோதித்தனர்; நீண்டகாலமாக மிகக் குறுகிய ஜோடுகளை அவள் போட்டு வந்தமையால் அவள் விரலெலும்புகள் வளைந்திருந்தன. அந்த எலும்புகளின் உட்புறத்தைக் காட்டும் படத்தை அவள் பார்த்தவுடனே, ரண சிகிச்சை செய்வதை நிறுத்திக்கொண்டு, அகலமான பாதரக்ஷையை உபயோகிக்க ஆரம்பித்தனள்.

இம்மாதிரி எக்ஸ்-ரே செய்து வருகிற ஆச்சரியமான விஷயங்கள் மிகப்பல. இப்பொழுது எக்ஸ்-ரே கருவிகள் எல்லாப் பெரிய வைத்தியசாலைகளிலும் இருக்கின்றன. இக்கருவிகள் இல்லாமல் இக்காலத்துப் போர்கள் நிகழ்வதில்லை. இதுவும் மின்சாரத்தின் அற்புதங்களுள் ஒன்று.

உலகப் போர்களிலும் உலக சமாதானங்களிலும் மின்சாரம் செய்யும் வேலையை அளவிட முடியாது. மின்சாரம் ஒரு தெய்வமோ அன்றி வேறு ஏதோ நாமறியோம்; உலகத்தை அது தன்னடிக்கீழ்க் கொண்டது. அதனை மனிதன் தன்வசப்படுத்தினான். என்னே மனிதனின் பெருமை!

## 10. திருக்குறள்

திருவள்ளுவரையும் அவர் இயற்றிய திருக்குறளையும் பாராட்டாத புலவர்கள் இலர். தமிழ் மணம் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் திருக்குறளின் நறுமணம் வீசிக் கொண்டே யிருக்கும்; தமிழ் மணம் வீசாத இடத்திலும் திருக்குறளின் மணம் வீசுகின்றதென்று கூறுதலே பின்னும் பொருத்தமாகத் தோற்றுகிறது. ஏனெனின், தமிழ்

வழங்காத பிறநாடுகளிலுள்ள அறிஞர்கள் திருக்குறளின் மொழிபெயர்ப்புக்களைப் படித்து இன்புறுகிறார்கள். அங்கே தமிழ் மணம் ஏது? நாமெல்லாம் தமிழை யறிந்து அதன் மூலம் குறளை அறிகின்றோம். அவர்களெல்லாம் குறளின் பொருளை அறிந்து அதன்மூலம் தமிழைப்பற்றி அறிந்து கொள்ளுகிறார்கள். தமிழைக் காட்டிலும் குறளுக்கு வியாபகம் அதிகமாய் இருப்பதை இதனால் அறியலாம்.

இத்தகைய சிறந்த நூலை இயற்றிய திருவள்ளுவரது வரலாறு ஒரு வரையறையாக வழங்கப்படவில்லை. அவருடைய பிறப்பைப்பற்றியும், சாதியைப்பற்றியும், சமயத்தைப்பற்றியும், ஆச்சிரமத்தைப்பற்றியும் ஒன்றுக்கொன்று மாறான பல செய்திகள் தமிழ்நாட்டில் உலவுகின்றன. அவற்றை ஆராய்ந்து நிச்சயித்தற்குரிய கருவிகள் வேண்டிய அளவு கிடைக்கவில்லை.

பலவகையான கொள்கையினரும் திருவள்ளுவரைத் தங்கள் தங்களைச் சார்ந்தவராகக் கூறுவதும், திருக்குறளிலிருந்து தங்கள் தங்கள் கூற்றுக்கு ஆதாரங்களை எடுத்துக் காட்டுவதும் அப்புலவர்பிரான் எல்லோராலும் விரும்பப் படுபவரென்பதைத் தெரிவிக்கின்றன. அவருக்கு அமைந்த பல பெயர்களால் அவருடைய சிறந்த இயல்புகள் வெளியாகும்.

வேறு தமிழ் நூல்களிற் காணப்படாத சில சிறப்பியல்புகள் திருக்குறளுக்கு உண்டு. நூற்பயனாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றைத் தெளிவாகக் கூறும் நூல்களுள் குறளுக்கு ஈடானது வேறு இல்லை. சங்க மருவிய பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க்கணக்கு என்பவற்றுள் திருக்குறளைப்போல 1330 செய்யுட்களை யுடைய நூல் வேறொன்று இல்லை; குறட்பாவில் அமைந்ததும் இல்லை.

திருவள்ளுவரையும் திருக்குறளையும் பாராட்டும் திருவள்ளுவமாலை யென்ற ஒரு நூல் இருக்கின்றது. அதிலுள்ள செய்யுட்களைப் பல புலவர்கள் பாடியுள்ளார்கள். அவர்கள் யாவராயினும் அது பல நூற்றாண்டுகட்கு முன்பே உண்டா

யிற்றென்பதில் சந்தேகமில்லை. இங்ஙனம் ஒரு நூலைச் சிறப்பித்துப் பாடிய தனி நூலொன்று வேறு எந்த நூலுக்கும் முற்காலத்தே அமையவில்லை.

திருக்குறளுக்கு உரை எழுதியவர் பதின்மரென்று தெரிகின்றது. இங்ஙனம் பதின்மர் உரை யெழுதிய நூலும் வேறொன்று இல்லை. அவ்வுரைகளுள் சில இக்காலத்தே கிடைக்கவில்லை. கிடைப்பவற்றுள் பரிமேலழகர் உரையே மிகச் சிறந்தது.

இரங்கேச வெண்பா, சிவசிவ வெண்பா, தினகர வெண்பா, வடமலை வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா முதலியன திருக்குறளுக்கு உதாரணம் கூறும் நூல்கள். உரைவகைகளிலே உதாரணம் கூறுதலும் ஒன்று. ஆதலின் முற்கூறிய நூல்கள் திருக்குறளின் உரை நூல்களென்றே கூறுதல் தகும்.

தமிழ் நூலாசிரியர்கள் பலர் திருக்குறட் கருத்துக்களை மனத்திற்கொண்டு அவற்றிற்கு உரை கூறுவார்போலத் தம் நூல்களிற் பல செய்யுட்களை அமைத்திருக்கின்றார்கள்.

குறட் கருத்துக்களை எடுத்தாளாத தமிழ் நூலே இல்லையென்று சொல்லலாம். தமிழ்ப் புலவர்கள் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட நூல்களில் திருக்குறளே முதன்மை வாய்ந்ததென்பதில் ஐயமில்லை. குமரகுருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கமென்பது குறட் கருத்தைச் சுருக்கமாக வேறு உருவத்தில் அமைத்துச் சொல்லும் நீதிநூலாகும்.

திருக்குறள் தமிழுக்குச் சிறப்பாக அமைந்த நூலென்பது, "அகர முதல" என்று தமிழ் நெடுங்கணக்கின் முதலாகிய அகரத்தில் தொடங்கி, "பெறின்" என்று ஈறாகிய னகரத்தில் முடிந்தமையால் பெறப்படுகின்றது. தமிழ் நெடுங்கணக்கின் முதலெழுத்து 'அ' என்பதும், ஈற்றெழுத்து 'ன்' என்பதும் யாவருமறிந்தனவே.

தமிழ் என்னும் சொல்லில் ழகரமாகிய சிறப்பெழுத்து ஒன்று அமைந்திருப்பதுபோலக் குறள் என்பதில் றகரமாகிய சிறப்பெழுத்து அமைந்திருக்கிறது.

திருக்குறள் மிகவும் சிறந்த அமைப்பையுடையது; பல அரிய விஷயங்களை வரையறுத்துச் சுருக்கமாகக் கூறு கின்றது. ஒரு பொருளின் இலக்கணத்தைக் கூறுதலும், அதன் இன்றியமையாமையை விளக்குதலும், அதனை நாம் மேற்கொள்ளுதற்குரிய தந்திரத்தை உரைத்தலும், உல கத்திலுள்ள பொருள்களின் வாயிலாக உண்மையை நிரூபித்தலும், உவமைகளாலும் உதாரணங்களாலும் பொருளைப் புலப்படுத்துதலும் திருவள்ளுவர் வழக்கங்களிற் சில.

மக்கள் விலக்கவேண்டியவற்றைப் பெரும்பாலும் அவை யஞ்சாமை, அழுக்காறுமை என்பனபோல் எதிர்மறை முகத்தாற் கூறுதல் குறளாசிரியர் இயல்பு. ஒரு நீதியை உடம்பாட்டு முகத்தாலும் எதிர்மறை முகத்தாலும் அவர் புலப்படுத்துவர்.

குறளிலுள்ள பல பாக்களால் திருவள்ளுவர் கல்வியி னிடத்தே மிக்க ஆர்வ முடையாரென்பதும் புலவர்கள்பால் குறையாத அன்புடையவரென்பதும் பெறப்படும். கல்வி யைப்பற்றிக் கூறவந்தவர் தாம் உரைக்கப் புகுந்த செய்தி கள் பத்துக் குறளில் அடங்காமைபற்றிக் கல்வி, கல்லாமை, கேள்வி யென்னும் மூன்று அதிகாரங்களால் உணர்த்து கின்றார். அன்றியும் அறிவுடைமை, சொல்வன்மை, அவை யஞ்சாமை என்பனவும் கல்வியோடு தொடர்புடைய அதி காரங்களே யாகும். இவ்வளவு மிகுதியாக வேறு எதனை யும் அவர் வற்புறுத்தவில்லை. கல்லாதாரை விலங்குகளென் றும் குருடர்களென்றும் கூறும் வள்ளுவர் நூல்களினறிவும் மதிநுட்பமும் உடையவரை மிகவும் போற்றுகின்றார். பல நூல்களைப் படித்துப் படித்து அவ்வின்பத்திலே அவர் திளைத்திருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது. படிக்குந் தோறும் இன்பங் கண்டவராதலினாலேதான் அவர் பண் புடையாளர் தொடர்பினால் வரும் இனிமையை 'நவில் தொறும் நூல்நயம்போலும்' என்னும் உவமையால் விளக்கு கின்றார். அங்ஙனம் மேலும் மேலும் படிக்கப் படிக்கத்

தோன்றும் நயத்தில் உள்ளம் உருகி, "இதுகாறும் இதனை அறிந்திலேமே" என்று இரங்குகின்றார்.

பற்றற்று மெய்ப்பொருள் கண்டு பிறப்பறுக்கும் துறவற வியலிலும் அம் மெய்ப்பொருள் காண்டற்குக் கல்வி பெருந் துணையாகு மென்பதை வற்புறுத்துகின்றார். கல்வியினும் சிறந்ததொரு பொருள் உலகத்தில் இருப்பதாக அவர் எண்ணவில்லை; அதனாலேதான் அதனைச் சாந்துணையும் கற்க வேண்டுமென்று விதிக்கின்றார்.

> "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
> சாந்துணையுங் கல்லாத வாறு"

என்னும் குறளைக் காண்க. அங்ஙனம் கற்றவன் ஓரூருக்கு மட்டும் உரியோனல்லன்; ஒரு நாட்டுக்கு மட்டும் உரியோ னல்லன்; எல்லா ஊருக்கும் எல்லா நாட்டுக்கும் உரியவ னென்ற கருத்துக்கள் இக்குறளில் அமைந்துள்ளன. இக் குறளுக்குத் திருவள்ளுவரையே உதாரணமாகக் கூறிவிட லாம். அவருடைய புகழுடம்பு இப்பொழுது இவ்வுலகத் துக்கே பொதுச் செல்வமாக நிலவுகின்றதன்றோ?

திருவள்ளுவர் பல மொழிநூல்களையும் பல சமயநூல் களையும் ஆராய்ந்தவரென்பதை அவற்றிலுள்ள கருத்துக் கள் திருக்குறளில் அங்கங்கே அமைந்து விளங்குவதனால் அறியலாம்.

இங்ஙனம் நிரம்பிய நூல்வல்லவராகிய திருவள்ளுவர் பிற புலவர்களிடத்தே அன்புடையவராக இருந்தார். அவர் களோடு பழகுதலை இன்பமாகவும் அவர்களைப் பிரிதலைத் துன்பமாகவும் உணர்ந்தார்.

புலவர் மாட்டுப் பேரன்புடைய அப்பெரியார் அப்புல வர்பால் வறுமை குடிகொண்டிருத்தலை யறிந்து மிகவருந்தி இரங்கினார். வறுமையானது அறிவுடையார் அவ்வறிவினை யும் மறந்தொழுகச் செய்யும் கொடுமையையுடைய தென் பதைக் குறிப்பிடுகின்றார்; புலவர்கள் இங்ஙனம் இருக்கும் உலக இயல்பை நொந்து கூறுகின்றார். அத்தகைய புலவர்

களை இரந்துண்டு வாழவைத்த கொடுமையால் பிரமனுக்குச் சாபங் கொடுக்கின்றார். அவருடைய வெறுப்பு முழுவதும் சேர்ந்து, 'இன்மையென வொரு பாவி' என்றுவையும் பாட்டில் வெளிப்படுகின்றது. வறுமையைப் பாவியென்று வைததுபோலவே அழுக்காற்றையும் பாவியென இவர் வெறுக்கின்றார்.

உலகத்தினர் ஒருவரை இழித்துரைக்கும்போது, 'துணிக்கும் பிண்டத்துக்கும் இல்லாமல் நாசமாகப் போகவேண்டும்' என்று வைகின்றார்கள். இதே வெறுப்போடு அழுக்காறுடையாரை,

> "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉம்
> உண்பதூஉ மின்றிக் கெடும்"

என்று அழகிய மொழிகளால் இவர் திட்டுகின்றார்.

வேத வழக்கோடு இயைந்த பல செய்திகள் திருக்குறளில் உள்ளன. நித்திய நைமித்திக பூசைகள், நான்கு ஆச்சிரமங்கள், ஐவகைக் கடன்கள், அந்தணர் முதலியோர் ஒழுக்கம், வேதம் முதலியவற்றைப்பற்றிய செய்திகள் பலவகையில் இணைக்கப்பட்டிருக்கின்றன.

திருமால் உலகளந்த செய்தியும் தாமரைக்கண்ணனுதலும் உணர்த்தப்படுகின்றன. திருமகளும் அவள் தவ்வையும் இணைத்துச் சிலவிடங்களில் கூறப்படுகின்றனர். 'தாமரையாள்' என்று திருமகளை ஓரிடத்திற் குறிக்கின்றார்; பிரமதேவனை, 'உலகியற்றியான்' என்கின்றார்; இந்திரனைப்பற்றி இரண்டிடங்களிற் கூறுகின்றார்.

இம்மை, மறுமை, வீடு என்னும் இம்மூன்றும் திருவள்ளுவர்க்கு உடம்பாடு. அவர் சுவர்க்கத்தைப் புத்தேளுலகமென்றும், மேலுலகமென்றும், வானமென்றும் கூறுவர்; தேவரை அவியுணவின் ஆன்றோரென்பர். இல்லறஞ்செய்தலின் பயன் சுவர்க்கத்தோடு நிற்குமென்பதும் துறவறமே வீட்டிற்குக் காரணமென்பதும் அவருடைய கொள்கை. இல்லறம் புரிந்தபின் நெறியாகத் துறவறம் பூணுதலை ஒரு குறளால் அறிவிக்கின்றார்.

இல்வாழ்க்கையைப்பற்றி அவர் கூறும் கருத்துக்கள் மிக அரியன. அவற்றின் திரண்டபொருள், இல்வாழ்பவன் எல்லாவற்றையும் பிறர்க்கு உபகாரம் செய்வதற்கே பயன் படுத்தவேண்டுமென்பதும், அவன் தன் உடலையும் பிற வற்றையும் பாதுகாத்தலும் அந்நோக்கத்திற்குத் துணையாக இருத்தல் வேண்டுமென்பதுமேயாம்.

பொருள் ஈட்டுவதற்குரிய தொழில்களுள் உழவும் வாணிகமும் அவரால் தலைமையாக எண்ணப்பட்டன. இவற்றிலும் உழவு மிகச் சிறந்தது. அதனைப்பற்றி அவர் கூறியது ஒரே அதிகாரமேனும் அதிலுள்ள கருத்துக்கள் ஒரு பெரிய நூற்கருத்துக்களைப்போன்ற சிறப்புடையன.

விலங்குகளையும் பறவைகளையும் மரஞ்செடி கொடிகளை யும் கைத்தொழிற் பொருள்களையும் பழக்கமாகிய பொருள் களையும் சில வழக்கங்களையும்பற்றி அவர் கூறும் செய்தி கள் ஆராய்ந்து இன்புறற்கு உரியன.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்னும் குறள் கற்பின் உயர்வைத் தெரிவிக்கின்றது. தெய் வத்தைத் தொழாமையும் கணவனைத் தொழுதலுமாகிய இக் கற்புநெறியை மணிமேகலை சிலப்பதிகாரம் முதலிய நூல் கள் நன்கு விளக்குகின்றன.

இசைச் செய்திகளாகக் குறளில் உள்ளவை சில; "குழ லினிது யாழினி தென்ப" என்பதில் குழலும் யாழும் சொல் லப்படுகின்றன. குழலின் பின்னர் யாழை வைத்த முறை அவற்றின் தோற்ற முறையையும், குழலின்பின் யாழ் வாசிக்கப்படும் மரபையும் பின்பற்றியது.

திருவள்ளுவர் பெயரால் சில வைத்திய நூல்கள் தமிழ் நாட்டில் உலவுகின்றன. அவர் அந்நூல்களை இயற்றவில்லை யென்று ஆராய்ச்சியால் முடிவுகூறலாம். ஆயினும், அவர் மருத்துவத்தைப்பற்றிக் குறளிற்கூறும் உண்மைகள் மக் கள் வாழ்வுக்கு இன்றியமையாதன. மருந்தென்ற ஓதி

காரம் குறளில் இருக்கிறது. பசித்தபின் அளவறிந்து உண்பதால் நெடுங்காலம் வாழலாமென்பதை அவ்வதிகாரத்தில் ஆசிரியர் உணர்த்துகின்றார். ஒருவன் தன் உடம்பையும் பிறவுயிரின் உடம்பையும் ஒருங்கே பாதுகாத்துவரின் நெடுங்காலம் வாழலாமென்பது அவர் கருத்தாகத் தோற்றுகிறது.

தனக்கும் பிறர்க்கும் ஒருங்கே பயன்பட உணவுண்டு வாழ்ந்து அறம் நடத்துதலைப்பற்றி வரையறுத்த அப்புலவர் பெருமானது நூல் தமக்கும் பிறர்க்கும் பயன்படும்படி அவர் கற்றறிந்து ஒழுகினாரென்பதை நன்றாகத் தெரிவிக்கின்றது.

## 11. வீரமாமுனிவர்

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு முதல் ஐரோப்பியர் இந்தியாவிற்கு அதிகமாக வரத் தலைப்பட்டனர். அவர்களின் பெருநோக்கம் வர்த்தகமும் நாடுபிடித்தலுமேயென்றாலும் சிலர் தம் நாட்டுக் கல்வியையும், மதக்கொள்கைகளையும் இங்கு வந்து பரவச்செய்யும் எண்ணமுடையவர்களாயிருந்தனர். இரண்டாவது துறையில் ஈடுபட்டவர்கள் பெரும்பாலோர் கிறிஸ்தவப் பாதிரிமார்களே. அவர்கள் ஒரு தேயத்தினரல்லர்; ஒரு மொழியினருமல்லர். ஐரோப்பா கண்டத்தின் பற்பல நாடுகளிலுமுள்ள கிறிஸ்தவக் குருக்கள்மார் இந்தியாவில் பற்பலவிடங்களுக்கு வந்து தம் இன்னல்களையெல்லாம் பொருட்படுத்தாமல் தம் மத உண்மைகளை இந்தியர்களுக்கு எடுத்துரைப்பதிலேயே காலத்தையும், செல்வத்தையும், அறிவையும் போக்கிவந்தனர்.

அவர்களிற் பலர் தமிழ்நாட்டிற்கும் வந்தனர்; சிலர் தமிழர்களைப்போலவே உடுத்தும் உண்டும் தமிழ் மொழியைக் கற்றுப் பேசியும் தமிழர்களோடு நல்லுறவுகொண்டு வாழ்ந்து வந்தனர். அவர்களால் தமிழ் மொழியும் வளனுறலாயிற்று. தமிழில் தம் மதக் கொள்கைகளை மொழி

பெயர்த்து, தமிழிலேயே நூல்களை இயற்றி, அச்சிடுவித்துத் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்த சில பெரியோர்களின் நன்றியைத் தமிழர் ஒருபோதும் மறவார். அத்தகைய பெரியோர்களுள் ஒருவரான வீரமாமுனிவர் என்பவரின் வரலாற்றையும், அவர் தமிழுக்கு ஆற்றிய தொண்டையும் பற்றி இங்கே சில விஷயங்கள் கூறுவோம்.

அம்முனிவரின் இயற்பெயர் கான்ஸ்டன்டைன் ஜோஸப் பெஸ்கி (Constantine Joseph Beschi) என்பது. அவர் இத்தாலி நாட்டில் கி. பி. 1680-ஆம் ஆண்டு அவதரித்தார்; இளமையிலேயே தெய்வ பக்தியிற் சிறந்து விளங்கினர். உரோமாபுரி என்ற அந்நாட்டுத் தலைநகரில் உரோமானியர் கலாசாலையில் அவர் கல்வி கற்றுத் தேர்ச்சிபெற்றனர். உரோமாபுரி கிறிஸ்தவ உலகத்திற்கு மிகவும் முக்கியமான நகரம். அங்கே 'போப்' என்னும் கிறிஸ்தவ மத உலககுரு இன்றும் வாழ்ந்து வருகின்றனர். அக்காலத்தில் தலைமை வகித்த குரு பெஸ்கியின் நற்குணங்களையும், தெய்வ பக்தியையும், கல்வித்தேர்ச்சியையும் கண்டு அவர்பால் அன்பு கொண்டு தம் பார்வையிலேயே அவரை வைத்துக்கொண்டனர். பெஸ்கி சீக்கிரத்தில் துறவடைந்து இயேசுவின் சபை என்ற ஒரு மதக்கூட்டத்திற் சேர்ந்தனர். போப் அவரையும் ஆர்நால்டு என்ற மற்றொரு பாதிரியாரையும் தேர்ந்தெடுத்து மதபோதனைக்காக இந்தியாவிற்கு அனுப்பினர்.

இருவரும் கி. பி. 1700-ஆம் ஆண்டில் மேற்குக் கடற்கரையிலுள்ள கோவா என்னும் பட்டினத்தில் வந்திறங்கினார்கள். ஆர்நால்டு பாதிரியார் மலையாளநாட்டிற் புகுந்து மலையாளத்தையும், ஆரியத்தையும் நன்கு கற்றுப் பல நூல்களை இயற்றி மத உபதேசங்களையும் செய்துகொண்டு வரலாயினர்.

பெஸ்கியாரோ தமிழ்நாட்டுக்குள் நுழைந்தார். அவர் நேராக மதுரைக்கு வந்து அதனையே தமது இருப்பிடமாகக்கொண்டனர். நாட்டுமொழியை நன்றாகக் கற்றாலன்றி, மக்களுடன் ஒன்றுபட்டு வாழ இயலாதென்பதை

அவர் உணர்ந்து தமிழ், தெலுங்கு, ஆரியம் முதலிய மொழிகளைக் கற்பதிலேயே தம் காலத்தையெல்லாம் கழிக்கலாயினர். அவருடைய தமிழாசிரியர்களுட் சிறந்தவர் சுப்பிரதீபக் கவிராயர் என்பவர். அவர்பால் பாதிரியார் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணங்களையும், தமிழ்க் காவியங்களையும், பிறநூல்களையும் கற்று அம்மொழியிலே கவிகள் இயற்றவும் வல்லவரானார்.

பெஸ்கியாரைப்போலவே அவருக்குமுன் தமிழ்நாட்டில் கிறிஸ்தவ மதபோதனை செய்துவந்த உரோமானியர் ஒருவர் உண்டு. அவர் தத்துவ போதகர் என்று தமிழரால் கொண்டாடப்பெற்ற ராபர்ட் தி நொபிலி (Robert de Nobili) என்றவர். அவரும் தமிழிலும் ஆரியத்திலும் நல்ல புலமை பெற்றிருந்தார். அவர் முதலில் தமிழ்நாட்டுப் பிராமணர்களைப்போலவே பூணூல் தரித்தும், பின்பு சந்நியாசியைப் போல் உடுத்தும், புலாலுணவை நீத்தும், தமிழிலேயே பேசியும் வந்தார். தமிழ்நாட்டினர் அவரை ஓர் அந்தணரென்றே மதித்துவந்தனர். அவரியற்றிய தமிழ்நூல்கள் பல. அவர் தம் வாழ்க்கையாலும் நல்லுரைகளாலும் கிறிஸ்தவ மதக் கொள்கைகளை எளிதில் பரப்பி வந்தனர். பெஸ்கியாரும் அவ்வழியைப் பின்பற்றலே தமக்கும் தகுதியென்று கருதி ஐரோப்பிய உடைகளைக் களைந்து, தமிழர் உடைகளையும் உணவையும் மேற்கொள்வாராயினர்.

"அவர் தினம் ஒரு முறையே உண்பார். தமிழர் இருவர் அவருக்குச் சமையற்காரர்களாயிருந்தனர். அவர் புலாலைத் தொடுவதே இல்லை; அரிசிச் சோறே அவருடைய உணவாயிற்று. வீட்டிலிருக்கும்போது அவர் தலையில் ஒரு பட்டுத் தொப்பியை அணிந்திருப்பர்; அரையில் குறுகிய சிவப்புக் கம்பியுள்ள ஒரு துணியை உடுத்து, அதன்மேல் காவி நிறமுள்ள ஒரு துண்டைக் கச்சையாய்க் கட்டியிருப்பார். அவர் கால்களில் பாதக்குறடுகள் காணப்படும். ஹிந்து சந்நியாசிகளைப்போலவே இருக்கவேண்டுமென்பது அவரது கருத்து. அவர் வெளியிற் புறப்படும்போது தலை

யில் ஒரு வெள்ளைத் தலைப்பாகையையும் அதன்மேல் ஒரு காவி நிறமான நீண்ட அங்கியையும் அரையில் அதனைச் சுற்றி அதே நிறமுள்ள ஒரு கச்சையையும் உடுத்திக்கொள்வார். அவர் கையில் ஒரு காவிக் கைக்குட்டை துலங்கும். காதுகளில் முத்தும் சிவப்புக்கல்லும் கட்டிய கடுக்கன்கள் மிளிரும். அவர் ஆட்காட்டி விரலில் ஒரு தங்க மோதிரம் தயங்கும். நீண்டதொரு தடியைக் கையிற் பிடித்துக் கொண்டு மிதியடிகளுடன் அவர் வெளியே புறப்படுவார்.''

அவர் சாதாரணமாக ஒரு பல்லக்கிலே ஏறிச்செல்வது வழக்கம்; அதில் அவர் இருப்பதற்கு ஒரு புலித்தோல் போடப்பெற்றிருக்கும். அவர் உலாப்போகும்போது இருவர் பல்லக்கின் இருபுறங்களிலும் விசிறிக்கொண்டே செல்வர்; மேலே தங்கக் குமிழையுடைய ஒரு காவிப் பட்டுக் குடையை ஒருவர் ஏந்திச் செல்வர்; இருவர் மயிற் பீலிக் கற்றைகளைச் சுமந்துகொண்டு முன்னே போவர். அவர் பல்லக்கைவிட்டுக் கீழே இறங்கினவுடன் அவர் இருப்பதற்காகப் புலித்தோல் தரையில் விரிக்கப்படும்.

தமிழ்க் கலைகளையெல்லாம் அவர் நன்கு கற்றிருந்தனர். அவர் தம் பிரசங்கங்களினிடையே தமிழ் நூல்களினின்று மேற்கோள்களை யெடுத்துப் பொழிவர். அவர் போகுமிடங்களிலெல்லாம் மக்கள் அவர் நல்லுரைகளைக் கேட்கக் கூட்டங் கூட்டமாய்க் கூடுவார்கள். சில புலவர்கள் அவருடன் வாதுக்கு வருவதும் உண்டு. அச்சமயங்களில் அவர் தம் திறமைகளெல்லாவற்றையும் காட்டி விரோதிகளை மடக்க முயல்வர். எங்கே சென்றாலும் அவர் ஏழை மக்களுக்கு நிரம்ப உதவுவார். இளைஞர்களுக்கு விஞ்ஞான சாஸ்திர அறிவையும் பல மொழிப் பயிற்சியையும் அவர் செய்து கொண்டே செல்வது வழக்கம்.

சில இடங்களில் அவர் கிறிஸ்தவர்களுக்காக மாதா கோயில்களை அமைத்தார். சென்னைக்கடுத்த மயிலாப்பூரில் அவர் ஒருமுறை விஜயஞ்செய்து மேரி மாதாவின் சிலையொன்றினை அங்கே பிரதிஷ்டை செய்தார். அத்தேவியின்

கைகளில் இயேசுநாதர் ஒரு குழந்தையாக விளங்குவதை இன்றும் காணலாம். அச்சமயம் பெஸ்கி பாதிரியார் பதினொரு நாட்கள் அரிய விரதந்தாங்கி, பன்னிரண்டாம் நாள் அவ்வுருவத்தைப் பலர் முன்னிலையில் நிறுவினர் என்று சொல்லுவர். விருத்தாசலத்திற்கடுத்த சோனங்குப்பத்திலும் அரியிலூர்க் கடுத்த திருக்காவலூரிலும் அவர் மாதா கோயில்களைக் கட்டுவித்தார்.

திருக்காவலூர் மாதாகோயிற் சுவரில் இப்பொழுது காணப்படும் சாசனம் வருமாறு:—

"ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் ௲௬௱௫௰௭* ராக்ஷத ௵ ஆடி ௴ ௨௰௬ ௳ ஸ்ரீமது ராசமானிய-ராச. ஸ்ரீ—அரியலூரரசினிலையிட்ட ரங்கப்ப மழவராயர் ஏலாக்குறிச்சித் திருக்காவலூரில் வீராண தேவன் வதிக்கும் கிழக்கு, கோவிலூர் வழிக்கு மேற்கு, குட்டைக்குத் தெற்கு, பெரிய ஏரிக்கு வடக்குட்பட்ட யாவுஞ் சர்வேசுவரன் கோயிலுக்குச் சிலாசாதனமாகத் தந்தோம். சந்திராதித்தரும் கல்லுங் காவிரியும் புல்லும் பூமியுமுள்ளளவுஞ் சுகமேயிருக்கவும். இந்தத் தருமத்துக்கு யாதா மொருத்தன் விகாதஞ் செய்தால் கங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகக்கடவன்."

பாதிரியாரைப்பற்றி வழங்கும் ஒரு வரலாறு அவர்பாலிருந்த நுண்ணிய அறிவையும், மொழிகளைக் கற்பதில் அவரிடம் இயற்கையாயமைந்த ஆற்றலையும் புலப்படுத்துகின்றது. அக்காலத்தில் திருச்சிராப்பள்ளியை ஆண்டுவந்த நவாபு சந்தாசாஹிப் என்பவர். அவரைக்கண்டு நேரிற்பேச அவாவுற்ற பெஸ்கியார் ஹிந்துஸ்தானி, பாரசீகம் என்ற இருமொழிகளையும் மூன்று மாதங்களிற் கற்றுக் கொண்டனர். அவரது கல்வித்திறனையும் தெய்வபக்தியையும் கண்ட நவாபு பெரிதும் மகிழ்ந்து அவருக்கு இஸ்மாத்தி சந்நியாசி என்ற பட்டத்தை யளித்துத் தம் பாட்டனரான சாதுல்லா கான் உபயோகித்துவந்த தந்தப் பல்லக்கையும்

---

*கி. பி. 1734 க்குச் சரியானது.

கொடுத்தனர் என்பர். மற்றும் நவாபு அவரையே தமக்குத் திவானக இருக்கும்படி வேண்ட அவர் அதற்கிசைந்தனர் என்றும், அவருக்கு ஸர்வமானியமாக ஆண்டொன்றுக்குப் பன்னீராயிரம் ரூபாய் வருமானமுள்ள நான்கு ஊர்களைக் கொடுத்தனரென்றும் ஒரு வரலாறு வழங்குகின்றது.

இவ்விதம் அவர் நவாபுடன் நட்புரிமை பூண்டிருந்த காலத்திலும் ஹிந்து சந்நியாசியின் உடையையும், உணவையுமே உபயோகித்தனர். அவர் வெளியே செல்லும்போது முகம்மதிய அரசியலுக்குரிய இசைக் கருவிகளுடனும், பட்டாளங்கள் தலாயத்துக்கள் முதலிய பரிவாரங்களுடனும் செல்லுவார்.

அக்காலத்தும் அவர் தம் தமிழ்க் கல்வியை மறக்கவில்லை; திருக்குறள், நாலடியார், சிந்தாமணி, இராமாயணம் முதலிய தமிழ் நூல்களைப் படிப்பதும் புதிய நூல்களை இயற்றுவதும் மதபோதனை செய்வதும் அவருக்கு முக்கிய வேலைகளாக இருந்தன. தைரியநாதஸ்வாமி என்று தமிழர் அப்போது அவரை அழைக்கலாயினர். இப்பெயரே வீரமா முனிவர் என்று பின்பு வழங்கலாயிற்று.

1740-ஆம் ஆண்டில் திருச்சிராப்பள்ளியை மகாராஷ்டிரர்கள் முற்றுகையிட்டுச் சந்தாசாகிப்பைச் சிறைப்படுத்தினர். அதன் பிறகு முனிவர் அங்கிருக்க மனங்கொள்ளாமல் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள மணப்பாடு என்ற இடத்திற்குச் சென்று தம் மதசேவையையே மேற்கொள்ளலாயினர். 1747-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அவர் அம்பலக்காடு என்ற ஊரிலிருக்கும்போது அவரது பூத உடல் நீங்கிற்று.

தமக்கு உரிய ஐரோப்பிய வாழ்வையும் சுகங்களையும் விடுத்து வெயிலிலும் மழையிலும் அலைந்து தம் மதத்திற்கே உயிர்கொடுத்த பெரியாரைத் தமிழ் நாடு என்றும் நினைத்திருக்கச் செய்பவை அவர் இயற்றிய தமிழ் நூல்களும், பிற தமிழ்த் தொண்டுகளுமேயாம். அவருடைய நூல்கள்

மூன்று வகையின. அவற்றுட் சில தமிழ்க் கிறிஸ்தவர் களுக்கே உரியவை; சில ஐரோப்பியப் பாதிரிமார்களுக்காக எழுதப்பெற்றவை; மூன்ரும் பிரிவின எல்லோருக்கும் பொதுவானவை.

அவற்றுள் தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம், அடைக்கலமாலை, கலிவெண்பா, அன்னை அழுங்கல் அந்தாதி, கித்தேரி அம்மாள் அம்மானை முதலியன கிறிஸ்தவத் தமிழர் களுக்கென எழுதப்பெற்ற நூல்கள். வேதியர் ஒழுக்கம், வேதவிளக்கம், பேதகமறுத்தல், ஞானம் உணர்த்தல், திருச் சபைக் கணிதம் முதலியன அவர் இயற்றிய கிறிஸ்தவ வசன நூல்கள்.

தேம்பாவணி என்பது 3615 செய்யுட்கள் அடங்கிய முப்பது காண்டங்களையுடைய ஒரு நூல். இஃது அம்முனிவ ரால் 1726-ஆம் ஆண்டில் எழுதப்பெற்றது. இதன் செய்யுட் களில் ஒவ்வொன்றுக்கும் முனிவரே 1729-இல் பொழிப்புரை யும் எழுதினர். இயேசுகிறிஸ்துவின் அவதாரம், உபதேசம் முதலியவற்றையும், விவிலிய நூலினுடைய (Bible) கருத் துக்களையும், மதக்கொள்கைகளையும் தெரிவிக்க எழுதப் பெற்ற இந்நூல் தமிழிலக்கணக் கருத்துக்களையும், தமிழ் நூலமைப்பு முறைகளையும் முற்றிலும் தழுவி யாப் புறுப்புக்களான தொடை, சந்தம் முதலியவை நன்கு அமையப்பெற்றுத் தமிழுக்கோர் அணிகலமாய் விளங்கு கின்றது.

ஐரோப்பியப் பாதிரிமார்களின் உபயோகத்திற்காக வீரமாமுனிவர் எழுதிய நூல்களுள் கொடுந் தமிழ் இலக் கணம், தொன்னூல் விளக்கம் என்பன லத்தீன் மொழியில் எழுதப்பெற்றன. பின்பு அவை தமிழிலும் மொழிபெயர்க் கப்பட்டன. திருக்குறளின் முதல் இருபிரிவுகளான அறத் துப்பால், பொருட்பால் என்பவற்றையும் முனிவர் லத்தீனில் மொழிபெயர்த்தனர்.

முனிவரின் தமிழ்த் தொண்டுகளுள் மிகச் சிறந்தவை அவரியற்றிய வசன நூல்களும், அகராதிகளுமே. அவ

ருடைய வசன நூல்களுள் பரமார்த்த குரு கதை யென்பது பாமரர்களாலும் கொண்டாடப்படுகின்றது.

முனிவர் எழுதிய அகராதிகளுள் தமிழர்க்குப் பெரிதும் பயன்படுவது அவரது சதுரகராதியே. அது பெயர், பொருள், தொகை, தொடை என்ற நான்கு பிரிவுகளையுடையது; தமிழ் நெடுங்கணக்கு முறைப்படி வரிசைப்படுத்தப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டில் அதற்குமுன் பல நிகண்டுகள் இருந்திருப்பினும் அம்முறையில் அச்சிடப்பட்டவற்றுள் அதுவே முதலாவதாகும்; முதன் முதலாக 1824-ஆம் ஆண்டில் அது சென்னையில் அச்சிடப்பட்டது.

இவைகளை யன்றி அம்முனிவர் எழுதும் முறையிலும் சில சிறந்த மாறுதல்களைச் செய்தனர். அவர் காலத்திற்கு முன் குறில்களான எ, ஒ என்னும் ஒலிக்குறிப்புக்கள் எ் ஒ் என்றும் ஏ, ஓ என்பன எ, ஒ என்றும் எழுதப்பட்டு வந்தன. உயிர்மெய்யெழுத்துக்களில் மெ் என்னும் குறி மெ என்று குறிலாகவும் மெ என்னும் குறி மே என்று நெடிலாகவும் உச்சரிக்கப்பட்டு வந்தன. சிற்சில சமயங்களில் புள்ளிகளை வைக்காமலும் எழுத்தாளர்கள் எழுதிவந்தனராதலால் படிப்பவர்கள் மிகவும் இடர்ப்பட்டு வந்தனர். இக்குறையை நீக்க வீரமாமுனிவர் குறில்களுக்குப் புள்ளிகளிடும் வழக்கத்தை நிறுத்தி எ, ஏ என்று குறிலையும் நெடிலையும் எழுதினர். இங்கு, குறில் புள்ளி யில்லாமலும் ஏ என்பது கீழே கோடுபெற்றும் இருப்பது காணப்படும். இவ்விதமே அவர் உயிர்மெய்களையும் மெ, மே என்று குறிலுக்குப் புள்ளியை நீக்கியும், நெடிலுக்குக் கொம்பில் சுழித்தும் காட்டினர். ஒ் ஒ என்றிருந்த குறில் நெடில் உயிர்களை ஒ ஓ என்றும், பொ், பொ என்று குறில், நெடில் உயிர் மெய்களை, பொ போ என்றும் இவர் மாற்றினமை இன்றளவும் தமிழர்களால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

இங்ஙனம் நாற்பத்திரண்டாண்டு தமிழர்க்கும் தமிழுக்கும் உழைத்துப் பரகதியடைந்த அப்பெரியாரை நாம் ஒருநாளும் மறவோம் என்பது திண்ணம்.

## 12. தமிழ்நாட்டுப் பெண்பாலார்

ஒரு நாட்டின் சிறந்த நாகரிக நிலையின் உயர்வை அந் நாட்டு மக்களுடைய அறிவு, ஆற்றல், செல்வநிலை என்பவற்றால் உணரலாகும். இந்த மூன்றுக்கும் உரிய தெய்வங்களாக நாம் முறையே கலைமகள், பராசக்தி, திருமகள் என்பவர்களை வழிபடுகின்றோம்.

மக்களில் ஆடவர் எங்ஙனம் நாட்டினது பெருமைக்குக் காரணமாக இருக்கின்றார்களோ அங்ஙனமே பெண்டிரும் காரணமாகின்றனர். ஒரு நாட்டின் சிறப்புக்குக் காரணமாகிய மேலே கூறிய மூன்றுக்கும் அதிதேவதைகளாக மூன்று பெண் தெய்வங்கள் இருத்தலே இக்கருத்துக்குத் தக்க ஆதாரமாகும். அறிவுச் சிறப்பு, ஆற்றலுயர்வு, செல்வநிலை ஆகிய இவற்றில் பெண்டிரது பங்கு எங்ஙனம் இருந்ததென்பதை ஆராய்ந்தால் அவர்களுடைய பெருமை நன்கு புலப்படும்.

ஆடவர் மகளிர் ஆகிய இருவருக்குமே அறிவு பொதுவாகும். இப்பொழுது நமக்குக் கிடைப்பனவும், 1800 வருஷங்களுக்குமுன் இயற்றப்பட்டனவுமாகிய புறநானூறு முதலிய தமிழ் நூல்களால் கடைச்சங்க காலத்தில் பல பெண்கள் நற்புலமை வாய்ந்தவர்களாக இருந்தனரென்பது தெரியவரும். ஏறக்குறைய ஐம்பது பெண்பாலார் இயற்றிய செய்யுட்கள் இப்பொழுது கிடைக்கின்றன. மற்றப் புலவர்களுடைய வாக்குக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வளவு சிறப்பு இவர்களுடைய செய்யுட்களுக்கும் உண்டு.

இலக்கிய நூல்களைக் காட்டிலும் இலக்கண நூல்களைப் படித்தறிதல் கடினமானது. இலக்கணநூல் இயற்றுவதற்கோ பரந்த நூலறிவு வேண்டும். இலக்கணம் இயற்றிய புலவர்கள் புலவர்களாற் போற்றப்படும் சிறப்புடையராவர். காக்கை பாடினியார், சிறு காக்கை பாடினியாரென்ற பெண்புலவர் இருவர் செய்யுளைப்பற்றிய இலக்கண நூல்களை இயற்றியிருக்கின்றனர். யாப்பருங்கல விருத்தி

யுரை, யாப்பருங்கலக் காரிகையுரையென்னும் நூல்களில் அவ்விருவர் நூல்களிலிருந்தும் பல சூத்திரங்கள் மேற்கோளாகக் காட்டப்படுகின்றன.

ஔவையாரைப்பற்றிய பல செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. அவருடைய பெருமை அளவற்றது. அவருடைய பெயரை வைத்துக்கொண்டு பெருமை பெற்றோர் பிற்காலத்திலும் இருந்தனர். சங்ககாலத்து ஔவையார் கபிலர், பரணர் என்பவர்களைப்போன்ற பெருமை வாய்ந்தவர். அவருடைய மனோதைரியம் ஆச்சரியப்படத் தக்கது. அவரை ஆதரித்த அதியமானென்னும் அரசன் ஒரு முறை அவரைத் தொண்டைமானிடம் தூதாக அனுப்பினான். அவர் தொண்டைமானிடம் போனகாலத்தில் அவன் தன்னுடைய பெருமையைப் புலப்படுத்த வேண்டுமென்று நினைந்து தன் அரண்மனையைக் காட்டினான்; தன்னுடைய ஆயுதசாலையையும் காட்டி, "எப்படி இருக்கிறது?" என்று கேட்டான். அவன் போர் செய்தறியானென்பதையும் படைக்கலப் பயிற்சிக்கும் அவனுக்கும் நெடுந்தூரம் என்பதையும் ஔவையார் தெரிந்துகொண்டு, "என்ன அழகு! இவை எவ்வளவு ஒழுங்காகத் துடைத்து எண்ணெய் பூசி மாலை யணிந்து நன்றாக வைக்கப்பட்டிருக்கின்றன! எங்கள் அதியமான் வேல் எவ்வளவோ குறையுடையதாக இருக்கிறது. அவன் ஆயுதங்கள் பகைவரைக் குத்தி நுனி ஒடிந்து ரத்தக்கறையுடன் கொல்லன் பட்டடையிற் கிடக்கின்றன" என்றார். அவ்வரசனை இவ்வளவு துணிவாகப் பரிகாசம் செய்வதற்கு எவ்வளவு தைரியம் அவருக்கு இருக்கவேண்டும்!

ஒருசமயம் நாஞ்சில் வள்ளுவனென்ற ஓர் உபகாரியை ஔவையார் பார்க்கப்போயிருந்தார். அவன் தன்னிடம் வரும் புலவர்களுக்கு யானையைப் பரிசாகத் தரும் இயல்புடையவன். அதைக்கண்ட ஔவையார் நகைச்சுவை உண்டாக ஒரு செய்யுள் கூறினார். அது யானையைப் பரிசு பெற்ற பாணன் ஒருவன் கூறியதாக அமைந்தது: "இந்த

நாஞ்சில் வள்ளுவன் ஒன்றும் அறியாதவன். 'எங்கள் வீட்டில் அரிசியில்லை. கொல்லையிற் கொய்த கீரையைச் சுண்டி அதற்குமேல் தூவும் மாவுக்காகச் சிறிது அரிசி வேண்டும்' என்று கேட்டேன். அவன் ஒரு மலையைப்போன்ற யானையைக் கொடுத்தான். இப்படிப்பட்ட பைத்தியக்காரத்தனமான கொடை உலகத்தில் உண்டா? அவன் தன் பெருமைக்குத் தக்கபடி தந்தான்'' என்பது அதன் பொருள்.

இத்தகைய பெரியாருடைய செய்யுட்கள் இப்போது அறுபதுக்குமேல் கிடைக்கின்றன.

குறமகள் குறியெயினி குறமகள் இளவெயினி என்னும் இரண்டு குறப்பெண்டிரும், வெண்ணிக் குயத்தியாரென்னும் குயவர் குலத்துதித்தவரும் பாடிய செய்யுட்கள் சில உள்ளன. இவர்கள் வரலாற்ருல் அக்காலத்தில் எல்லாச்சாதி மகளிரும் நற்புலமை வாய்ந்தவர்களாக இருந்தனரென்று தெரிகின்றது.

கரிகாற்சோழனுடைய பெண்ணுகிய ஆதிமந்தியாரென்பவர் சில செய்யுட்கள் பாடியிருக்கிருர். பூதபாண்டியனென்னும் அரசனுடைய தேவியாராகிய பெருங்கோப்பெண்டு என்பவர் தம் கணவன் இறந்தகாலத்தில் தீப்பாயும்போது பாடிய செய்யுள் ஒன்று புறநானூற்றில் இருக்கிறது. அப்பாடல் அவருடைய புலமையையும் கற்பின் திண்மையையும் வெளிப்படுத்துகின்றது.

இவற்ருல் அரசகுடும்பத்திலிருந்த பெண்களும் தமிழ்ப் புலமை வாய்ந்திருந்தனரென்பது புலனுகும்.

சங்ககாலத்துக்குப் பிறகு தமிழ்நாட்டில் விளங்கிய பெண் புலவர்கள் பலர். அவர்களுள், பல அருமையான நீதிநூல்களை இயற்றியவராகிய ஔவையாரென்பவருடைய பாட்டுக்கள் இக்காலத்தில் இளம்பிள்ளைகளுக்கும் உத்ஸாகத்தை உண்டாக்குகின்றன. மிகவும் சுருக்கமாகவும் அகராதி வரிசையாகவும் இயற்றப்பட்ட ஆத்திசூடி கொன்றைவேந்தனென்பனவும், வேறு நூல்களும் மிக்க பெருமை வாய்ந்தன.

ஆண்டாளுடைய பாசுரங்கள் திவ்யப் பிரபந்தத்தில் ஒரு பகுதியாக விளங்குகின்றன. ஸ்ரீரங்கநாதனுக்குப் பூமாலையைச் சூடிக்கொடுத்த நாச்சியாராகிய அவர் பாமாலையையும் பாடிக்கொடுத்தார்; ஆனால், அவர் சூடிக் கொடுத்த பூமாலை அக்காலத்தில் திருமாலுக்கே பயன்பட்டது; அவர் பாடிக்கொடுத்த பாமாலையோ எவ்வளவோ வருஷங்கள் கடந்தும் வாடாமல் யாவருக்கும் பயன்படுகின்றது.

காரைக்காலம்மையாருடைய பாசுரங்கள் சைவத்திருமுறைகளில் ஒன்றாகிய பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அத்திருமுறையில், ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் பாடியருளிய ஒரு செய்யுளை அடுத்து அம்மையாருடைய பாடல்கள் இடம் பெற்றிருக்கின்றன. இதனால் அவருடைய செய்யுட்களுக்குச் சைவர்கள் மிக்க சிறப்பளித்தனரென்று தெரியவருகின்றது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரே அவ்வம்மையாரைப் பாராட்டியிருக்கின்றனர்.

கரிவலம்வந்தநல்லூரில் இருந்த வரகுண பாண்டியரென்ற ஓரரசருடைய மனைவியார் பெரிய விதுஷியாகவும் சிவபெருமானிடத்தில் உறுதியான அன்புடையவராகவும் இருந்தார்.

சில பழைய வரலாறுகளில் சோழனும் அவன் மனைவியும் சேர்ந்து பாடிய சில செய்யுட்கள் சொல்லப்படுகின்றன. தமிழ்ப் புலமையில் இருவரும் சமானராக இருந்ததை இவ்வரலாறுகள் உணர்த்தும்.

காஞ்சீபுரத்தில் அம்மைச்சி யென்ற ஒருத்தி இருந்தாள். அவள் தமிழ்ப்புலமை யுடையவள். அவள் வீடு வரதராஜப்பெருமாளது தேரோடும் வீதியில் இருந்தது. ஒருமுறை அந்தத் தேர் போகும்பொருட்டு அவள் வீட்டைச் சிலர் இடித்துவிட்டார்கள். அப்பொழுது அவள் வருந்தி இரண்டு செய்யுட்கள் பாடினாள். அவற்றுள், 'பெருமாளே! பாம்பையுங் குரங்கையும் உமக்கு ஊழியக்

காரராகக் கூட்டிவந்தீரே; என்னுடைய வீட்டை இலங்கைக் கோட்டையென்று நினைத்தீரோ?' என்னும் கருத்துடையது ஒன்று.

பெண்களில் அறிவுடையார் பிறரோடு வாதப்போர் நடத்தியதாகத் தமிழ்நாட்டிற் சில வரலாறுகள் வழங்குகின்றன. குண்டலகேசி யென்னும் ஒரு பெண் பௌத்த மதக் கொள்கைகளை நிலைநிறுத்தினாளென்றும், அதன் பொருட்டு அவள் பல இடங்களிற் சென்று அங்கங்கே உள்ள மதநூல்களில் அறிவுடைய வித்துவான்களை வாதுக்கழைத்துச் சொற்போர் புரிந்தனளென்றும் தெரிகின்றது. அவளது வரலாற்றைக் கூறும் குண்டலகேசி யென்னும் நூல் தமிழ்க் காப்பியங்கள் ஐந்தனுள் ஒன்றாகும்.

நீலகேசி யென்ற ஜைன நூலில் வரும் நீலகேசியும், சீவகசிந்தாமணியில் வரும் விசயையும், பெருங்கதையில் வரும் வாசவதத்தையும், மானனீகையும் மிகச் சிறந்த கல்வியறிவுடையவர்களாக இருந்தனரென்று அவ்வந்நூலாசிரியர்கள் புலப்படுத்தியிருக்கிறார்கள். பெண்டிரும் ஆடவரைப் போன்று கல்வியில் உயர்நிலையை அடையவேண்டுமென்ற கொள்கை அக்காலத்திலும் பரவியிருந்தமை இவற்றாற் பெறப்படும்.

பெண்கள் சங்கீதப் பயிற்சி உடையவர்களாக இருந்தனர். பழங்காவியங்களாலும் சங்க நூல்களாலும் அக்காலத்தில் பெண்மணிகளுக்கு இருந்த இசைப் பயிற்சியின் பெருமை புலப்படும். மலையைச் சார்ந்த இடங்களில் வாழ்ந்த குறப்பெண்கள் தினைப்புனம் காக்கும்போது பாடுவதும், அப் பாட்டினாற் கிளிகள் மயங்கி விழுவதும், சுனைகளில் அவர்கள் நீராடி மயிரை உலர்த்திக்கொண்டே குறிஞ்சிப் பண்ணைப் பாடுவதும், அப்பாட்டைக் கேட்டு மயங்கிய யானைகள் தினைப்பயிரை மேய்வதை மறந்து நிற்பதும், வீரப்பெண்டிர் தம் கணவர்கள் போர்க்களத்திற் புண் பட்டபோது அப்புண்ணினால் உண்டாகும் வருத்தம் அவர்களுக்குத் தோற்றாதபடி இன்னிசை பாடுவதும், விறலிய

ரென்ற வகையினராகிய மகளிர் பெரிய அரசர்களிடத்திற் பாடிப் பரிசுபெறுவதும், கோயில்களில் மகளிர் பாடி வணங்குவதும், யாழ் வாசிப்பதும், காலத்திற்கேற்ற பண்ணுல் அன்பர்களுக்குத் தம் உள்ளக் கருத்தைக் குறிப்பிப்பதும், இசையில் வாதிட்டு வெல்வதுமாகிய செய்திகள் பலவற்றை அவற்றிற் காணலாம்.

மதுரையில் இருந்த பாணபத்திரர் என்பவருடைய மனைவி இலங்கையிலிருந்துவந்த இசைப் பயிற்சியையுடைய ஒரு பெண்ணோடு பாடி வென்றதாக ஒரு வரலாறு உண்டு. இப்பொழுது வழங்கும் தேவாரங்களுக்குப் பண் அமைத்துக் கொடுத்தவர் இராசேந்திர பட்டணத்திலிருந்த ஒரு பெண்மணியே.

சங்கீதத்துக்கு அதிதேவதை மாதங்கியென்னும் பெண் தெய்வமே.

முத்தமிழ்களில் ஒன்ருகிய நாடகம் பெண்களையே பிரதானமாகக் கொண்டு நடைபெற்று வந்தது. மாதவியென்ற நாடகக் கணிகையின் ஆடலுக்கு அங்கமாகப் பலர் இருந்து பாடியும் வாத்தியம் வாசித்தும் சிறப்பித்த வரலாறு சிலப்பதிகாரத்தில் உள்ளது. கோயில்களில் தொண்டு புரியும் பெண்கள் நாட்டியக் கலையை வளர்த்துவந்தனர். சில ஸ்தலங்களில் தனியே நாடகங்கள் இயற்றப்பட்டு அவர்களால் நடிக்கப்பெற்று வந்தன. தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்தில் பழையகாலத்தில் இராஜராஜ நாடகமென்பதும், பிற்காலத்தில் சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகமென்பதும் நடந்து வந்தன. இப்பொழுதும் திருவிழாவில் குறவஞ்சி நாடகம் அங்கே நடைபெறுகின்றது.

வைத்தியம், சோதிடம், சித்திரம், சிற்பம் முதலிய கலைகளிலும் பெண்டிர் தேர்ந்த அறிவுடையவர்களாக இருந்தனர். இப்பொழுதும் பல குடும்பங்களில் முதிய பெண்டிர் கொடிய வியாதிகளுக்குச் சில சுலபமான பச்சிலை மருந்தைக் கொடுத்துக் குணப்படுத்துகிருர்கள்.

நட்சத்திரம், திதி முதலியன அவர்களுக்கு நன்ருகத் தெரியும். மந்திர பலத்திஞல் பலநோய்களை நீக்கும் ஆற்றல் சிலருச்கு உண்டு. சித்திரக்கலையில் அவர்களுக்குள்ள அறிவை அவர்கள் எழுதும் கோலங்கள் புலப்படுத்தும். பாசிமணியாலும், நூலாலும், மலர்களாலும் பெண்டிர்கள் பலவகைச் சித்திரங்களை அமைப்பர்; ஓலை முதலியவைக ளால் பலவகையான பெட்டிகள் முடைவர். இப்பொழு தும் தனவணிகர் வீடுகளிலும் முகம்மதியர் வீடுகளிலும் இவ்வழக்கம் இருக்கிறது. மிகவும் பொறுமையாக மாதக் கணக்கில் இடைவிடாது முயன்று மெல்லச் செய்யும் சித்திர வேலைகளுக்குப் பெண்களே தகுதியுடையவர்கள்.

எந்த வகையான துன்பத்தையும் பொறுக்கும் ஆற்றலே எவ்வகை ஆற்றலிலும் சிறந்தது.

"வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை"

என்பது குறள்; பலத்துக்குட் சிறந்த பலம் அறிவில்லார் செய்யும் குற்றத்தைப் பொறுக்கும் பொறுமை யென்று அதிற் சொல்லப்பட்டிருக்கின்றது. கணவராலும், சுற்றத் தாராலும், குழந்தைகளாலும், மற்றவராலும் உள்ளத்துக் கும் உடலுக்கும் நேரும் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு தமக்கென்று ஒன்றையேனும் எண்ணுமல் பிறர் நன்மைக்காகவே உழைக்கும் சிறந்த நிலையை யுடையவர் மகளிர்.

பெண்களுடைய வீரத்திற்கு உதாரணமாகக் கண்ணகி யைக் கூறலாம். அவளை வீரபத்தினி யென்று வழங்குவர். வீரப் பெண்களது கற்பை மறக்கற்பென்பர்; சீறிய கற் பென்றும் கூறுவர். கண்ணகியின் வரலாற்றில் அவளுடைய உள்ளத்தின் ஆற்றலும் உடலின் ஆற்றலும் ஒருங்கே காணப்படும்.

புறநானூற்றிலுள்ள சில செய்யுட்கள் வீரக்குடிப் பெண் கள் சிலரைப்பற்றிச் சொல்லுவன. போரில் தம் பிள்ளை

கள் பகைவரைக் கொன்று இறந்துபடுவதைப் பெரும் புகழாக அவர்கள் எண்ணினர்கள். வீரக்குடியிற் பிறந்தவர் களை மூதின்மகளிரென்று கூறுவர். தமிழ்நாட்டிலே பழைய காலத்தில் வீரர்கள் இருந்ததற்கு அவர்களுடைய இளமை யில் தாய்மார்கள் வீர உணர்ச்சியை அவர்களுக்கு ஊட்டி வந்ததும் ஒரு காரணமாகும்.

ஒரு வீரப்பெண்ணைப்பற்றி மாசாத்தியார் என்ற பெண் பாலார் பாடிய பாட்டொன்று புறநானூற்றில் உள்ளது. அது மிக அழகானது: "என்ன வன்னெஞ்சம்! என்ன துணிவு! இவள்தான் சரியான வீரக்குடிப் பெண். அன் றைக்கு மூண்டபோரில் இவளுடைய தமையன் போய்ப் பகைவர்களது யானையைக் கொன்று தானும் இறந்தான். நேற்று நடந்த சண்டையில் இவள் கணவன் போய்ப் பகை வர்கள் கைக்கொண்டு சென்ற மாடுகளைத் திருப்பி அங்கே இறந்தான். இன்று யுத்தமுரசின் முழக்கம் கேட்டது தான் தாமதம்; இவளுக்கு எவ்வளவு கோலாகலம்! இவ ளுக்கு உள்ளவன் ஒரே மகன்; அவனும் இடையில் ஆடை யணியத் தெரியாதவன்; அவன் கையில் வேலைக் கொடுத்து வெள்ளை ஆடையை உடுத்து எண்ணெய் தடவித் தலையை வாரிவிட்டு, 'யுத்தத்திற்குப் போ' என்கின்றாள்" என்பது அச்செய்யுளின் கருத்து.

தங்களுடைய தேகம் வன்மை பெறுவதற்குரிய வேலை களை அவர்கள் செய்துவந்தனர். அவ் வேலைகள் யாவும் அவர்களுடைய தேக நலத்துக்குரியனவாகவும் பணச் செலவைத் தவிர்ப்பனவாகவும் அமைந்திருந்தன. கிணற்றி லிருந்தும் ஆற்றிலிருந்தும் நீர் எடுத்து வருதல், பாத்திரங் களைத் தேய்த்தல், துணிகளைச் சுத்தம் செய்தல், ஆலயம் செல்லுதல் முதலிய காரியங்களால் அவர்களுடைய தேக மும் வீடும் விளக்கத்தை யடைந்தன. தங்கள் வீட்டுக்கு வேண்டிய அப்பளம், வடகம், வற்றல், குழந்தைகளுக் குரிய சிற்றுண்டிகள் முதலியவற்றைப் பிறரிடமிருந்து விலைக்கு வாங்காமல் பெண்களே செய்துவைப்பர்.

பெண்களுக்கென அமைந்த விளையாட்டுக்கள் அவர்களுடைய இயல்புக்கும், உடல் வளர்ச்சிக்கும் ஏற்றபடி இருந்தன. வீட்டில் இருந்தபடியே ஆடும் அம்மானை முதலியன அவர்களுடைய நரம்புகளுக்கு உறுதியை உண்டாக்கின. பந்து விளையாடுதல் பெண்களுக்கே உரிய விளையாட்டாக இருந்தது. பெண்களை வருணிக்கையில் பந்தார் விரலியென்றும், பந்தணைவிரலி யென்றும் புலவர்கள் கூறுவர். சில ஸ்தலங்களில் அம்பிகைக்குப் பந்து விளையாடுபவளென்ற பொருளுடைய திருநாமங்கள் அமைந்துள்ளன. கும்பகோணத்திற்கு மேற்கிலுள்ள கொட்டையூரென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் திருநாமம் கந்துகக் கிரீடாம்பிகை என்பது; அது தமிழில் பந்தார் விரலியென வழங்கும். பெருங்கதையில், "பந்தடி கண்டது" என்ற ஒரு பகுதி முழுவதும் சில பெண்கள் தம்முள் பந்தயங்கூறிப் பந்தாடிய செய்தியை மிக அழகாகவும் ஆச்சரியமாகவும் வருணிக்கிறது.

இங்ஙனம் காலையும் கையையும் வீசியும், குதித்தும் பந்தாடுவதனால் மகளிர் உடம்பிலுள்ள எல்லாப் பகுதிகளும் வன்மைபெறும். மகளிர் பந்தாடும்போது பாடிக்கொண்டே அடிப்பர். அப்படிப் பாடும் பாட்டுக்குக் கந்துகவரி யென்று பெயர். பந்தாடுதலையன்றி, சாழல், தெள்ளேணம், தோணோக்கம், கோலாட்டம், கும்மியடித்தல், உந்தி முதலிய மகளிர் விளையாட்டுக்கள் பல உண்டு. அவற்றில் கும்மி, கோலாட்டமென்பனவே இப்போது காணப்படுகின்றன. பழந்தமிழ் நூல்களாலேயே அவ்விளையாட்டுக்களை அறிகிறோம். பெண்களுடைய சங்கீதப் பயிற்சிக்கும் தேகப் பயிற்சிக்கும் அவை ஏற்றபடி இருந்தன; அவற்றால் அவர்கள் நோயின்றியும் வாழ்ந்தனர். ஆண்பாலாரைக் காட்டிலும் பெண்டிர் அதிக உணவை உண்ணுபவர்களென்பது ஒரு வடமொழிச்சுலோகத்தில் உள்ளது. அதற்குக் காரணம் அவர்களுடைய உழைப்பின் மிகுதியே யாம்.

இனி, பொது வாழ்க்கையில் பெண்கள் மேற்கொண்ட செயல்களை ஆராய்வோம்.

ஒரு வீட்டின் தலைவி பெண் என்பது நம் நாட்டினர் அமைத்த அமைப்பு. அதனால்தான் இல்லென்றும் மனை யென்றும் பெண்டிர்கள் வழங்கப்படுவர். ஒரு குடும்பத் தின் இன்பதுன்பங்கள் அக்குடும்பத்துத் தலைவியின் இயல் புக்கேற்றபடி அமைந்தவை;

> "இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
> இல்லவள் மாணுக் கடை"

என்ற திருக்குறளின் கருத்து இதுவே.

இல்லாளுடைய உடம்பாட்டைப் பெற்றே தலைவன் தருமம் செய்யவேண்டும்.

விருந்தினர்களை உபசரிப்பதில் பெண்களே மிக்க கவன முடையவர்கள்; தம் வீட்டில் ஆண்பாலார் இல்லாத சம யத்தில் விருந்தினர் வரின் தம் குழந்தைகளை அனுப்பி மாமா, சிற்றப்பா என்ற முறை வைத்து அவர்களை அழைத்துவரச் செய்து உபசரித்தனுப்புவர்.

ஆடவர்கள் யாவரையும் தகப்பனென்னும் முறை பாராட்டுவது இல்லை. ஆனல் பெண்களைமாத்திரம் பிரா யம், சாதி முதலிய வரையறையில்லாமல் தாயென்று கருது வது முன்னோர் வழக்கம்; சகோதரிகளாகச் சொல்வது நவீன வழக்கம். பண்டைக்காலத்தில் மனைவியைத் தவிர்த்து மற்ற யாவரையும் தாயென்றே சொல்லிவந்தனர். ஆடவர்களுடைய பெயர்களுக்குப் பின் செட்டியார், முதலி யார் முதலிய சாதிப்பெயர்கள் இருப்பது போலன்றி எல் லாப் பெண்களுக்கும் அம்மை, அம்மா, ஆச்சி என்று அமைந்திருத்தலே இக்கொள்கைக்குச் சிறந்த ஆதாரமா கும். காரைக்காலம்மையார், நச்செள்ளையாரென்ற பெயர் களைப் பார்க்க. செள்ளையென்பது தாயின் பெயர்; ந என் பது சிறப்புப் பொருளைத் தருவது.

கற்புடைய பெண்களைத் தெய்வமாகப் போற்றும் வழக்கம் பழங்கால முதல் உண்டு. கண்ணகிக்கும் ஔவையாருக்கும் கோயில்கள் இருக்கின்றன. மங்கையர்க்கரசியாரைச் சேக்கிழார்,

"மங்கையர்க்குத் தனியரசி யெங்க டெய்வம்"

என்று வாயாரப் பாடுகின்றனர். கற்புடைய மங்கையர் இறந்தவிடத்துக் கல்நட்டுப் பூசித்தனர்; மாஸதிக்கல் என்பது அதன் பெயர். இன்றும் மங்கலத்தோடு இறந்த பெண்களைத் தெய்வமாகக் கொண்டாடும் வழக்கம் நம் குடும்பங்களில் உள்ளது. சுமங்கலிப் பிரார்த்தனை முதலியன இதற்கு உதாரணங்களாம்.

பெண்கள் ஏவலாளரைப்போல் இருந்து வீட்டைச் சுத்தமாக வைத்திருத்தல் சமையல் செய்தல் முதலிய காரியங்களைக் கவனித்து வந்தனர். ஆயினும், "ஏர் பிடித்தவன் என்ன செய்வான்? பானை பிடிப்பவள் பாக்கியம்" என்ற பழமொழியால், பெண்களை வெறும் அடுப்பூதிகளாக நினையாமல் பாக்கியசாலிகளாக எண்ணும் வழக்கம் அறியப்படுகின்றது.

வரவுக்கேற்றபடி கவனித்துச் செலவிடும் பொக்கிஷ மந்திரியும் பெண்தான். "தற்கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்று திருவள்ளுவர் சொல்கின்றார். இதனால், வரவுக்குமேற் செலவு செய்பவளை வாழ்க்கைப் பகையென்று நாம் சொல்லிவிடலாமல்லவா? தம் குடும்ப வாழ்க்கைக்கு இன்ன இன்ன பொருள்கள் வேண்டுமென்று கணவர்களுக்கு அறிவுறுத்தி வேண்டியவற்றைப் பெற்று நன்மை உண்டாக்குதல் மகளிர் கடமை.

மகளிர் தம் குழந்தைகளுக்கு முதல் ஆசிரியராக விளங்குகின்றனர். பேசும் பாஷையை முதலில் கற்பிக்கும் கடமை தாய்க்கு உரியது. ஒவ்வொரு வார்த்தையாகச் சொல்லிச் சொல்லி உலகத்திலுள்ள பொருள்களைக் குழந்தைக்குக் காட்டுவதில் தாய்க்கு உண்டாகும் சந்தோஷம் அளவற்றது;

தான் கற்பித்தவைகளை அக்குழந்தை கற்றுக்கொண்டு சொல்வதைக் கேட்பது அதைவிடப் பேரானந்தம் தரும்.

கணவருக்கு யோசனை கூறும் மந்திரியாகவும் மனைவி விளங்குகின்றாள்; "விறன் மந்திரி மதி" உடையவள் பெண்ணென்று ஒரு பழைய செய்யுள் கூறுகின்றது. மங்கையர்க்கரசியார் தம் கணவருக்கு ஒரு நன்மந்திரியைப்போல இருந்தனர்.

தம் கணவருடைய சௌக்கியத்தையும் குழந்தைகளுடைய நலத்தையும் பாதுகாக்கும் வைத்தியர்கள் அவர்களே.

*"தற்காத்துத் தற்கொண்டாற் பேணி"*

என்பது குறள். தன்னைப் பாதுகாத்துத் தலைவனையும் பாதுகாத்தல் மனைவியின் வேலை.

அறம், பொருள், இன்பமென்னும் மூன்றன் திறத்திலும் பெண்களுடைய சம்பந்தத்தால் நாட்டுக்கு நன்மைகள் உண்டாயின. அப்படியே மோக்ஷத்தையடையும் முயற்சிகளிலும் பெண்பாலார் சிறப்படைந்திருந்தனர்.

பெண்பாலாரைப்பற்றித் தமிழ் நூல்களில் உள்ள செய்திகளெல்லாவற்றையும் தொகுத்து வகைப்படுத்தினல் ஒவ்வொரு துறையிலும் அவர்கள் தம் ஆற்றலை வெளிப்படுத்திச் சிறப்புற்ற வரலாறுகள் பல தெரியவரும். அவர்களது பெருமை ஆடவர்களது பெருமையோடு சேர்ந்தே காணப்படுகின்றது. சங்கீதத்தில் சுருதி எத்தகையதோ அத்தகையதே வாழ்க்கையிற் பெண்களுடைய நிலையும். சுருதியில்லாமல் சங்கீதம் நடைபெறாது. ஆனல் சங்கீதத்தில் வாத்தியகோஷங்களும் வாய்ப்பாட்டும் வெளிப்படையாகத் தோன்றி எல்லோராலும் போற்றப்படுகின்றன. சுருதியோ அவ்வளவு பெருமைக்கும் ஆதாரமாகி நின்றும் புலப்படாமல் இருக்கிறது. பெண்களும் எல்லாவற்றையும் கடமையாகச் செய்து பிறர் புகழுக்கு அஸ்திவாரமாக இருந்து அடங்கிச் சுருதியைப்போலக் கலந்து நிற்கின்றனர்.



# செய்யுள் நூல்களின் வரலாறு

## இன்னா நாற்பது

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று, கபிலரென்னும் சங்கப் புலவரால் இயற்றப்பெற்றது; நாற்பது செய்யுட்களையுடையது; ஒவ்வொரு பாட்டிலும் இன்னாதனவாகிய செய்திகள் சொல்லப்படும்.

## இனியவை நாற்பது

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் இயற்றியது; நாற்பது செய்யுட்களையுடையது. இனியவையாகிய செய்திகள் ஒவ்வொரு பாட்டிலும் சொல்லப்படும்.

## கம்பராமாயணம்

கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் பல வடமொழி ராமாயணங்களை ஆராய்ந்து இயற்றியது. இவரை ஆதரித்த பிரபு வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப ரென்னும் வேளாளர்.

## கலிங்கத்துப்பரணி

முதற் குலோத்துங்க சோழனுடைய கட்டளையின்படி சென்ற அவன் சேனாபதியாகிய கருணாகரத் தொண்டைமானுக்கும் வடகலிங்கத்தரசனாகிய அனந்தபத்மனுக்கும் நிகழ்ந்த போரைப்பற்றிக் கூறும் ஒரு பிரபந்தம். இதனை இயற்றியவர் தீபங்குடியில் வாழ்ந்த சயங்கொண்டாரென்டவர். இவருக்குக் கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டம் உண்டு.

பரணி என்பது போர்க்களத்தில் இறந்தவர்களுடைய உடலையும் பட்டத்து யானை முதலியவற்றின் உடலையுங்கொண்டு பேய்கள் பரணி நட்சத்திரத்திற் கூழட்டுத் துர்க்கையை வழிபடுவதாக அமைக்கப்படுதலின் பரணி யென்னும் பெயரை இப்பிரபந்தம் உடையதாயிற்று.

## குசேலோபாக்கியானம்

பங்களூரைச் சார்ந்த வல்லூர்த் தேவராச பிள்ளை யென்பவரால் முதலிற் சில செய்யுட்களியற்றப்பட்டுப் பின்பு நூலின் எஞ்சிய பகுதி முழுவதும் அவருடைய ஆசிரியராகிய திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் நிறைவேற்றப்பட்டது. ஆயினும் பிள்ளையவர்கள் விருப்பப்படி தேவராச பிள்ளையின் பெயராலேயே வழங்கிவரலாயிற்று.

## சிலப்பதிகாரம்

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் சேரர் குலத்துதித்த இளங்கோவடிகளென்னும் பெரியாரால் இயற்றப்பெற்றது; கண்ணகியின் சிலம்பு காரணமாக நிகழ்ந்த வரலாற்றைக் கூறுவதாதலின் இப்பெயர் பெற்றது. இது மூன்று காண்டங்களை உடையது. இதற்கு முத்தமிழ்க் காப்பியம், இயல் இசை நாடகச் செய்யுளென்னும் வேறு பெயர்களும் உண்டு.

## சீவகசிந்தாமணி

திருத்தக்க தேவரென்னும் சைன முனிவரால் இயற்றப்பெற்றது; சீவகனென்பவனுடைய சரித்திரத்தை விரித்துக் கூறுவது.

## தமிழ் விடுதூது

மதுரைச் சொக்கநாதக் கடவுளிடத்தில் அன்பு பூண்ட ஒரு பெண் அவர்பால் தமிழைத் தூதுவிடுவதாக அமைந்தது. தூதென்பது தமிழ்ப் பிரபந்த வகைகளுள் ஒன்று. இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## திருக்குறள்

இதனை இயற்றிய ஆசிரியர் திருவள்ளுவர். இரண்டடி வெண்பாவாகிய குறளால் இயற்றப்பெற்றமையின் இந்நூல் இப்பெயர் பெற்றது. அறம் முதலிய மூன்றையும் பகுத்துக் கூறுதலால் இது முப்பாலென்னும் பெயர் பெறும். இதற்கு வேறு பெயர்களும் உண்டு. இது பதினெண் கீழ்க்கணக்குகளில் ஒன்று. இதனைத் தம் நூல்களில் எடுத்தாளாத தமிழ்ப் புலவர்கள் இல்லை. எல்லா மதத்தினருக்கும் இது பொதுவாக ஆசிரியரால் பேரன்புடன் இயற்றப்பட்டது.

## திருவாசகம்

சைவ சமயாசாரியர்களுள் ஒருவராகிய திருவாதவூரடிகளால் இயற்றப்பெற்றது; சைவத் திருமுறைகளில் எட்டாவது. இன்னும் இவ்வாசிரியர் சிதம்பரம் ஸ்ரீ நடராஜப்பெருமான் விஷயமாகத் திருச்சிற்றம்பலக் கோவையாரென்ற ஒரு நூலை அருளிச்செய்திருக்கின்றனர்.

## தேவாரம்

சைவ சமயாசாரியர்களுள் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனரென்னும் மூவரால் தலங்கள்தோறும் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபட்டுப் பாடி

யருளிய பதிகங்கள் அடங்கியது. சைவத் திருமுறைகளுள், முதன் மூன்றும் திருஞானசம்பந்தர் தேவாரம்; நான்கு முதல் ஆறுந்திருமுறை வரையிலுள்ளவை திருநாவுக்கரசர் தேவாரம்; ஏழாந்திருமுறை சுந்தர மூர்த்தி நாயனூர் தேவாரம்.

## நளவெண்பா

நிடத நாட்டை ஆண்டுவந்த நளனுடைய சரித்திரத்தை அமைத்துப் புகழேந்திப் புலவரால் இயற்றப்பெற்றது. இதனை ஆக்குவித்தோன் சந்திரன் சுவர்க்கியென்னும் உபகாரி.

## நாலடியார்

சங்கமருவிய நூல்களாக வழங்கப்படும் பதினெண் கீழ்க்கணக்கினுள் முதலாவதாக வைக்கப்பெற்றது; சைன முனிவர்களால் இயற்றப்பெற்ற நானூறு செய்யுட்களையுடையது.

## நீதிவெண்பா

வடமொழியிலுள்ள நீதி சுலோகங்களின் மொழிபெயர்ப்பு; இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் விளங்கவில்லை.

## புறநானூறு

சங்கமருவிய நூல்களாகிய எட்டுத் தொகையுள் ஒன்று. தமிழ் இலக்கணங்கள் ஐந்தனுள் பொருளிலக்கணத்தின் பகுதியாகிய புறப் பொருளுக்கு இலக்கியமாகவுள்ளது. பெருந்தேவனூர் முதலிய நல்லிசைப் புலவர்கள் இயற்றிய கடவுள் வாழ்த்தும் 400 செய்யுட்களும் அடங்கியது.

## திருமாலை

இதனை இயற்றியவர் ஆழ்வார்களில் ஒருவராகிய தொண்டரடிப் பொடியாழ்வார். இவருடைய ஊர் சோழநாட்டிலுள்ள திருமண்டங்குடி என்பது. இவருடைய இயற்பெயர் விப்பிரநாராயணர்; இவர் நந்தவனத் திருப்பணி செய்துவந்தார். இவர் அருளிச்செய்த வேறு பிரபந்தம் திருப் பள்ளியெழுச்சி.

## வீரவனப் புராணம்

திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானாக விளங்கிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் வீரவனமென்னும் தலசரித் திரத்தை யமைத்துப் பாடப்பெற்றது. இத்தலம் பாண்டிய நாட்டி லுள்ளது; இப்பொழுது சாக்கோட்டையென வழங்கும்.

# செய்யுட் பகுதியின் குறிப்புரை

1. முதல-முதலாகவுடையன. முதற்று-முதலாக உடையது.

2. மங்கலமொழியாதலால் 'உலகம்' என்பதை இராமாயணத்தின் முதலிற் கம்பர் அமைத்தனர்.

உளவாக்கல்-படைத்தல். நிலைபெறுத்தல்-காத்தல். நீக்கல்-அழித்தல். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலுக்கும் தலைவராவார் முழுமுதற் கடவுள் என்பது இதிற் கூறப்பட்டுள்ளது. சரண்-அடைக்கலப்பொருள்.

3. நாமகள்-ஸரஸ்வதி. தவளத்தாமரை-வெள்ளைத்தாமரை; தாமரையாகிய கோயில்.

4. படிகம்-ஸ்படிகம். கடி-நறுமணம். துடி-உடுக்கை.

5. திங்கள்-சந்திரன். மங்கலமொழியாதலால் திங்கள் என்னும் சொல் சிலப்பதிகாரத்தின் முதலிற் கூறப்பட்டது. இச்செய்யுளைக் குடைமங்கலம் என்பர்.

சென்னி-சோழன். போற்றுதும்-போற்றுவோம். அளித்தலால் போற்றுதும் என இயைக்க.

ஞாயிறு-சூரியன்; சூரியன் சோழர் குலத்திற்குத் தலைவனாதலால் இங்கே போற்றப்பெற்றனன். காவிரி நாடன்-சோழன். திகிரி-சக்கராயுதம்; ஆஞ்ஞாசக்கரம். பொற்கோடு-பொன்னாலாகிய கொடுமுடி; சூரியன் மேருவைச் சூழ்ந்து வருகிறானென்பது கவிமரபு.

நாமநீர்-அச்சத்தைச் செய்யுங் கடல். அளி-அன்பு.

இம்மூன்றும் எதிர்நிலை அணி.

6. கிளந்த-சொல்லிய. மதிமுகிழ்-பிறைச்சந்திரன். இறைவர்-சிவபெருமான். பெயர்: இறையனார் என்பது. இலக்கணம்-இறையனார் அகப்பொருள் என்னும் இலக்கணம். ஆரியம்-வடமொழி. உறழ்தரு-ஒத்த.

7. புறந்தருதல்-பாதுகாத்தல். சான்றோன்-கல்வியறிவு ஒழுக்கங்களாற் சிறந்தவன். வடித்து-கூர்மையாக்கி. ஒளிறு-விளங்குகின்ற. சமம்-சண்டை. காளை-பதினாறு வயதுள்ள இளைஞன்.

பொன்முடியாரென்பார் தமிழ்ப்புலமை வாய்ந்து சங்கத்திலிருந்த பெண்பாலாருள் ஒருவர்.

**8.** உலகம் மன்னவனை உயிராக உடையது. உயிர்த்து-உயிராக உடையது. அறிகை-அறிதல்.

**மோசிகீரனர்:** இவர் தமிழ்ச்சங்கப் புலவர்களுள் ஒருவர்.

**9.** படைப்புப் பல படைத்து-சிறந்த உணவுகள் பலவற்றைப் படைத்து. பெருஞ் செல்வமுடையராயினும் என இயைக்க. குறுகுறு நடந்து-மெல்ல மெல்ல நடந்து. இட்டும்-படைத்தும். துழந்தும்-துழாவியும். விதிர்த்தும்-அசைத்தும். பயக்குறை-பயனுகிய பொருள்.

**பாண்டியன் அறிவுடைநம்பி:** சங்கத்திலிருந்து தமிழாராய்ந்த ஒரு பாண்டியன்.

**10.** உற்றுழி-ஆபத்துவந்தவிடத்து. உறுபொருள்-மிக்க பொருளை. பிற்றைநிலை-ஆசிரியர் பின்னே நிற்றல்; வழிபட்டு நிற்றல். பிறப்பு ஓர் அன்ன-பிறப்பை ஒருவகையாக ஒத்த. சிறப்பின் பாலால்-கல்விச் சிறப்பின் பகுதியையுடைமையால். அறிவுடையோன் சென்றவழி அரசன் செல்லும். நாற்பால்-நாலு வருணம். கீழ்ப்பால் ஒருவன்-கீழ்ச்சாதியிற் பிறந்த ஒருவன். **நெடுஞ்செழியன்:** சங்கத்திலிருந்து தமிழாராய்ந்த பாண்டியர்களுள் ஒருவன்.

**11.** கசடு-குற்றம்.

**12.** யாதானும்-எந்த நாடாயினும். என்-யாதுகாரணம்பற்றி. சாந்துணையும்-மரணமடையுமளவும். ஆல்கள்: அசைநிலைகள்.

**13.** முகம் நக-முகம் மலர. நெஞ்சத்து அகம்; அகம்-இடம்.

**14.** உடுக்கை-உடுக்கும் ஆடை. இடுக்கண்-துன்பம்.

**15.** நன்றி-உதவி.

**16.** மாறுபாடில்லாத-தேகத்திற்கு விரோதத்தைச் செய்யாத. மறுத்து-மீட்டும்.

**17.** முயற்றின்மை-முயற்சியில்லாமை. இன்மை-வறுமையில்.

**18.** ஆதல்-ஆகுக; வியங்கோள். அனைத்து-அவ்வளவே. ஆகுலம்-ஆரவாரம். பிற-சொல்லும் வேடமும்.

**19.** யாகாவாராயினும்-எந்த உறுப்புக்களை அடக்கிக்கொள்ளாவிட்டாலும். சோகாப்பர்-துன்பமுறுவர். இழுக்கு-தவறு.

**21.** என்னோற்றான் கொல்-என்ன தவம் செய்தானோ?

**22.** பெரிது உவக்கும்-மிகவும் மகிழ்வாள். சான்றோன்-கல்வி அறிவு ஒழுக்கங்களாற் சிறந்தவன். என-என்று பிறர் சொல்ல.

**23.** முன்னினிது-மிக இனியது. தானம்-ஸ்தானம். வாழ்வு-வாழ்தல். ஊனம்-குறைவு.

**24.** மாண-மாட்சிமை பொருந்த. எள் துணையானும்-எள்ளள வாயினும்.

**25.** வழங்கல்-கொடுத்தல். ஒருவர் பங்கு-ஒருவர் பக்கம். நடுவு நிலைமை உடையனாதல் வேண்டுமென்றார். பெட்டவை-மனம் விரும்பிய வற்றை யெல்லாம். திரிபு-மாறுபாடு.

**26.** தூக்கி-ஆராய்ந்து. மன்றம் - நியாயசபை. கொடும்பாடு-கொடுமை. அன்று-இவன் அடைக்கலமாகக் கொடுத்த அக்காலத்தில். அடைக்கலம்-ஒருவர் தன்பால் ஒப்பித்த பொருள்கள்.

**27.** நெடுநீர்-வெள்ளம். தொடர்பு-நட்பு. தடுமாறி வாழ்தல் இன்னா எனக் கூட்டுக.

**28.** ஆன்று-எல்லா நற்குணங்களாலும் நிறைந்து. அவிந்த-அடங்கிய. மான்று-மயங்கி. வழங்கல்-செல்லுதல். நோன்று-பசி முதலியவற்றைப் பொறுத்து. ஓம்பாவிடல்-பாதுகாவாது விட்டுவிடுதல்.

**29.** யாத்த-கட்டிய. தொடர்-நட்பு. செய்தும்-செய்வோம். பரி யார்க்கு-அன்பு செய்யாதவர்களுக்கு. தாம் உற்ற கூற்று-தாமடைந்த துன்பங்களைச் சொல்லுதல்.

**31.** கடிப்பு இகு-குறுந்தடியினால் அடிக்கப்பட்ட. காதம்-ஏழரை நாழிகைத் தூரம். யோசனை-பத்து நாழிகைத் தூரம்.

**32.** இம்மை-இம்மைப்பயனை. தாம் உளரா-தாம் உயிருள்ளவராக இருக்க. மம்மர்-மயக்கம்.

**33.** அங்கணம்-ஜலதாரை. உரவுநீர்-பெரிய நீரையுடைய வெள்ளம். தீர்த்தம்-பரிசுத்தமுள்ள நீர். சார்ந்து நிற்பர் என இயைக்க.

**34.** எண்ணற்க - எண்ணாதொழிக. கைத்து - கையினிடத்ததாகிய பொருள். இடை மிடைந்த-நடுவே செறிந்து கலந்த.

**35.** கானல்வரி-கடற்கரையினின்று பாடும் இசைப்பாட்டு.

மதகு ஓதை: ஓதை-ஓசை. தண்பதம்-புதுநீர் விழவு. விழவர்-விழாக் கொண்டாடுபவர்கள். மழவர்-ஒருவகை வீரர்; இளையவர் எனினும் ஆம்.

**36.** பூ ஆடை-பூவாகிய ஆடை. கயற்கண்-கயல் மீனாகிய கண்கள். ஒல்கி-துவண்டு. நின் கணவனென்றது, சோழனை. வளையாமை-வளையாமைக்குக் காரணம்.

**37.** நாடு வளர்க்கும்-நாட்டை வளர்க்கும். ஒழுகல்-ஓடுதல். ஆழியாள்வான்-சக்கரவர்த்தி. பகல் வெய்யோன்-சூரிய குலத்திற் பிறந்தவன்; வெய்யோன்-விரும்பத்தக்கவன்.

**38.** அம்மானை வரி: அம்மானை ஆடுங்காலத்தில் மகளிர் பாடும் இசைப்பாட்டு.

வீங்குநீர் - கடல். அரணம் - பாதுகாப்பையுடைய மதில். உரம்-வலி; உரவோன்-வன்மையையுடையவன்; இவன் முசுகுந்த சக்கரவர்த்தி; சோழ பரம்பரையில் முன்னிருந்தவனென்பர். விசும்பில் தூங்கு எயில் மூன்று எறிந்த சோழன்-ஆகாயத்தில் அசைந்துகொண்டு நின்று பூமியிலுள்ளாரை வருத்திய மூன்று மதில்களை அழித்த சோழன். இவன் பெயர் தொடித்தோட் செம்பியன். இச்சரிதம் புறநானூறு, 39-ஆம் செய்யுளின் 6-ஆம் அடிக்குறிப்பால் உணரப்படும்.

புகார் நகரம்-காவிரிப்பூம்பட்டினம். பாடேலோர்; பாடு-பாடுவாயாக; ஏல், ஓர்: அசைநிலைகள்.

**39.** நிறை-துலாக்கோல். உடம்பரிந்த கொற்றவன்-சிபிச்சக்கரவர்த்தி. கறவை-பசு. கறவை முறை செய்த காவலன்-மனுநீதிச்சோழன்; இந்தச் சரிதையைப் பெரிய புராணத்துள்ள திருவாரூர்ச் சிறப்பு என்னும் பகுதியுட் காண்க. ஒரு குலத்திற் பிறந்த பலருடைய செயல்களை அதிற் பிறந்த ஒருவருடைய செயலாகக் கூறுதல் கவிமரபு.

**40.** கடவரைகள்-மதத்தையுடைய மலைபோன்ற யானைகள்; என்றது திக்கஜங்களை. வடவரை-இமயமலை. வேங்கை-வேங்கை வடிவமுள்ள இலச்சினை; இது சோழர்க்குரியது. ஒற்றினன்-பொறித்தவன்; இவன் கரிகால் வளவன். கொற்றவன்: இங்கே சோழன்.

**41.** நல்லீர்-நல்லோர்களே. பரிவு-துன்பம். புறஞ்சொல்-காணாதவிடத்தே கூறும் பழிச்சொல். பொய்க்கரி-பொய்ச்சான்று. பொருள்மொழி-மெய்வார்த்தை. அவைக்களம்-சபையிடம். பிழையுயிர்-மரிக்கும் நிலையிலுள்ள உயிர். அறமனை = மனையறம்-இல்லறம். அல்லவை-தீச்செயல்கள். வெள்ளைக்கோட்டி-அறிவில்லாதாருடைய கூட்டம். விரகு-உபாயம். யாக்கை-உடம்பு. ஒல்லுவது-வருவது. தேத்துக்கு-இடத்துக்கு.

**42.** கற்றல்-கற்றிடுக. பிறகள்-வேறு பொருள்கள். துணைவி-மனைவி. என்னை-யாது?

**43.** துறு முடி-நெருங்கிய கிரீடம். அணிகலம்-ஆபரணம். கண் அரிந்து-தாட்சணியத்தை யொழித்து. தேற்றம்-தெளிவு. விளிகுற்றார்-இறந்தோர் ஆவர். இச்செய்யுள், "தொழுதகையுள்ளும் படையொடுங் கும்" என்னும் திருக்குறளின் பொருளைத் தழுவி நின்றது.

**44.** ஒற்றர்-வேவுகாரர்; அங்கங்கே ஒன்றியொன்றிச் செய்திகளை அறிபவர். கோடல்-கொள்ளுதல். சூழ்ந்து-ஆலோசித்து. சூது-உபாயம். கொற்றம்-வெற்றி.

**45.** மேதக்கவு-மேம்பாட்டை. குன்றினார்தமை-குலம் முதலியவற்றால் குறைந்தவர்களை. பொன் துஞ்சு ஆகத்தினாய்-திருமகள் தங்கும் மார்பினையுடையாய்.

**46.** தரணி-பூமி. துன்னுதன-கிடையாதவைகள்.

**47.** புலன் ஐந்தும்-சத்தம் முதலிய ஐந்து விடயங்களும். பொறி-மெய் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்து. ஐ-கோழை. அலமந்த-சுழன்ற. அஞ்சேல்-அஞ்சாதே. அமரும்-விரும்பித் தங்கும். முழவு-மத்தளம். மந்தி-பெண் குரங்கு.

**48.** துய்ப்பன-அனுபவிப்பன. தரப்பிப்பாய்-செலுத்துவாய். ஏறு-இடபம். இதில், அடியேனுக்கு அருள் செய்யவேண்டும் என்னும் தொடர் எஞ்சி நிற்கின்றது.

**49.** மெய்ப்பொருள்-ஞானம். பணிப்பானை-கட்டளையிடுபவனை. எளி வந்த-எளியனாகி வந்த. அன்னம்-அன்னப்பறவை. மறக்கலுமாமே-மறத்தலும் இயலுமா? இயலாதென்றபடி; ஏகாரம், எதிர்மறை.

**50.** சதுரர்-திறமையையுடையவர். எம்பெருமான்: விளி. கைம்மாறு-பிரதியுபகாரம்.

**51.** உடைமை-உடைய பொருள்கள்.

**52.** இச்சுவை-இங்ஙனம் பெருமானைத் துதித்தலால் உண்டாகும் இன்பத்தை.

**53.** வேதநூல்-வேதத்தாற் கூறப்படும் (பிராயம்). மனிசர்-மனிதர். பாதியுமுறங்கிப் போகும்-பாதிப் பிராயமும் உறங்குதலால் போகும். நின்றதில்-நின்ற ஐம்பது பிராயத்தில். பேதை, பாலகன், அது. அது என்றது யௌவன பருவத்தை. ஆகும் என்பதைப் பிணி, பசி, மூப்பு என்பவற்றோடு தனித்தனியே கூட்டுக.

**54.** ஆகும்-ஆவான். புள்கொடி-கருடக்கொடியை. ஐயப்பாடு-சந்தேகம்.

**55.** குடதிசை-மேற்குத்திக்கு. குணதிசை-கிழக்குத்திக்கு. அரவு அணை-ஆதிசேஷனாகிய படுக்கை. துயிலுமா-துயிலும் விதத்தை.

**56.** நடுவு பாட்டு-நடுவில்; பாடு-இடம். ஏழையேன்-அறிவில்லாதேன்.

**57.** நூக்க-செலுத்த. சலம்-வஞ்சனை. அணிலும் போலேன்-அணிலையும் போல்வேனல்லேன். அளியத்தேன்-இரங்கத்தக்கேன். அளியம்: அம், சாரியை. அயர்க்கின்றேன்-மறக்கின்றேன்.

சேதுபந்தன காலத்தில் அணிலொன்று தானும் ஸ்ரீராமபிரானுக்குக் கைங்கரியம் செய்யவெண்ணிக் கடல்நீரில் குளித்து, கரை மணலுள் புரண்டு, பிறகு கடலில் குளித்து அங்கு அம்மணலைச் சேர்த்து இவ்வாறு உதவி செய்தது என்பது ஐதிகம்.

**58.** செற்றம்-தணியாத கோபம். தீ விளி-கொடிய சொற்கள் என்பது பழைய வியாக்கியானம். விளிவன்-சொல்லுவேன்; விளித்தல்-கூப்பிடுதல். வாளா - சும்மா. புனம் - முல்லைநிலத்துக் கொல்லை. பொன்னி-காவிரி.

**59.** அலம்பும்-அலையாநிற்கும் என்பது பழைய வியாக்கியானம். கார்த்திரள்-மேகக்கூட்டத்தை. மார்க்கம்-வழி. துரிசன்-குற்றத்தையுடையேன். மூர்க்கன்-பிடிவாத புத்தியுடையவன்.

**60.** அமர-நிறைய. தமர்களில்-அடியார்களில். நுமர்-நும்மைச் சேர்ந்தவரை. நொடிப்பதோர் அளவில்-கைந்நொடியளவில். போலும்: அசைநிலை.

**61.** பூசை-பூனை. நக்குபு-நக்க; எச்சத்திரிபு. காசு இல்-குற்றமில்லாத. கதை அறையலுற்றேன் என இயைக்க.

**62.** முத்தமிழ்-இயல், இசை, நாடகம் என்பன. துறை-வழி. முறைபோகிய-முறையே கற்றுத் தேர்ந்த. பேதையர்-மூடர்கள். பன்னப்பெறுபவோ-ஆராய்ச்சி செய்யப்படுவனவோ.

**63.** அரங்கு-நடனசாலை. தறை = தரை-பூமி. இறையும்-சிறிதும். புன்கவியை முனிவரோ?

**64.** தத்தும்-நீர் தத்துகின்ற. மடை-நீர்பாயுமிடம். பணிலம்-ஒருவகைச் சங்கு. குரம்பு-கரை. மேதிக்குழி-எருமைகள் கிடக்கும் பள்ளம். கொள்ளை-மிகுதி. பரம்பு-பரம்படிக்கும் பலகை. சாலிப்பரப்பு-நெற்

பரப்பு. பாங்கர்-பக்கத்திலுள்ள. கரம்பு-தரிசு நிலம். சந்தக்கா-சந்தனக் சோலை.

**65.** ஆலை-கரும்பாலை. மள்ளர்-உழவர். அமலை-சத்தம். ஆலைச் சாறு-கருப்பஞ்சாறு; ஆலை-கரும்பு. வேலை-கடல். ஏறு-எருது. வேலி-நிலம். அரவம், அமலை, ஓதை, தமரம், துழனி யென்பவை சத்தத்தைக் குறிக்கும் ஒரு பொருட் சொற்கள்.

**66.** கல்லிடை-மலையினிடத்தே. நீத்தம்-வெள்ளம். மறைகள்-வேதங்கள். பொருள்-முழுமுதற்கடவுள். தொல்லையில்-முதலில். சூழ்ச்சி-ஆலோசனையையுடைய. நீத்தம் தொல்லையில் ஒன்றேயாகிப் பரந்தது.

**67.** தாது-பூக்களிலுள்ள வாசனைப்பொடி. பொய்கை-மானிடர் ஆக்காத நீர்நிலை. தடங்கள்-மேடுகள். மாதவி-குருக்கத்தி யென்னும் ஒரு வகைப் பூமரம். பூகம்-பாக்குமரம். உலாயது-உலாவியது.

**68.** தண்டலை-சோலையில். விளக்கம்-விளக்கு. முழவின்-மத்தளம் போல. எங்க-ஒலிக்க. எழினி-திரைச்சீலை. தேம்பிழி-இனிய தேன். மகரயாழ்-மகரவீணை. மருதம்-மருதமென்னும் அரசன். வீற்றிருத்தல்-கவலையின்றி இருத்தல்.

**69.** மேதி-எருமை. தார்-பூக்கள். செய்யாள்-சிவந்த நிறமுடைய திருமகள். தூர்-தாமரை முதலிய கொடிகளின் அடிப்பாகம். இப்பி-சிப்பி. போர்-வைக்கோற்போர். அன்னம்-அன்னப்பறவை. தோகை-மயில்.

**70.** அரிதலைப்பாளை-அரிந்த தலையையுடைய தென்னம்பாளைகள் முதலியன. தொடை-தொடுத்திருக்கும் தேனடையின் உறுப்புக்கள். இறால்-தேன் கூடு. இகந்து-கடந்து. வங்கம்-கப்பல்.

**71.** சுயம்வரம்-ஒரு மங்கை தானே கணவனை வரித்தல். காமர்-அழகு. காவி-கருங்குவளை. தளை-பூவின் இதழ்க்கட்டு. பூமடந்தை-பூமிதேவி. நாட்டம்-கண். சாகரம்-கடல். நாடு தகைமைத்து என்று இயைக்க.

**72.** மதிக்குடை-சந்திரனைப்போன்ற வெள்ளைக்குடை. தனிக்காத்தான் என்றார், சக்கரவர்த்தி யென்பது புலப்பட. மாதா-மகளிர். பருந்தும் கிளியும் ஒரு கூட்டில் வாழ என்றதனாலே நளனுடைய அரசாட்சியின் பெருமை கூறப்பட்டது. உலகு தனிக்காத்தான் எனக் கூட்டுக.

**73.** நீள் நிறம். தாள் நிறம். மாண் நிறத்தான்-நளன். அப்பு உள் தோன்றும்-நீரினிடத்தே தோன்றுகின்ற. முளரி-தாமரை மலர்.

**74.** பிழையாமல்-தவறாமல். முத்துத் தோன்றும் இடங்களுள் கரும்பும் ஒன்று. கங்கைநீர்நாடன்-நளன்.

**75.** மயிற்பறவைகளின் கூட்டம் மகளிர்கூட்டத்திற்கு உவமை. வல்லியர்கள்-பூங்கொடிபோன்ற மகளிர்.

**76**. மலங்கிற்று-மயங்கியது. கிளையை-உறவான பறவைகளை.

**77.** அஞ்சல்-அஞ்சாதே. வஞ்சியனையார்-வஞ்சிக்கொடிபோன்ற மகளிருடைய. விஞ்சியது-இரண்டு நடையுள் மிக்க நடையை. மாண-மாட்சிமைப்பட.

**78**. வெண்கவிகை-வெள்ளைக்குடை. திசைமுகந்த வெண் கவிகை என்றதனால் சக்கரவர்த்தி என்பதனைக் குறிப்பித்தார். இசை-கீர்த்தி. அணங்கு உன் தோளுக்கு இசைவாள்; இசைவாள்-பொருந்துபவள். அமை அந்தம் மெல் தோளி-மூங்கிலின் அழகைப்பெற்ற மென்மையான தோளையுடையவள்; அந்தம்-அழகு; இ: பெண்பால் விகுதி; இது விகுதி பிரித்துக் கூட்டலின் பாற்படும்.

**79.** எழு-கணையமரம். தொழு-கலப்பையின் உறுப்பு. உழுநர்-உழுகின்ற மள்ளர்கள். மாடு-பக்கம். இலங்கு இழை-விளங்குகின்ற ஆபரணத்தையுடைய தமயந்தி; எழுவாய். இலங்கிழை விதர்ப்பன் பெற்றதோர் கொம்பு.

**80.** நாற்குணம்-நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. நாற்படை-சதுரங்கப்படை. ஐம்புலனென்றது ஐம்பொறிகளாகிய மெய் முதலியவற்றை; புலன்: ஆகுபெயர். சிலம்பு-மகளிர் காலணி. பெண்மை அரசு ஆளும் எனக் கூட்டுக. அரசுக்கேற்ப நாற்படை முதலிய அங்கங்கள் இதிற் கூறப்பட்டுள்ளன.

**81.** நீ உரைத்த அன்னம் என்றது தமயந்தியை. ஆவி-உயிர். உன்ன-நினைக்க. என்ன அடைவு-என்ன சம்பந்தம். நடையில் வென்ற தமயந்திபிடத்தே.

**82.** இவ்வளவில்-இதற்குள். காணுங்கொல்-அன்னப்பறவை தமயந்தியைக் காணுமோ. காதல்-ஆசையை. உரையா-சொல்லிக்கொண்டு. அரசு விம்மினன்.

**83.** விடுத்த அன்னம். கன்னி-தமயந்தியின். நன்னுதல்-தமயந்தி. தன் ஆடல்-தன் விளையாட்டை. ஆடல் என்-நீ சொல்லுதல் யாது? ஆடல்-சொல்லுதல்.

**84.** மறம்-வீரம். நளனுக்குத் திருமாலே உவமையென்றது அன்னத்தை.

**85.** வாவி-தடாகம். அளித்தாய் ஆதி-கொடுத்தாயாவாய். பார்வேந்தன்-விதர்ப்பராசன். பதைத்து உரைத்தாள்.

**86.** அறைக என்று-ஒலிப்பிக்கவென்று. கமுக மரங்களில் கூந்தற் கமுகு என்ற ஒரு சாதி யுண்டு. விட்டு இயம்பினன் என இயைக்க.

**87.** செந்து-ஒருவகைப் பண். கந்து-கட்டுத்தறி. வேழம்-யானையை யுடைய. கடைத்தலைவாய்-வாயிலினிடத்தே. மாதை-தமயந்தியை. பூவேந்தர் கிளை குறித்து ஈண்டிற்று.

**88.** தெள்ளரி; அரி-இரேகை. தம்மனத்தே கொண்டு உறைந்தார்.

**89.** அன்னம் மொழிந்தது, அரசர்க்கு அறிவு அழிந்தது என முடிக்க.

**90.** கொற்றவனுக்கு-நளனுக்கு. காட்சியர்-அறிவையுடையவர்கள். அடையாத-புலவர், இரப்போர் முதலியோருக்கு அடைபடாத. வாயில் அகம் எய்தினர்.

**91.** குண்டினபுரம்-வீமனுடைய தலைநகரம். அரசர்க்கு முன்னே படைகள் செல்லுதல் இயல்பாதலின் கடற்றானை முன்னாகக் கண்டான் என்றனர். அடற்கு அமைந்த.

**92.** வச்சிரத்தால் ஈர்ந்தவன்-இந்திரன். மாலை-மணமாலையை. வானவர்-அக்கினி, வருணன், யமன் என்னும் மூவர். மகிழ்ந்து எழுந் தார்.

**93.** வேந்தை-நளனை. இசை-உடன்படுவாயாக. விண்ணவர் கோன் என்றான் எனக் கூட்டுக. மன்னவனும்-நளனும். ஓராது-அறியாமல்.

**94.** மாலையை எங்களில் யாருக்கேனும் சூட்ட. ஆகம்-மனம்; அறி வுக்கு ஆகுபெயர். நளன் தமயந்தியை விரும்பத்தகாத பொருளாக நினைத்தான்.

**95.** பணி-கட்டளை. திரிந்து-மாறுபட்டு. கன்னி-மணம் செய்யப் படாத பெண்; என்றது தமயந்தியை. பாவிற் குழல்போல்-நூற்பாவிற் செல்லுகின்ற நெய்தற் கருவியாகிய குழலைப்போல. கொள்கைத்து-கொள்கையை யுடையது. நெஞ்சு கொள்கைத்து.

**96.** ஆவது-என்னலாவதை. காமநீராழி-காமமாகிய கடலை. அடக் கும் ஆறு உள்ளத்தவன்-அடக்கும் வழியை யறிந்த மனத்தை உடைய வன். உள்ளத்தவன் என்னென்றான்.

**97.** விஞ்சை - வித்தை. விஞ்சைக்கிறைவனோ - வித்தியாதரனோ? தேவனோ-வேறு வகையான தேவனோ? ஊசற்குழை-ஊசல்போன்ற அசைவினையுடைய காது. வெள்ளவாள் என்றது நீர் சோருங் கண்ணை.

**98.** புரவலனை-புரவலனுக்கு; வேற்றுமை மயக்கம். தொடையில்-மாலையில். தும்பி-வண்டுகளிற் சிறந்ததாகிய ஒரு சாதி. உரைத்து, 'சூட்டுவாய்' என்றான்.

**99.** இயமரம்-ஒருவகை வாத்தியம். இனவளை-கூட்டமாகிய சங்கங்கள். வயம்-வெற்றி. குடையான்-நளன். தளர்ந்து நினைகென்றாள்.

**100.** அங்கி-நெருப்பு. அமுதநீர்-அமுதம்போன்ற நீர். அணி ஆடை-ஆபரணங்களும் ஆடைகளும். வேண்டினை-வேண்டினையோ. சங்கை-சந்தேகம். பெற்றாய் என்றதில், துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. ஆகண்டலன்-இந்திரன். தருமன்-யமன். மற்றோன்-அக்கினி. இச்செய்யுளின் முதலடியில் முற்றுமோனை வந்துளது.

**101.** நாண்-நாணம். வெள்ளம் போய்-வெள்ளம் ஒட்டப்பெற்று. பிள்ளைமீன் - இளமீன்களை. புள்-நாரை முதலிய பறவைகள். உயிர் சோர்ந்தாள்.

**102.** பகல்-பகற்காலத்தில். அன்றில்-அன்றிற் பறவைகள். அன்றிலென்றது-அன்றிற்பேட்டைக் குறித்தது. துணை-ஆண் அன்றில். வெற்பு-அஸ்தமனகிரி; சூரியன் அஸ்தமனகிரியில் மறைவானென்பது கவிமரபு.

**103.** கைம்மலர் முகிழ்த்தது என்றது சந்தியாவந்தனத்தில் செய்யப்படும் அஞ்சலியைக் குறித்தது. குமுதம் முகிழ்ப்ப-குமுதம் குவிய. தேம் கோதையாள்-வாசனையையுடைய மாலையையணிந்த தமயந்தி. பொழுது புலர்ந்தது-பொழுது விடிந்தது.

**104.** முற்றியபின்-முடிந்தபின். வரைசெறிந்த-மலையை யொத்த. வால்-வெண்மை.

**105.** மன்றல்-நறுமணம். கன்று-எருமைக்கன்று. நீலம்-கருங்குவளை மலர். சேய் என்றது நளனை. சேய் வந்திருந்தான்.

**106.** பாவை-தமயந்தி. போன்று புக்காள் என்க.

**107.** இயலணங்கு-கலைமகள். கலைமகள் தமயந்தியின் தோழியாக வந்தாள் என்று முதனூல் கூறும். அரசர்களை இயலணங்கு தமயந்திக்குக் காட்டினாள்.

**108.** காவலரை-அரசர்களை. ஈரிருவர்-இந்திரன் முதலிய நால்வர். வரைந்த-கொண்ட. காணநின்று-கண்டுநின்று. நளன் உருக்கொண்டு நால்வர் இருந்ததைக் கண்ட தமயந்தியின் மனம் ஊசலாடியது.

**109.** மரபு-குலம். கடிமாலை-மணமாலை. சொன்னவனை-சொன்னவனுக்கு. தெய்வமே அருள் என்று ஒரு சொல் வருவிக்க.

**110.** காசினி-பூமி. தாமரை விரும்பும் நன்னுதலே யன்னாள்-திரு மகளைப்போன்ற தமயந்தி. கண்ணிமைத்தல் முதலியன மானிடர்க்குரிய இலக்கணங்கள்.

**111.** வெள்கி-வெட்கமுற்று. சுளிக்க-வெறுப்ப. வன்மாலே-வலிய மயக்கத்தை. பொன்-தமயந்தி. வேந்தை-வேந்துக்கு; உருபு மயக்கம்.

**112.** வயம்-வெற்றி. தாரை-கூர்மை; இது வேலுக்கு அடை. போது முகங்கள் வெளுத்தன என இயைக்க.

**113.** மறுகு-வீதி. மடநாகு-இளம்பசு. மழவிடை-இளங்காளை.

**114** கணி-முகூர்த்தம் பார்க்கும் சோதிடன். கடிமணம்-விளக்கத்தையுடைய கலியாணம். செய்ய-செய்யா நிற்க. மல் தேவர்-வளப்பத்தையுடைய தேவரும்; உம்மை தொக்குநின்றது.

**115.** குசேலர்-சிதைந்த உடையை உடையவர். இவர் இயற்பெயர் சுதாமா என்பது. உபாக்கியானம்-கிளைக்கதை.

முன்னும்-கருதுகின்ற. தோட்கோப்பு-வழியுணவிற்காகத் தோளில் கோத்து வைக்கப்படும் கட்டுச்சோறு. தன்னமும்-சிறிதும். பதிகர்-வழிச் செல்வோர். காவதம்-காதம். கவர்வழி-பிளவுபட்ட வழியை. அவண் நின்றும்-அவ்விடத்தில் நின்றும்.

**116.** முதுவேனில்-ஆனி, ஆடி மாதங்கள். அறல்-நீர்.

**117.** மனைக்கு-மனைவிக்கு. வருவல்-வருவேன். எழீஇ-எழுந்து. இறுத்தான்-தங்கினன்.

**118.** நீலவண்ணனுக்கு-கண்ணபிரானுக்கு. செய்ய-சிவந்த. மாதவத்தோரும் கமலனும் நண்ணரும். ஆசி-ஆசிமொழிகளை.

**119.** தரங்கம்-அலை. நாப்பண்-நடு. நாகம் + அணை = நாகணை; ஆதிசேஷனாகிய படுக்கை. அல்லார்க்கு-அடியவர் அல்லாதவருக்கு. முக்குற்றம்-காமம், வெகுளி, மயக்கம்.

**120.** வாசவன்-இந்திரன். மஞ்சு இனம்-மேகக்கூட்டம். நச்சு-விரும்புகின்ற. போகுயர்-மிக உயர்ந்த. குவடு-மலையுச்சி. நாகம்-மலை; இங்கே கோவர்த்தன கிரி. வருகை-வந்திருத்தலை.

**121.** நோன்பு உழந்த-விரதத்தால் உடல்வருந்திய. வார்-நெடிய. ஏர்-அழகு. கோடும்-கொள்வோம்.

**122.** உவகை-மகிழ்ச்சி. அரும்பாநின்றது-தோற்றுகின்றது. ஓவாது-ஒழியாமல். புளகம்-மயிர்க்கூச்சு. நின்ற: அஃறிணைப் பன்மை. நா துடிதுடிக்கின்றது. இன்னே-இப்பொழுதே. விண்ணப்பம்-தெரிவித்தல்.

**123.** நிருபனுக்கு-அரசனுகிய கண்ணபிரானுக்கு. யாமோ வல்லம்-யாமோ வல்லமையுடையேம்; வல்லமை இல்லேமென்றபடி. நன்னர்-நன்மை. நீரார்-தன்மையையுடையவர்கள். இச்செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி.

**124.** உவகை மிக்கு உய்ப்ப. அங்கைப் போதகம்-கையாகிய தாமரை மலரின் இடத்தை; அகம் - இடம். அகம் + கை = அங்கை; அகம்-உள்ளிடம். ஐயன் -குசேலன்.

**125.** ஐயன்-கண்ணன். பூங்கதிர்-பொலிவுபொருந்திய சூரியனது. பொற்ற-பொலிவுபெற்ற. தீங்கதிர்-சந்திரன். அரக்காம்பல்-செவ்வாம்பல். மை வரவு-மேகத்தின் வரவை. தழை-பீலி. மஞ்ஞை-மயில்.

**126.** தாய் என்றது தாய்ப்பசுவை. புனிற்றிளங்கன்று-ஈன்ற அணிமையையுடைய கன்று. செம்மனம்-நல்ல மனம். அறல்நசை-தாகம்; அறல்-நீர். சேக்கை-ஆசனம்.

**127.** சேமவைப்பு-பாதுகாப்பையுடைய திரவியம்; புதையல். வெப்பு-வெம்மை. சரிந்த பற்றினன்-பற்று நீங்கினவன்.

**128.** எண் அனைக்கு-அஷ்டலக்ஷ்மிகளுக்கும்; யாவராலும் எண்ணப்படுகின்ற உலகமாதாவாகிய திருமகட்கு என்றுமாம். திகிரியை வலத்தும் சங்கத்தை இடத்தும் கொண்டானை. வாசுதேவன்-வசுதேவரின் திருக்குமாரன். கள் நனை துளவத்தாமம்-கள்ளால் நனையப்பெற்ற துளவமாலை.

**129.** பூத்து - உண்டாகப்பெற்று. கண்ணுற்று - கண்டு. அணை - கரையை. நீத்தம்-வெள்ளம்.

**130.** திலகம்-நெற்றியிலிடப்பட்ட பொட்டு. ஐயன்-கண்ணன் நிலவு-விளங்குகின்ற. நிரம்புற-நிரம்ப. குலம்-மேன்மை. வாய்மை-சத்தியம்.

**131.** பூன்ற-நிறைந்த. சந்ததமும் - எப்பொழுதும். அநேகம்-பல பயன்களை. தொன்னட்பு-பழைய நட்பு. சிறந்தனவோ: ஓ, வினா.

**132.** மனைக்கிழத்தி-மனைவி; கிழமை-உரிமை. மன்னுடைய-நிலைபெறுதலையுடைய. எகாரங்கள், வினா. இச்செய்யுள் மனைத்தக்க மாண்புடையாளென்னும் திருக்குறளின் பொருளைத் தழுவிவந்தது.

**133.** குதலை-எழுத்து வடிவுபெற்றுத் தோற்றாத இளஞ்சொல். அவையோர்-சபையிலுள்ள கல்விமான்கள். சிங்கல்-குறைதல்.

**134.** நானம்-ஸ்நாநம். மெய் திடமாகி-உடம்பு வலிமையுடையதாகி. மானம்-பெருமை; பிரமாணமுமாம்.

**135.** நென்னல் வரைக்கும்-நேற்றுவரை. ஏர் - அழகு.

**136.** பந்தனை-பந்தம். என் கொண்டு-என்ன பொருளைக்கொண்டு. இன்னே-இப்பொழுதே. பக்கணம்-பக்ஷணம். தெரிவு அரு-தெரிதற்கரிய.

**137.** வாளா-சும்மா. எற்கன்றி-எனக்கல்லாமல்.

**138.** இன் பால் உண்பான்பால்-இனிய பாலையுண்பவனிடத்தே. அவற்கொடை-அவலைக்கொடுத்தல்.

**139.** பொதி-அவலையுள்ளே வைத்துப் பொதிந்த துணிமுடிப்பு. ஐயன்-கண்ணன். போகட்டுக்கொண்டான்-போட்டுக்கொண்டான்.

**140.** சுவைத்து ஈது-சுவையை யுடையது இது. இல்லில்-வீட்டில். பழைது-பழையது. இவ்வளத்ததோ-இவ்வளவு சுவையை யுடையதோ. உறி அளை-உறியினிடத்தேயுள்ள தயிரை.

**141.** முன்னும்-நினைக்கப்படுகிற. அவல்-அவலுள். முட்டை: பொரி போல் உருண்டை வடிவமாயிருப்பது. அங்கை = அகங்கை-உள்ளங்கை. கொன்னும்-பெருமையைத் தருகிற. குளமும்-வெல்லமும்.

**142.** கிளந்திருப்பது-சொல்லியிருத்தல்; நான் கிளந்திருப்பது அன்று. ஏடு - பூவிதழ். தொங்கல்-மாலை.

**143.** பிறங்கிற்று-விளங்கியது. ஆல், ஓ: அசைநிலைகள்.

**144.** இறும்பூது-ஆச்சரியம்.

**145.** அழல்திசை-அக்கினி திக்கு; தென்கிழக்கு மூலை. அடவி-காடு. கோ-அரசன். மறக்குடி-மறச்சாதியாருடைய குலம். குரவு-நறுமணம். குஞ்சரம்-யானை.

**146.** தகர் இருமருப்பு-ஆட்டின் இரண்டு கொம்புகள். சாழ்ப்புற-வெட்கமடைய. திருகுரோமம்-முறுக்கிய மீசை. மயிர்வினைஞர்-நாவிதர். கருவி-கத்தி. சிகழிகை-மயிர்முடி. நிகர் எய்தா-நிகராகாத. அகல் நிறத்து-அகன்ற மார்பில். முள் நிவந்தென-முள்மேலே உயர்ந்து தோன்றியதென்று சொல்லும்படி. புலிப்போத்து-ஆண் புலி.

**147.** ஞமலி-நாய். சுரையிரும்பு-கிழங்கெடுத்தற்குப் பூமியைத் தோண்டுதற்குரிய கருவி; சுரை-உள் துளை. வனைய-அலங்கரிக்கும்படி. நீள்கழி-நீண்ட தடி. எழீஇ-எழுந்து. நிலவு அடி-விளங்குகின்ற வேர்ப்பக்கத்தில். சினைய-கிளைகளையுடைய. அனைத்தும் செறிந்தது.

**148.** வீரசேகரப் பெருமான், வீரன் நற்கதியை அடையும்படி கருணையைச் செலுத்தினார்.

வன்மீகம்-புற்று. அம்பிகாபதி-உமாதேவியின் தலைவனாகிய பரம சிவன். கிராதர்-வேடர்கள். தென்னவன்-பாண்டியன். இலதை-கொடி.

**149.** கொடிபடு-கொடி தோன்றுதற்குக் காரணமான. தேடுபு-தேடிக்கொண்டு. வடி-தேன். படி-பூமி. வள்ளி-ஒருவகைக் கொடி. புண்ணியன்-சிவலிங்கப்பெருமான். காணான்-காணாதாகி.

**150.** ஊகம்-ஒருவகை அனுமானம். நிகர் கொடி-நிகர்த்த கொடியை. யான் கொடியைக் காணேன். முறி - தளிர்.

**151.** பெயர்ப்பான்-பெயர்க்கும்பொருட்டு. இரும்பு ஊன்ற-சுரை இரும்புக்கருவியை ஊன்ற. நெய்த்தோர் எழுந்தது-இரத்தம் தோன்றியது.

**152.** சோமகன்-அரசன். பஃறாம்=பல்தாம்-பலமுறை. உழக்கும்-வருந்தும். மோக்கும் முதலியன முற்றுக்கள். வருடும்-தடவும். மிக்கு அலறும்.

**153.** நாய்: எழுவாய். அனர்-வருத்தம். உவளும்-சுமதியும். நாயகன் வரல்-தலைவனின் வரவு. சுணங்கன் எகற்கு-நாய்மட்டும் வருதற்கு. எது என்னோ-காரணம் என்ன?

**154.** அது-அந்த நாயானது. பினர் = பின்னர்-பின்பு. உற-மிக.

**155.** வயிறு அலைத்து-வயிற்றை அடித்துக்கொண்டு. உயிர் உண்டுகொல் என இயைக்க. விரல்-விரலை. உயிர்ப்பு-மூச்சு. விளைக்கையை நாசியில் வைத்தது மூச்சுவருகின்றதாவென்பதை அறிதற்கு.

**156.** திருகு-மாறுபாடு. புற்றடி-புற்றின் அடியில். இறும்பூது-ஆச்சரியம். இவண் உளது-இவ்விடத்தே உண்டு.

**157.** மலக்கிழங்கு-ஆணவமலமாகிய கிழங்கை. பொன்னுலகு-தேவலோகம். குலிசத்தண்ணல்-இந்திரன்; குலிசம்-வச்சிராயுதம். வரையை-கோவர்த்தனகிரியை. இனும் = இன்னும். முதலை-சிவபிரானை. முதலைக் கண்டான்.

**158.** ஆரருள்-பெறுதற்கரிய கருணை. சேய்-மார்க்கண்டேயரை. இவர்ந்து-விரும்பி.

**159.** ஆயினும்-ஆராய்ந்தாலும். காயினும்-கோபித்தாலும். ஆர்தர-நிறைய. உமை-அந்த ஸ்தலத்துள்ள அம்பிகையின் திருநாமம்.

**160.** கன்றுதல்-வாடுதல்; உள்ளத்துக்கு அடை. காறல் = கால்தல்-கக்குதல். இன்னே-இப்பொழுதே. கறைமுற்று-இரத்தம் முழுவதையும்.

**161.** இரதி-மன்மதனுடைய மனைவி. கொழுநனை-கணவனாகிய மன்மதனை. சரணம்-அடைக்கலம். என் தவன்-என்னுடைய கணவன்.

**162.** ஒன்றது-ஒன்றை; அது பகுதிப்பொருள் விகுதி. கண் + தெரிந்து.

**163.** இங்ஙன் = இங்ஙனம்-இங்கே. செந்நீர் மேயது-இரத்தம் மேவியது.

**164.** நோக்கு-பார்ப்பாயாக. பங்கர்: எழுவாய். அந்தோ-ஐயோ. அண்ணின்-அணுகினால். அறவனார்-சிவபிரான்.

**165.** ஆள்தர-அடிமைகொள்ள. சடிலம்-சடை. முன்னை ஊழ் கொல்லோ-பழவினையோ. முடிந்திலேன்-யான் இறவாது போயினேன்.

**166.** புண்ணியர் அசித்திடுவார்; அசித்தல்-அவமதித்துச் சிரித்தல். நோன்றிருந்தார்-பொறுத்திருந்தார். உயலும் = உய்யலும்-பிழைத்தலும்.

**167.** நெக்கு-நெகிழ்ந்து. கனம்-மேகம். கடுக-விரைய. முன்னர் இறைவனார் கடுகத்தோன்றி. நடையினாள்-சுமதி.

**168.** பதுமத்தோன்-தாமரைப் பூவிலுள்ள பிரமதேவன். கருவி-சுரையிரும்பு. விரைத்த-விரைந்த; எதுகை பற்றி வலித்து வந்தது.

**169.** வீரைத்தரு-வீரை மரம். ஒருவு அற-நீங்குதல் அற. சேகரம்-சிலாக்கியம். கரு அஞர்-பிறவித்துன்பத்தை. புத்தி-போகம்.

**170.** கவலல்-கவலைப்படாதே. பூசை-பூனை. அரிமருத்தன பாண்டியரால் பிரம்படித் தழும்பும், அருச்சுனனால் வில்லடித் தழும்பும், சாக்கிய நாயனாரால் கல்லடித்தழும்பும், கண்ணப்ப நாயனாரால் செருப்படித்தழும்பும் சிவபெருமானுக்கு உளவாயின. வாட்போக்கி யென்னும் தலத்தில் ஆரியராசனால் வாள்வெட்டுத்தழும்பும், தென்றிருமுல்லைவாயிலில் ஒரு சோழராசனுடைய குதிரைக்காலாற் குளம்பின் தழும்பும் சிவபெருமான் திருவடியில் உளவாயினவென்று அவ்வத்தலபுராணங்கள் கூறும். அத்தழும்புகள் இன்றும் காணப்படும். சிவபெருமான் திருமேனியில் பூனைவாய்த் தழும்புள்ள தலம் குன்றமருதூரென்பது; இப்பொழுது இது வெண்ணெயீச்சுரர்கோயிலென வழங்குகின்றது; இவ்வூர் மாயூரத்துக்கு வடகிழக்கில் மூன்று நாழிகை வழித்தூரத்திலுள்ளது.

**171.** செருத்தல்-மடி. தேனு-காமதேனு. குழக்கன்று-இளங்கன்று. குளப்படி-குளம்பையுடைய அடி. சிவபெருமான் காமதேனுவின் கன்றினுடைய குளம்படியின் சுவட்டைத் தாங்கிய தலம் திருப்பேரூர். கதை-கதாயுதம். கதையடிச் சுவடு தாங்கிய வரலாறு விளங்கவில்லை.

**172.** எத்துபு-துதித்து. வருதி-வருவாய். கதி-முத்தியை.

**173.** எம் நகரங்கள். கரங்கள்-கப்பத்திரவியங்கள். சூடு கரங்கள்-சூடிய கைகள்.

**174.** ஆடல் அயம்-நாட்டியக் குதிரை. ஆதிமுடி-தொன்றுதொட்டு அணிந்து வந்த கிரீடம். பெட்டகம்-பெட்டி. நித்திலம்-முத்து. ஏக வடம்-ஓராபரணம்.

**175.** மகரக்குழை-சுறுமீன் வடிவுள்ள குண்டலம். புட்பகம்-ஒரு வகை வாகனம். உரிமை அரிவையர்-பட்டத்தேவியர். பட்டம்-நெற்றியிற் சூடிக்கொள்ளும் ஒருவகை ஆபரணம்.

**176.** களிறும் அடுக்கும் என இயைக்க. மாறி-கோபமாறி.

**177.** ஒழிய நின்றவரும்-திறை கொடாதவரும்.

**178.** அடையவந்து-முற்றும் வந்து. வடகலிங்கர்பதி-கலிங்க தேசத்து மன்னன்; அனந்த பத்மன் (கலிங்கத்துப் பாணி, 312-ஆம் தாழிசையைப் பார்க்க.) இரண்டு விசை-இரண்டு முறை.

**179.** குன்று அரணம்-மலையாகிய அரணம். அவன் எளியனுயினும் அவனுக்குரிய மலையரண்கள் வலியன. அளி அலம்பு மதம் மலைகள்-வண்டுகள் ஒளிக்கின்ற மதத்தையுடைய யானைகள்; யானைமதம் மணமுள்ளதாதலின் வண்டுகள் அதில் மொய்ப்பனவாயின.

**180.** இறை-அரசனுகிய முதற் குலோத்துங்க சோழன். மொழிந்த அளவில்: தொகுத்தல். எழுகலிங்கப்-எழு பிரிவினையுடைய கலிங்க தேசம். படி மரபு-பூமி மரபு; வேளாளர் பூமியின் புத்திரரென்று கூறப் படுவர். வண்டைநகர்-சோழ நாட்டுள்ள வண்டாழஞ்சேரி யென்னும் ஊர். அதனரசன் கருணுகரன்; அரசனென்றது, உபசாரமொழி.

**181.** எனக்கு விடை தா என ஒரு சொல் வருவிக்க. புலியுயர்த்தவன்-புலிக்கொடியை யுயர்த்திய சோழவரசன்.

**182.** கணபணப்பணி-கூட்டமாகிய படங்களையுடைய ஆதிசேஷன். படை நினைப்பு-சேனைகளின் நினைவு. வகுக்க-சொல்ல.

**183.** அகிலம்-எல்லாம். அடைய-முற்றும். மூரி-பெருமை.

**184.** நிற்பிடம் = நிற்பு இடம்-நிற்றற்குரிய இடம்.

**186.** படலம்-கூட்டம்.

**187.** பருகி-உண்டு. வறந்தன-வறண்டுபோயின.

**188.** ஓடை-யானையின் நெற்றிப் பட்டம். ஓடைவரைகள்-யானைகள். கடதாரை-மததாரை. அயங்கள்-குதிரைகள்.

189. தருமி-ஓர் ஆதிசைவப் பிரமசாரியின் பெயர். வாழ்க்கை வேண்டி-இல் வாழ்க்கையை விரும்பி. கிழி-பாண்டியன் கட்டிய பொன் முடிப்பை. 'கொங்குதேர் வாழ்க்கை': சொக்கநாதக் கடவுள் எழுதிக் கொடுத்த பாட்டின் முதற் குறிப்பு (குறுந்தொகை, 2). கீரன்-நக்கீரரென்னும் சங்கப்புலவர்.

190. தர்க்கித்த-தர்க்கஞ்செய்த; மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணமில்லை யென்று கீரர் தர்க்கித்தனர்.

191. பாணன்-பாணபத்திரர். சேரலன்-சேரமான் பெருமாள் நாயனார். சீட்டுக்கவி - 'மதிமலிபுரிசை' என்னும் முதற் குறிப்பை யுடைய அகவல். பாட்டியலில்-அகப்பொருளிலக்கணங்களில்.

192. நா திரமா-நாவின்கண் நிலையாக. பொருள்-அகப்பொருளிலக்கணம். அறுபது சூத்திரங்களையுடையது இறையனார் அகப்பொருளென்பது. இவை மாத்திரமோ என ஒரு சொல் வருவிக்க.

193. உன்னென்றது தமிழ்மொழியை. விளையாட்டு-விளையாடியது. வடமதுரை-மதுரையின் வடபாகத்திலுள்ள ஒரு கோயிலுக்கும் அதைச் சேர்ந்த இடத்திற்கும் பெயர். இங்கே குறிக்கப்பட்ட கதை, திருவிளையாடலிலுள்ள இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலத்தால் அறியப்படும். மன்னவன்-பாண்டியன்.

194. காரியார், நாரியார் என்றவர்கள் இரண்டு புலவர்கள். பகிர-பிரித்துக்கொடுக்க. வாரி இல்லா-நீரில்லாத. நார்-அன்பு. இச்சரிதம் திருவாலவாயுடையார் திருவிளையாடலில், காரியார் நாரியார் பாப்பகுந்த திருவிளையாடலென்னும் பகுதியிற் காணப்படும்.

195. பத்திரன்-பாணபத்திரர். இச்சரிதம் விறகு விற்ற திருவிளையாடலால் அறியப்படும்.

196. இதிற் கூறப்பட்ட சரித்திரம் ஷை நூல் பலகையிட்ட படலத்தால் அறியப்படும். எதிரா நேர்ந்தவள்-பாணபத்திரருடைய மனைவியோடு இசைவாது செய்ய இலங்கையிலிருந்து வந்த ஒரு விறலி. இதனை ஷை நூலிலுள்ள இசைவாது வென்ற படலத்தால் அறிக.

198. அகிலலோகத்தினுக்கும்-எல்லா உலகத்தினுக்கும். தன் இச்சையின் வழியே செல்லலாகாதென்பது கருத்து.

199. கருமம்-காரியம். மனத்தாபம்-மனஸ்தாபம். நகுலன்-கீரிப்பிள்ளை. தன் பிள்ளையைக் கொன்றுவிட்டதென்றெண்ணி ஒரு பார்ப்பனி தான் வளர்த்த ஒரு கீரிப்பிள்ளையைக் கொன்றனள். இச்சரிதம்

சிலப்பதிகாரம், அடைக்கலக்காதையில் 54-ஆம் அடி முதலியவற்றால் அறியலாகும்.

**200.** நாவின் நுனி. நயம்-இனியசொல்.

**201.** மருப்பு-கொம்பு. கவரிமான்மயிர்-சாமரை. வரி உகிர்-புலியின் நகம். மானே: மகடூஉ முன்னிலை.

**202.** ஈசன்-சிவனுக்கும் திருமாலுக்கும் பொதுப்பெயர். நேசர்-அன்பையுடைய அடியார். தேசு-ஒளி. செங்கதிர்-சூரியன். நிற்க அரிது.

**203.** இன்னல்-துன்பம்.

**204.** தென்புலத்தார்-பிதிரர். விருந்து-புதியராய் வந்தவர். ஒக்கல்-சுற்றத்தார். 'தென்புலத்தார் தெய்வம்' என்னும் திருக்குறளின் கருத்து இதில் ஒருவாறு அமைந்திருக்கின்றது.

**205.** வினைவேறுபட்டவர்-தொழில் வேறுபட்டவர். பொருள்-செயல். மேலவர்தங்கண்-மேலவரிடத்து.

**206.** தீ அனுங்க-தீயால் அனுங்க; அனுங்க-குறைய. நூலின் நெறி உற்றோர்: எழுவாய். புகல-விரும்ப. மதித்து மாற்றுவர் என்க.

**207.** உத்தமர்க்குப் பனையும், மத்திமர்க்குத் தென்னையும், அதமர்க்குப் பாக்குமரமும் வாழையும் உவமைகள்.

**208.** மாடு-எருது; செல்வமுமாம். வாழ்வு-இல்வாழ்க்கை. நாடில்லான்-நாடில்லாத அரசன். விழல்-ஒருவகைப் புல். பயனற்றவை என்றபடி.

**209.** உப்புக்கு-உப்பு வாங்குதற்பொருட்டு. பிளவு-பிளவுபட்ட பாக்கு.

**210.** நின் ஆட்டுக்கு-உன் நடனத்திற்கு; ஆடாகிய மிருகம் என்பது மற்றொரு பொருள். புலி-வியாக்கிரபாதர்.

**211.** முட்டையாது-முள் தையாது. எல்லை-ஒளியையுடைய; ஐ: சாரியை. மார்த்தாண்டன்-சூரியன்.

**212.** தெறும் கிரணம்-வருத்துகின்ற வெயில்.

**213.** எருவை-கழுகு; என்றது சடாயுவை. பானுசேய்-சுக்கிரீவன். வீடல்-இறத்தல்.

**214.** சிவபிரானுக்குச் செல்லுங்கால் பிரமதேவராகிய அன்னத்தால் காணப்பெறாமலிருந்ததும், அவர் பிரமதேவருடைய தலையோட்டைக் கைக்கொண்டிருந்ததும், பாதிச் சந்திரனைத் தலையிலே முடித்துக்கொண்

டிருந்ததும், முறுக்கிய சடையைப் பெற்றிருந்ததும் விபூதியைத் தரித் திருந்ததும் கொள்ளப்படும்.

புலவனைப்பற்றிக் கூறுங்கால்: அன்னம்-சோறு. சிரங்கைக் கொண்டு-சிரங்குகளைக்கொண்டு. அரைச்சோமன்-இடையிற் கட்டும் ஆடை; மேலாடையில்லை யென்பதைக் குறிப்பித்தபடி. எண்ணெய் இல்லாமையால் தலைமயிர் முறுக்குண்டது என்று பொருள் கொள்க.

**215.** இச்செய்யுள், வாணபூபதியின்பாற் சென்று பரிசு பெற்று வரும் பாணனொருவனைக் கண்டு பரிசுபெறுதற்கு வரும் மற்றொரு பாணன் வினவுதலும் அதற்குப் பரிசுபெற்ற பாணன் விடையளித்தலு மாக அமைக்கப் பெற்றுள்ளது.

வாரணத்தொகுதி-யானைக்கூட்டம். திறைகள்-கப்பங்கள். 'புகல்' என்ற வரையிலுள்ளது வந்த ஏழைப் பாணனது வினா; பின்வருவன வாணன்பால் பரிசுபெற்றுவரும் பாணன் விடை.

மகதேசன்-மகத நாட்டிற்குத் தலைவன்; மகதநாடு என்பது தமிழ் நாட்டிலுள்ள நடு நாட்டை. ஆறை-ஆற்றூர். ஏகும்-செல்வீராக. ஆர்-ஆத்திப்பூ. வேம்பு-வேப்பம்பூ. இம் மாலைகளால் முறையே அவற்றை யுடைய சோழன், பாண்டியன், சேரன் என்பவர்களைச் சுட்டினர். அரசு-மற்ற அரசர்களை; அரசமரம்; சிலேடை. அத்தி-யானை, அத்தி யென்னும் மரம்; சிலேடை.



# விஞக்கள்

## செய்யுட்பகுதி

### I

1. தலைவரின் அலகிலா விளையாட்டுக்கள் யாவை?

2. திங்கள், ஞாயிறு, மழை இவை போற்றப்படுதற்குரிய காரணங்கள் யாவை?

3. மதிமுகிழ் முடித்த வேணி இறைவர்; தாமரைக்கோயில் அவள்:—இவை யார் யாரைக் குறிக்கும்?

### II

1. சங்கநூல்கள் என்பன யாவை? அவற்றுள் உங்கட்குப் பாடமாயமைந்துள்ளனவற்றைக் குறிக்க.

2. பண்டைக்காலத்தில் ஒரு மகனுக்குரிய பலதுறைப்பட்ட பயிற்சிகளும் யார் யாரால் எவ்வாறு கொடுக்கப்பட்டு வந்தன?

3. கரளைக்குக் கடன்; வேந்தர்க்குக் கடன்—இவை யாவை?

4. கல்வியின் பெருமைகள் யாவை? அதன் பயன் யாது?

5. உயிர்க்கு ஊறுபாடில்லாமைக்கு வழி யாது?

6. மகன் பெற்றோர்க்குச் செய்யக்கூடிய நன்றி யாது?

7. பெட்டவை செய்யார்; ஆன்றவிந்த சான்றோர்; மம்மாறுக்கும் மருந்து—இவற்றிற்குப் பொருள் கூறுக.

8. கொடையின் பெருமையைப்பற்றி நாலடியார் கூறுவது யாது?

### III

1. கானல்வரி, அம்மானைவரி, அறவுரை—விளக்குக.

2. காவிரியின் வருணனை சிலப்பதிகாரப் பகுதியில் எவ்வாறு காணப்பட்டிருக்கிறது?

3. ஓங்கரணம் காத்தது; உடம்பரிந்த கொற்றம்; வேங்கை யொற்றினது: இவற்றைக் குறிக்கும் வரலாறுகளைக் குறிக்க.

4. சோழர்களின் பழம் பெருமைகளைக் குறித்து அம்மானையாடும் பெண்கள் என்னென்ன கூறினர்?

5. வரந்தரு காதையிலமைந்த அறவுரைகளை வசனத்திலமைத்துக் காட்டுக.

6. கூடா நட்பினரிடம் படையொடுங்கும் இடங்கள் யாவை?

7. அரசர்களுக்கு உரிய உபாயங்கள் யாவை?

8. கல்வி, பொருள் இவற்ருலுண்டாகும் பயன்களைப்பற்றி ஜீவக சிந்தாமணி ஆசிரியர் கூறுவன யாவை?

## IV

1. திருமுறைகள் எத்தனை யாகும்? தேவாரம், திருவாசகம் இவை எந்த எந்தத் திருமுறைகளில் அடங்கும்?

2. திருவையாற்றின் சோலைவனம் எவ்வாறிருந்தது?

3. சுந்தரர் சிவபெருமானின் தன்மைகளை எவ்வாறு உரைக்கின்ருர்?

4. ஆர்கொலோ சதுரர்? இங்ஙனம் கேட்டது என்?

5. மாணிக்கவாசகர் ஆட்கொள்ளப்பட்ட வரலாறு யாது?

## V

1. இச்சுவை தவிர—சுவை யாது?

2. பிறவிவேண்டேனென ஆழ்வார் கூறக் காரணமென்ன?

3. பெருமாள் பள்ளிகொண்டு விளங்குவதை ஆழ்வார் எவ்வாறு வருணிக்கின்ருர்?

4. அவர்கள் தாம் புலையர்போலும்—சந்தர்ப்பத்துடன் விளக்குக.

## VI

### 1

1. கம்பர் இராமாயணம் பாடக் காரணம் என்ன?

2. அயோத்தியின் வயல்வளம் எத்தகையது?

3. சரயுநதி துறைதொறும் பரந்த சூழ்ச்சிக்கு உவமை யாது?

4. மருதநிலத்து நீரிற் காணப்படும் பொருள்கள் யாவை?

5. மீன் குடிக்கும் தேன்கள் எங்கிருந்து கிடைப்பன?

### 2

1. பெண்மையரசு ஆளும் ஆட்சியை அன்னப்பறவை எவ்வாறு வருணித்தது?

2. தூது சென்று திரும்பிய நளனுக்குத் தேவர் கொடுத்த வரங்கள் யாவை?

3. நளவெண்பாவில் விடியற்காலம் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது?

4. மக்களுக்கும் தேவர்க்கும் உள்ள வேற்றுமைகளைப்பற்றித் தமயந்தி அறிந்தவை யாவை?

5. நளவெண்பாவை ஆக்கியோரும் ஆக்குவித்தோரும் யாவர்?

### 3

1. குசேலோபாக்கியானத்தின் ஆசிரியர் யார்?

2. நாகமேந்தித் தடுத்தருளும் அச்சுதன்—இதனிலமைந்த வரலாறு யாது?

3. குசேலர் வரவைக் கேட்ட கண்ணன் நிலை எவ்வாறு இருந்தது?

4. கண்ணன் குசேலரின் யோகக்ஷேமங்களை எவ்வாறு விசாரித்தார்?

5. அவரின் பெருமைகளைக் கண்ணன் எவ்வாறு புகழ்ந்தான்?

## VII

1. வீரன் மூர்ச்சித்ததைக் கண்ட ஞமலி செய்தவை யாவை?

2. சுமதி தன் கணவனைப் பெறவேண்டுமென்று எவ்வாறு பிரார்த்தித்தாள்?

3. சிவபெருமான் பெற்ற பல தழும்புகளையும் கூறி அவற்றில் மூன்றினைப் பெற்ற இடங்களையும் சொல்லுக.

## VIII

### 1

1. பரணி என்பதன் பொருள் யாது?

2. கலிங்கத்துப் போரில் கலந்துகொண்ட மன்னர்கள் யாவர்?

3. கலிங்கத்தின் மேற்சென்ற படைகளைக் கண்டோர் நினைத்தவை யாவை?

### 2

1. 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற தொடக்கத்தையுடைய செய்யுளின் பொருள் யாது?

2. 'வடமதுரைக் கந்நேரம் உன்பின்னே யார் வந்தார்?'—இதனிலமைந்த வரலாறு யாது?

3. சிவபெருமான் தமிழுக்காகச் செய்த திருவிளையாடல்களை யமைத்து ஒரு கட்டுரை வரைக.

## IX

1. உண்டல் இனிதாவது எப்பொழுது?

2. கிரணம் தங்குமணனிற் கரிதேதான்—இதனால் அறியப்படுவ தென்ன?

3. மேலோர், கீழோர் இவர்களின் தன்மைகள் யாவை?

## X

1. விழலாவன யாவை?

2. இவ்வாட்டைவிட்டுப் போமோ சொல்லாயப்புலி—பொருளை விளக்குக.

3. சென்னபுரி வந்தவர் சிவனாயினது எவ்வாறு?

4. வாணபூபதி மூவேந்தரினும் சிறந்தவன் என்பது எவ்வாறு புலனாகும்?

## உரைநடைப்பகுதி

### 1

1. 'சிவசிதம்பரம்' என்று மாணுக்கன் கூறியதன் பொருள் யாது?

2. 'அவதானம்' செய்து காட்டுதல் என்றால் என்ன?

3. கவி வீரராகவ முதலியாரால் இயற்றப்பட்ட நூல்கள் யாவை?

### 2

1. இளமையின் சிறப்பைக்குறிக்கும் உதாரணங்கள் யாவை?

2. கல்வியின் மூன்று பிரிவுகள் யாவை?

3. மனக்கல்வியைக் கற்கவேண்டிய முறைகள் யாவை?

### 3

1. கண்ணன் குழல் ஊதிய சிறப்பைக் கலம்பக ஆசிரியர் கூறுவது எங்ஙனம்?

2. சங்கீதம் மனத்திற்கு ஆறுதலைத்தரும் என்பதற்குச் சில உதாரணங்களைக் காட்டுக.

3 அண்ணாமலை ரெட்டியார், மகா வைத்தியநாதையர், ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்—இவர்களைப்பற்றி நீவிர் அறிவன யாவை?

4. கம்பளர், பண்கள், சாகித்தியம்—இவற்றை விளக்குக.

4

1. குலசேகரப்பெருமாள், சேரமான்பெருமாள்—இவர்களைப்பற்றி நீவிர் அறிவன யாவை?

2. திருவாங்கூரின் இயற்கை யழகுகளை வருணித்து 10 வரிகள் எழுதுக.

3. பரசுராமர் கேரளநாட்டைப் படைக்கக் காரணம் என்ன?

5

1. 'அன்னமிடுவதே சிவாராதனம்'—சந்தர்ப்பத்துடன் விளக்குக.

2. இந்தப் பாடத்தில் நேர்ந்துள்ள உத்தியோகப் பெயர்களை எடுத்தெழுதி அவை எந்த எந்த மொழிக்கு உரியன என்றும் காட்டுக.

3. கிஸ்தி, ஏலமெடுத்தல், முகாம் இவற்றை விளக்குக.

4. 'அதைவிட மேலான இலாபம் இந்த இராஜாங்கத்துக்கு இல்லை'—சந்தர்ப்பம் கூறுக.

6

1. தேனீக்களின் பிறப்பு வளர்ச்சிகளைப்பற்றி நீவிர் அறிவன யாவை?

2. தேனீக்களின் சமுக வாழ்க்கையைப்பற்றிச் சிறு வியாசமொன்று வரைக.

3. தேனீக்களின் இடப்பெயர்ச்சி எப்பொழுது எவ்வாறு நிகழும்?

4. தேனீக்களின் வகைகளிற் சிலவற்றைக் கூறி அவற்றின் தன்மைகளையும் விளக்குக.

5. தேனீ வளர்ப்பதில் இக்காலத்தில் ஏற்பட்ட முறைகள் யாவை?

7

1. ஹ்யூன்-த்ஸாங் காலத்து நாலந்தா இருந்த நிலைமை யாது?

2. நாலந்தாவில் மாணவர்களின் வாழ்க்கையையும் கல்வியையும் பற்றி நீவிர் அறிவன யாவை?

3. நாலந்தா வாயில்காவலரின் சிறப்பு யாது?

8

1. இப்பாடத்தில் வந்துள்ள சாதுரியச் சொற்களை எடுத்தெழுதி அவற்றில் அமைந்துள்ள சாதுரியங்களை விளக்குக.

2. மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களைப்பற்றி நீங்கள் அறிந்தவற்றைச் சுருக்கி அமைக்க.

3. அங்குத்தி, தேசிகர்—இவற்றிற்குப் பொருள் கூறுக.

9

1. மின்சாரம் தூரங்களைச் சுருக்கியது எங்ஙனம்?

2. இடிதாங்கி கண்டுபிடிக்கப்பட்ட வரலாறு யாது?

3. பாரடே, கெல்வின், பெல் இவர்களால் உலகம் பெற்ற பேறுகள் யாவை?

4. மார்கோனி, கம்பியில்லாத் தந்தியைப் பரப்பச்செய்த முயற்சிகள் யாவை?

5. எக்ஸ்-ரேயின் உபயோகம் என்ன?

10

1. திருக்குறளுக்கு உதாரணங்கூறும் நூல்களிற் சிலவற்றின் பெயர்களைக் கூறுக.

2. குறளாசிரியர் கல்வியைப்பற்றிக் கூறுவன யாவை?

3. 'குழலினிதி யாழினிது' என்ற முறை வைப்பால் பெறப்படுவது யாது?

11

1. பெஸ்கியார் எழுதிய நூல்களின் பெயர்களை எழுதி அவற்றுள் ஒவ்வொன்றின் சுருக்கத்தையும் விளக்குக.

2. பெஸ்கியார் தமிழெழுத்துக்களிற் செய்த மாறுதல்கள் யாவை?

3. பெஸ்கியார் தம் மதத்திற்குச் செய்த தொண்டினைச் சுருக்கி வரைக.

12

1. மக்களின் நாகரிக நிலையின் உயர்வைக் காட்டுவன யாவை?

2. ஔவையாரின் மனோதைரியத்தை விளக்க இரண்டு சந்தர்ப்பங்களைக் காட்டுக.

3. இப்பாடத்தில் சேர்ந்துள்ள பெண்பாலாரான புலவர்களின் பெயர்களை ஓர் அட்டவணையாக்கிக் காட்டுக.

4. மாதங்கி, ஐங்காப்பியம், ஐந்திலக்கணம், சுருதி—குறிப்பெழுதுக.

5. தமிழ்நாட்டார் பெண்பாலாரை மிகப் பெருமைப்படுத்தி வந்தனர் என்பதைக் காட்ட உதாரணங்களுடன் ஒரு கட்டுரை வரைக.

PRINTED IN INDIA AT THE ... PRESS, MADRAS—1937. B 2499

